# கியாமத் நாளின்
## (உலக முடிவு)
# அடையாளங்கள்

*ஆசிரியர்:*

***மௌலவி, இமாமுத்தீன் இப்னு அப்துல் மாலிக்***

*வெளியீடு:*

***பஷாரத் பப்ளிஷர்ஸ்***

*சென்னை - 1.*

*செல்: 98849 51299 / 044-2522 5028*

## நூல் விபரம்


நூலின் பெயர் : **கியாமத் நாளின் அடையாளங்கள்**

ஆசிரியர் : **மௌலவி, இமாமுத்தீன் இப்னு அப்துல் மாலிக்**

முதல் பதிப்பு : பிப்ரவரி, 2019

பக்கங்கள் : 160

பிரிண்டிங் : **பஷாரத் பப்ளிஷர்ஸ்**

விலை : **₹ 100/-**

வெளியீடு:

**பஷாரத் பப்ளிஷர்ஸ்**

82, மூர் தெரு, முதல் தளம், சென்னை - 600 001.

போன்: 044-2522 5028, செல்: 98849 51299

கிடைக்குமிடங்கள்:

**பஷாரத் புக் டிப்போ**

159, அங்கப்பன் தெரு, மூஸா அபார்ட்மென்ட்,

(போஸ்ட் ஆபிஸ் தெரு ஜங்சன்), சென்னை - 600 001.

போன்: 044-2522 5027,

செல்: +91 97899 99256

**மற்றும் அனைத்து இஸ்லாமிய புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்**

# பொருளடக்கம்

# பதிப்புரை

*அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய*
*அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் உரித்தாகுக!*

*யுக முடிவு நாள் நிச்சயமாக வந்தே தீரும். அதில் சந்தேகமே இல்லை. எனினும் மனிதர்களில் பெரும்பாலானவர்கள் இதை நம்புவதில்லை.*

***அல்குர்ஆன் (40:59)***

*பஷாரத் பப்ளிஷர்ஸ் மூலம் தமிழ் மக்களுக்குப் பல பயனுள்ள நூல்களை வெளியிட்டுவருகிறோம். அந்த வகையில் கியாமத் தின் அடையாளங்கள் எனும் இந்நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம். கியாமத் நாளின் அடையாளங்கள் எனும் தலைப்பில் பல நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன. மற்ற நூல் களைவிட இந்நூல் மிகவும் ஆதாரப்பூர்வமாகவும் விளக்கமாகவும் அமைந்துள்ளது.*

*நூலாசிரியர் சிறிய அடையாளங்களையும் பெரிய அடையாளங் களையும் தொடர்ச்சியாக குறிப்பிட்டு, ஒவ்வொன்றையும் விளக்க மாக விவரித்துள்ளார்.*

*இதுவே அவரின் முதல் நூலாகும். அல்லாஹ் அவருடைய முயற்சியை ஏற்று, இன்னும் பல நூல்கள் அவர் மூலமாக வெளி வருவதற்கு வாய்ப்பளிப்பானாக! ஆமீன்.*

***பஷாரத் பப்ளிஷர்ஸ்***
*மண்ணடி, சென்னை - 1.*

# வாழ்த்துரை

إنّ الحمد لله والصّلاة والسلام على خاتم النبيين

''ஆனை வரும் பின்னே மணி ஓசை வரும் முன்னே'' எனும் பழமொழிக்கேற்ப, பல்வேறு நிகழ்வுகள், அவை நடப்பதற்கு முன்பாகவே, அதற்கான பல அடையாளங்கள் வெளிப்படத் துவங்கிவிடுகின்றன.

ஒரு மனிதன் வெற்றியடையப் போகிறான் என்றாலும், தோல்வி யடையப் போகிறான் என்றாலும், அதற்கான பல அடையாளங் கள் அதை முன்பே அவனுக்கு அறிவுறுத்துகின்றன.

அதுபோல், அல்லாஹ் பிரத்யேகமாக தன்னுடைய இல்மில் எத்தனையோ விஷயங்களை மறைத்துவைத்துள்ளான். எனினும், அதற்கான அடையாளங்களை முன்கூட்டியே வெளிப்படுத்தி விடுகின்றான்.

மழை எப்பொழுது வரும் என்று யாருக்கும் தெரியாது. எனினும், அதன் பாதிப்பிலிருந்து மனிதன் தப்பித்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக சில அடையாளங்களை ஏற்படுத்தியுள்ளான். அவற் றின் மூலம் மனிதன் மழையைக் கண்டுகொள்கிறான்.

மரணத்தை இறைவன் மறைத்துவிடுகிறான். எனினும், அதற்கான அடையாளங்களாக வயோதிகம், நரை, தோல் சுருக்கம் மற்றும் நோய்களை ஏற்படுத்தி அதை அறிவுறுத்துகிறான்.

இதுபோல் யுகமுடிவு நாள், மறுமை நாள் உறுதி என்பதே முஸ்லிம்களின் தீர்க்கமான நம்பிக்கை. ஆனால், அது எந்த நொடியில் வரும் என்பது இறைவனிடம் மட்டுமே உள்ள மறைந்த ஞானமாகும்.

சில விநாடிகளில், அல்ல வெறும் ஒரு நொடி அல்லது அதைவிட குறைவான கால அளவில் ஏழு வானங்கள், பூமிகள், அதற்கிடைப் பட்ட கோள்கள், நீர், நிலம், மலைகள், காடுகள், விலங்குகள் என அனைத்தையும் அழித்துக்காட்டுவேன் என அல்லாஹ் தன் திருமறையில் எச்சரிக்கிறான்.

وَمَآ أَمْرُ السَّاعَةِ إِلَّا كَلَمْحِ الْبَصَرِ أَوْ هُوَ أَقْرَبُ (سورة النّحل - ٧٧)

''மறுமையின் நேரம் கண் சிமிட்டும் நேரம் அல்லது அதைவிடக் குறைவானதில் முடிந்துவிடும்'' (16:77)

ஆனால், இவ்வளவு பிரமாண்டமான ஏற்பாடுகள் நொடிப் பொழுதில் அழிக்கப்படும் எனில் அதிலிருந்து தப்பிப்பது எப்படி? அது எந்த நேரத்தில் வரும் என்பதைத்தான் காருண்ய குருநாதர், அருள்வெள்ள நாயகர், மறை கொணர்ந்த மாமனிதர் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் பல அடையாளங்களைக் கூறி எச்சரித்துச் சென்றுள்ளார்கள்.

இன்னும் சொல்லப்போனால், பெருமானார் (ஸல்) அவர்கள், உலக அழிவு நாளின் அடையாளங்களை எவ்வளவு சொல்லிச் சென்றார்களோ அதுபோல் எந்த நபியும் சொல்லிச் செல்ல வில்லை. தாங்களும் மறுமையும் இவ்வளவு நெருக்கம் என தன் இரு விரல்களை பிணைத்துக்காட்டிக் கூறினார்கள்.

இன்றைக்கு அன்னார் எச்சரித்து சென்ற அடையாளங்களில் மிகுதமானவை வெள்ளிடை மலைபோல் வெளிச்சமாகிக்கொண் டுள்ளது. அமானிதம் குறையும், மனிதம் தொலையும், நேர்மை மறையும், கூத்துக்கள் பெருகும், கொலை, கொள்ளை மலியும் என பெரும் பட்டியலிட்டது, இன்று ஒவ்வொன்றாக உண்மையாகிக் கொண்டு வருகிறது.

இன்று இவ்வடையாளங்களைக் கண்டே மனிதம் பதறுகிறது; கொந்தளிக்கிறது; ஓலமிடுகிறது. இன்னும் எத்தனை எத்தனையோ அடையாளங்கள் பரிணமிக்கப் போகிறது. அடையாளங்களே இப்படியெனில் அதன் உண்மை நிலை எப்படியிருக்கும் என்பதை மனித அறிவால் அனுமானிக்க முடியாது.

எனவே, இவைகளைப் பார்த்தாவது மனிதன் மறுமைக்கான தயாரிப்புகளை செய்துகொள்ள வேண்டும் என்பதே இறைவனின் விருப்பம்.

அந்த அடையாளங்களையே பல நூறு ஹதீஸ்கள், ஆயத்துகளிலிருந்து உறிஞ்சி எடுத்து, அதை சேகரம் செய்து, நூல் வடிவில் நமது இளம் இளவல் **மௌலவி இமாமுத்தீன்** அவர்கள் தொகுத்துள்ளார்கள்.

ஒவ்வொரு சாமானியரும் நூலைப் படித்து பயன்பெறும் வகையில் எளிமையாக முறைப்படுத்தியுள்ளது மிகுந்த பாராட்டுக்குரியது.

''அல்லாஹ் அவரின் முதல் பதிப்பாகிய இந்நூலை அங்கீகரித்து இன்னும் பல நூல்கள் படைக்க அருள் புரிவானாக!'' ஆமீன்!

எளிய இஸ்லாமிய ஊழியன்

**முஹம்மது ஜகரிய்யா**

*ஜாமிஆ அல்-உஸ்வத்துல் ஹஸனா ஷரீஅத் கல்லூரி, பள்ளப்பட்டி.*

*14/ரபீஉல் அவ்வல்/1440*



# அணிந்துரை

الحمد لله والصّلاة والسلام على رسول الله وعلى اله وصحبه ومن واراه و بعد

இஸ்லாமியக் கோட்பாடுகளில் முக்கியமானது இவ்வுலகம் ஒருநாள் அழியும்; இவ்வுலகம் நிரந்தரமானதல்ல என்பதாகும். உலகம் அழியும்முன் உலகில் நடக்கவுள்ள முக்கிய நிகழ்வு களைக் குறித்து நபி (ஸல்) அவர்கள் மிகத் தெளிவாக எடுத் துரைத்துள்ளார்கள்.

அவை குழப்பங்கள் என்ற பாடப் பிரிவிலும் கியாம நாளின் அடையாளங்கள் எனும் பாடப் பிரிவிலும் -ஹதீஸ் திரட்டுகளில் காண முடிகிறது.

இப்பாடங்கள் படிப்பது காலத்தின் மிக முக்கியமான கட்டாய மாக இருக்கிறது.

ஏனெனில், பெரும்பெரும் குழப்பங்கள் திடீரென எதிர்பாராத விதமாக தோன்றும்போது அவற்றை எதிர்கொள்ள முடியாமல் மனிதர்கள் தவிக்கும் நிலை ஏற்படும் -மாத்திரமல்ல இறைவிதி யிலேயேகூட சந்தேகம் வரலாம்.

இப்படியெல்லாம் நடக்கும் என்று முன்கூட்டியே தெரிந்துவிடும் போது -மனரீதியாக அதை எதிர்கொள்ளும் பக்குவம் கிடைத்து விடும்.

மேலும் இப்படியெல்லாமா நடக்கும் என்ற இறைவிதியை அங்கலாய்க்காமல்,

هٰذَا مَا وَعَدَنَا اللّٰهُ وَرَسُولُهُ وَصَدَقَ اللّٰهُ وَرَسُولُهُ

இவை அல்லாஹ்வும் தூதரும் வாக்களித்ததே -அல்லாஹ்வும் அவனது தூதரும் உண்மையே உரைத்தனர் என்று இறைநம்பிக்கை யுடையோர் கூறுவர்- அதன்மூலம் அவர்களது நம்பிக்கை மேலும் வலிமை பெறுகிறது.

பொறுமையோடு அதை சகித்துக்கொள்வதால் மகத்தான கூலியும் கிடைக்கிறது. எனவேதான் நபி (ஸல்) அவர்கள் உம்மத்தின்மீது கொண்ட அன்பால் யுகமுடிவுக்குமுன் நடக்கவுள்ள பேரழிவு களைக் குறித்து இச்சமூகத்திற்கு எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

பாசத்திற்குரிய **மௌலவி, இமாமுதீன்** அவர்கள் கியாமத்தின் அடையாளங்கள் எனும் இந்நூலை அழகிய முறையில் தொகுத்து வழங்கியிருக்கிறார். அல்லாஹ் அவரது கல்வியில் பரகத் செய்வானாக! இந்நூலை பயனுள்ளதாக ஆக்குவானாக!

ஆமீன்!

**மௌலானா, ஹபீப் முஹம்மது தாவூதி, நத்வீ**
பேராசிரியர், ஜாமிஆ உஸ்வதுல் ஹஸனா, பள்ளப்பட்டி.



# முன்னுரை

نَحْمَدُه ونُصَلِّ عَلى رَسُوْلِهِ الكَريم

*மனிதன் மரணத்தை மறந்து வாழ்வதுபோல் உலக அழிவு நாளையும் மறந்து வாழ்கிறான். மனிதர்களில் அதிகமானோர் இவ்வுலகம் நிரந்தரமானது என்றே விளங்கிவைத்துள்ளனர். இது தவறான சிந்தனையாகும்.*

*மனிதன் எவ்வாறு இளமை, முதுமை போன்ற பல கட்டங்களை அடைகிறானோ அதுபோல் உலகமும் பல கட்டங்களை நோக்கி நகர்ந்துகொண்டிருக்கிறது. இப்போதைய சூழலில் உலகம் தன் முதுமைப் பருவத்தை அடைந்துள்ளது. எனவே உலகம் ஒரு நாள் அழிவது நிச்சயம்.*

*உடலில் ஏதேனும் ஒரு பெரிய நோய் ஏற்படப்போகிறது என்றால், அதன் விளைவாக சில அறிகுறிகள் தோன்றும். யார் அந்த அறிகுறிகளை அறிந்து, அதற்கான தீவிர சிகிச்சை முறைகளை மேற்கொள்வாரோ அவர் தன் உடலை பாதுகாத்துக்கொள்வார்.*

*யார் தனக்கு வந்த அறிகுறிகளை அலட்சியமாக கண்டுகொள் ளாமல் விட்டுவிடுகிறாரோ, ஒருநாள் அந்த அறிகுறி அவரின் உடலையே அழித்துவிடக்கூடியதாக மாறிவிடும்.*

*அதுபோல் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உலக அழிவின் அறிகுறிகளை நமக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள். அவைகள் நம் காலத்தில் நிதர்சனமாய் நடைபெற்றுக்கொண்டு தான் இருக்கிறது.*

எனவே யார், முன்னறிவிப்புச் செய்யப்பட்ட அந்த அடையாளங்களை அறிந்து, மறுமை நாளை பயந்து, அல்லாஹ்வுடைய மன்னிப்பின் பக்கம் விரைகிறாரோ அவர் ஈடேற்றம் பெற்று விடுகிறார்.

யார் அதை அலட்சியமாக கருதி, வரும்போது பார்க்கலாம் என்று பாவங்களில் ஈடுபடுகிறார்களோ அவர்களுடைய மறுமை வாழ்க்கை நஷ்டமானதாக ஆகிவிடுகிறது.

வருமுன் காப்போம் என்ற அடிப்படையில் உலக அழிவிற்கு முன், நாம் நம் வாழ்க்கையைப் பாதுகாக்க வேண்டும் என்ற நோக்கில் **'கியாமத்தின் அடையாளங்கள்'** என்ற தலைப்பில் இந்நூலை எழுதியுள்ளேன். அல்ஹம்து லில்லாஹ்.

இத்தலைப்பில் ஒரு நூலை எழுத வேண்டும் என்று பஷாரத் நிறுவனத்தார் எனக்கு ஆலோசனை வழங்கினார்கள். நானும் அதை ஏற்று இந்நூலை எழுத ஆரம்பித்தேன். அல்லாஹ்வுடைய பேருதவியால் அதன் பணி முடிவடைந்து இப்போது தங்கள் கரங்களில் அது இடம்பெற்றுள்ளது.

இந்நூலில் கியாமத் நாளின் சிறிய அடையாளங்களையும் பெரிய அடையாளங்களையும் தனித்தனியாக நான் குறிப்பிட்டுள்ளேன். சிறிய அடையாளங்களின் எண்ணிக்கை ஒவ்வொரு நூல்களிலும் மாறுபடலாம். காரணம், அதற்கான வரையறை நபிமொழிகளில் கூறப்படவில்லை. எனவே ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மட்டும் நான் தொகுத்துள்ளேன்.

அதுபோல் சில ஹதீஸ்களின் கீழ் அந்த ஹதீஸ் குறித்த மார்க்க அறிஞர்களின் நிலைப்பாட்டையும் நான் குறிப்பிட்டுள்ளேன். மேலும் எதில் தவறான கருத்துக்களும் பலவீனமான செய்திகளும் கூறப்பட்டுள்ளதோ அதையும் நான் சுட்டிக்காட்டியுள்ளேன். ஹதீஸ்களை அவற்றின் ஆதார எண்களோடு குறிப்பிட்டுள்ளேன். அனைத்து தரப்பட்ட மக்களும் படிக்கும் நோக்கில் இந்நூலை நான் எழுதியுள்ளேன்.

இந்நூலை பல வேலைகளுக்கு மத்தியில் சரிபார்த்து, தவறுகளை சுட்டிக்காட்டி, பல ஆலோசனைகள் வழங்கிய மௌலானா ஹைதர் அலீ இம்தாதி அவர்களுக்கும், அணிந்துரை வழங்கி இந்நூலுக்கு அடித்தளமாக அமைந்த கண்ணியத்திற்குரிய என் ஆசிரியப் பெருந்தகை ஹபீப் முஹம்மது தாவூதி, நத்வீ ஹள்ரத் அவர்களுக்கும், வாழ்த்துரை வழங்கிய மதிப்பிற்குரிய என் ஆசிரியர் முஹம்மது ஜகரிய்யா ஹசனீ ஹள்ரத் அவர்களுக்கும் பஷாரத் நிறுவனத்திற்கும் இன்னும் இந்நூல் வெளிவர உதவிய நல்லுள்ளங்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வயதாலும், அனுபவத்தாலும் குறைந்த நான், என் சிறு முயற்சி யால் இந்நூலை எழுதியுள்ளேன். இதுவே என் முதல் முயற்சி யாகும். எனவே, இதில் பிழைகள், குறைகள் தென்படலாம். அல்லாஹ்விற்காக தவறுகளை எனக்குச் சுட்டிக்காட்டுமாறு வாசகர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

அல்லாஹ் நம் அனைவருக்கும் நம் லட்சியப் பயணத்தை இலகுவாக்கி வைப்பானாக! ஆமீன்.

*அல்லாஹ்வின் அடிமை*

**இமாமுத்தீன் ஹசனீ**

*மங்களக்குடி*

*தொடர்புக்கு: 99425 37661*



# உலகம் அழியக்கூடியதே

ஆரம்பம் என்று ஒன்று இருந்தால் அதற்கு கண்டிப்பாக முடிவு என்று ஒன்று இருக்கும். ஒவ்வொரு மனிதனுடைய முடிவும் மரணம் என்றால் முழு உலகத்துடைய முடிவு கியாமத் ஆகும்.

எவ்வாறு அனைத்து மக்களும் எவ்வித கருத்துமாறுபாடின்றி தனக்கு மரணம் கட்டாயம் நிகழும் என்பதை ஏற்றுக் கொண்டுள் ளார்களோ அதேப் போன்று முழுப்பிரபஞ்சத்திற்கும் ஒரு நாள் மரணம் ஏற்படும் என்பதையும் அவர்கள் ஒத்துக் கொள்ள வேண்டும். இதை ஏற்பது தான் உண்மையான பகுத்தறிவு. இன்னும் சொல்லப் போனால் இதுவே இயற்கை நியதியும்கூட.

எனவே உலகம் ஒரு நாள் கண்டிப்பாக அழியும். இதுவே அல்லாஹ் ஏற்படுத்தி வைத்திருக்கின்ற விதியும், அவனுடைய வாக்குறுதியுமாகும் என்பதை முஸ்லிம்கள் நம்பியாக வேண்டும்.

ஆனால் இந்த உண்மையை இன்று சிலர் நம்பாமலும், பலர் இந்த விஷயத்தில் சந்தேகத்திலும் இருக்கிறார்கள்.

அது எப்படி பல்லாயிரம் ஆண்டுகளாக இயங்கி வரும் இந்த உலகம் அழியும்? இறந்து போய் மண்ணோடு மண்ணாய் மக்கிப் போன பிறகு எப்படி மீண்டும் எழுப்பப்பட முடியும்? போன்ற ஐயத்திலும் மக்கள் இன்று இருக்கிறார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் வாழ்ந்த மக்கா காஃபிர்களுக்கும் இதேபோன்று மறுமை நாளைப் பற்றிய நம்பிக்கை இல்லாமலிருந்தது.

அதோடுமட்டுமின்றி அவர்கள் மறுமை நாளைப் பற்றி பரிகாசமும் செய்தனர்.

இதற்கு அல்லாஹுதஆலா தன் திருமறையில் அவர்களின் கேள்விகளுக்கு வாயடைக்கும் படியான பதிலையும், மீண்டும் உயிர்கொடுத்து எழுப்புதல் என்பது நமக்கு மிக சாதாரணமானது என்பதையும் தெளிவாக குறிப்பிடுகிறான்.

***‘‘கியாமத் நாள் எங்களிடம் வராது’’ என்று (இந்)நிராகரிப்பாளர்கள் கூறுகின்றனர். (நபியே) கூறுவீராக, ‘‘ஏன் வராது. மறைவானவை அனைத்தையும் அறிந்தவனான என் இறைவன்மீது சத்தியம். கண்டிப்பாக அது உங்களிடம் வந்தே தீரும்.’’***

*அல்குர்ஆன் (34:3)*

***‘‘நிச்சயமாக அல்லாஹ்வுடைய வாக்குறுதி உண்மையானது. கியாமத் நாள் வருவதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை’’ என்று (உங்களிடம்) கூறப்பட்டால், ‘‘கியாமத் நாள் என்னவென்றே எங்களுக்குத் தெரியாது. அது (கற்பனையான) வெறும் எண்ணத்தைத் தவிர வேறில்லை என்றே எண்ணுகிறோம். அதை (உண்மையென்று) நாங்கள் நம்பவுமில்லை’’ என்று நீங்கள் கூறினீர்கள். (அல்லவா?) என்று (அவர்களிடம்) கேட்கப்படும்.***

*அல்குர்ஆன் (45:32)*

***மேலும், ‘‘இவ்வுலகத்தில் நாம் வாழ்வதைத் தவிர (நாம் இறந்த பின் நமக்கு வேறு வாழ்க்கை) இல்லை. ஆகவே (இறந்தபின்) நாம் உயிர்ப்பிக்கப்படமாட்டோம்’’ என்று அவர்கள் கூறுகின்றனர். (இவ்வாறு கூறும்) அவர்கள் (உயிர்ப்பிக்கப்பட்டு) தங்கள் இறைவனுக்கு முன் நிறுத்தப்படும் பொழுது (நபியே! நீர் அவர்களைக்) காண்பீராயின்! (அது சமயம் இறைவன் அவர்களை நோக்கி, ‘‘விசாரணை நாளாகிய) இது உண்மையல்லவா?’’ என்று கேட்பான். (அதற்கு) அவர்கள் ‘‘எங்கள் இறைவனே! உண்மைதான்’’ எனக் கூறுவார்கள். (அதற்கு) அவன் ‘‘(இதை) நீங்கள் நிராகரித்துக் கொண்டிருந்ததன் காரணமாக (நரகத்தின்) வேதனையை நீங்கள் சுவைத்துக் கொண்டிருங்கள்’’ என்று கூறுவான்.***

*அல்குர்ஆன் (6:29,30)*

***அவன்தான் படைப்புகளை ஆரம்பத்தில் உற்பத்தி செய்பவன். அவனே (அவை மரணித்த பின்னரும் உயிர் கொடுத்து) அவற்றை மீளவைக்கிறவன். இது அவனுக்கு மிக்க எளிதானதாகும்.***

***அல்குர்ஆன் (30:27)***

**அந்த நாள் கண்டிப்பாக நிகழும்:**

*அல்லாஹுதஆலா மக்கா காஃபிர்களின் (இறைநிராகரிப்பாளர் களின்) இருமாப்பிற்கும். பரிகாசத்திற்கும் முற்றுப்புள்ளி வைத்து விட்டு கியாமத் நாள் கட்டாயம் ஏற்படும் என்பதை வலுப்படுத் தும் விதமாக அல்லாஹு தஆலா அந்த நாளின்மீதே சத்தியமிட்டு கூறுகிறான்.*

***மறுமை நாளின் மீது நான் சத்தியம் செய்கிறேன்.***

***அல்குர்ஆன் (75:1)***

*அந்நாள் பற்றி யாருக்கும் எள்ளளவும் சந்தேகம் வந்துவிடக் கூடாது என்பதற்காக அல்லாஹுதஆலா அந்நாளுக்கு கியாமத் என்றே பெயர் வைத்துள்ளான்.*

*கியாமத் என்ற அரபு சொல்லிற்கு நிகழக்கூடியது, நடக்கப் போகிறது என்று பொருள்.*

*எனவேதான் அல்லாஹ் குர்ஆனின் பல இடங்களில் அந்நாளை உறுதிப்படுத்தியே கூறுகிறான்.*

***அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் அறவே இல்லை. அவன் நிச்சயமாக உங்கள் அனைவரையும் மறுமை நாளில் ஒன்று சேர்ப்பான் இதில் சந்தேகமேயில்லை. அல்லாஹ்வைவிட உண்மை சொல்பவர் யார்?***

***அல்குர்ஆன் (4:87)***

***யுக முடிவு நாள் நிச்சயமாக வந்தே தீரும். அதில் சந்தேகமே இல்லை. எனினும் மனிதர்களில் பெரும்பாலானவர்கள் இதை நம்புவதில்லை.***

***அல்குர்ஆன் (40:59)***

இப்படி படைத்த இறைவனே படைப்பின் அழிவைப்பற்றி ஆணித்தரமாகவும் அழுத்தமாகவும் கூறும்போது யாராலும் அதை மறுக்கவே முடியாது. எனவே முஸ்லிம்கள் அனைவரும் கியாமத் நாள் ஏற்படும் என்பதை நம்பிக்கை கொள்ள வேண்டும். முஸ்லிம்கள் கட்டாயம் நம்பிக்கை கொள்ள வேண்டிய ஆறு விஷயங்களில் இதுவும் ஒன்றாகும்.

உண்மையான முஸ்லிம்கள் அழியக்கூடிய இந்த உலக வாழ்க்கையை வெறுத்து நிலையான, நிரந்தரமான மறுமை வாழ்க்கைக்காக தயாரிப்பு செய்வார்கள்.

## மறுமை நாள் எப்போது வரும்?

அந்த நாள் எப்போது வரும்? எந்த நேரத்தில் வரும்? என்பதை படைத்த இறைவனைத் தவிர வேறு யாராலும் அறிய முடியாது. இன்று பல விஞ்ஞானிகள்? இந்த வருடத்தில் உலகம் அழிந்து விடும் என்று உலக அழிவிற்கு கால நிர்ணயம் செய்கிறார்கள். ஆனால் அவைகள் அனைத்தும் தோல்வியில்தான் சென்று முடிகின்றன.

அந்நாளைப் பற்றிய அறிவு அகிலங்களின் அதிபதியான அல்லாஹ்விடம் மட்டுமே இருக்கிறது. அவனே மறைவான விஷயங்கள் அனைத்திற்கும் சொந்தக்காரனாக இருக்கிறான்.

***வானங்கள், பூமி இன்னும் அவற்றுக்கு மத்தியிலுள்ளவற்றின் ஆட்சி (ரஹ்மானாகிய) அவனுக்குரியதே. அவன் பெரும் பாக்கியம் உடையவன். அவனிடத்தில் தான் மறுமையின் ஞானம் இருக்கிறது. அவனிடமே நீங்கள் திரும்பக் கொண்டு போகப்படுவீர்கள்.***

***அல்குர்ஆன் (43:85)***

கியாமத் நாள் வருவதற்கு இன்னும் எத்தனையோ நாட்கள் இருக்கிறது. இப்போது ஏன் அதைப்பற்றி பேச வேண்டும்? என்று நம்மில் யாரும் கருதிவிடக் கூடாது. காரணம் அந்நாள் மிக சமீபத்திலேயே இருக்கின்றது. கண்சிமிட்டும் நேரத்தில் திடீரென்று அந்நாள் நிகழ்ந்துவிடும்.

***வானங்களிலும், பூமியிலும் உள்ள ரகசியம் அல்லாஹ்வுக்கே சொந்தம். உலக முடிவு இமை மூடி விழிப்பதைப் போல் அல்லது அதை விட விரைவாகவே முடிந்துவிடும். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக ஆற்றலுடையவன் ஆவான்.***

*அல்குர்ஆன் (16:77)*

***நிச்சயமாக அவர்கள் அதைத் தொலைவாகக் காண்கின்றனர். நாமோ அருகில் உள்ளதாகக் காண்கிறோம்.***

*அல்குர்ஆன் (70:6,7)*

***(நபியே) அந்த நேரம் பற்றி அது எப்போது ஏற்படும்? என உம்மிடம் கேட்கின்றனர். அது பற்றிய விளக்கம் உம்மிடம் எங்கே இருக்கின்றது? அதன் முடிவு உமது இறைவனிடமே உள்ளது. அதை அஞ்சுவோருக்கு நீர் எச்சரிப்பவரே. அதை அவர்கள் காணும் போது ஒரு மாலையோ அல்லது காலையோ தவிர வாழவில்லை என்பது போல் அவர்களுக்குத் தோன்றும்.***

*அல்குர்ஆன் (79:42,46)*

*ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து மறுமை நாள் எப்போது வரும்? என்று கேட்டதற்கு நபி (ஸல்) அவர்கள், கேட்ட உம்மை விட கேட்கப்பட்ட நான் மிக அறிந்தவன் இல்லை என்று பதிலளித்தார்கள்.*

*அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரி (50)*

*மர்மங்கள் நிறைந்த மறுமை நாளைப் பற்றிய அறிவை அல்லாஹ் தன் நபிக்கு கூட வழங்கவில்லை. அதை தன்னுடைய இல்மோடு (ஞானத்தோடு) மட்டும் போதுமாக்கிக் கொண்டுள்ளான் என்பதை மேற்கூறிய சான்றுகளின் மூலம் நாம் விளங்கிக் கொள்ளலாம்.*

*என்றாலும்கூட கியாமத் நாள் நெருங்கிவிட்டது என்பதற்குண்டானே சில அறிகுறிகளையும் அடையாளங்களையும் அல்லாஹ் தன் நபிக்கு அறிவித்துக் கொடுத்துள்ளான். அதில் சிறிய அடையாளங் களும் இருக்கின்றன. பெரிய அடையாளங்களும் இருக்கின்றன.*

அந்த அடையாளங்களை வைத்து கியாமத் நாள் நெருங்கிவிட்டது என்பதை நாம் அறிந்துகொள்ளலாம்.

## அடையாளங்களின் பின்னணி என்ன?

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கியாமத் நாளின் அடையாளங்களை இந்த உம்மத்திற்கு ஏன் குறிப்பிட்டார்கள்? என்ற கேள்விக்கு உலமாக்கள் (மார்க்க அறிஞர்கள்) சில காரணங்களை கூறுகின்றார்கள்.

1. நாம் அந்த நாளை எதிர்கொள்ள ஆயத்தமாக வேண்டும் என்பதற்காக.

2. முன்கூட்டியே சொல்லப்பட்டதால் அந்த நாள் நடக்கும் போது பெரிதாக பதற்றம் ஏற்படாது. இது அவர்களின் ஈமானை இன்னும் அதிகப்படுத்துமே தவிர குறைக்காது.

3. பொதுவாக எதிர்கால விஷயங்களைப் பற்றி அறிய ஒவ்வொருவருக்கும் ஆசை இருக்கும். இதனால் பலர் குறிசொல்பவனிடமும் ஜோசியக்காரனிடமும் சென்று எதிர்கால விஷயங்களை வேண்டுவார்கள். இதுபோன்ற இணைவைப்பின் வாசலை அடைப்பதற்காக வேண்டி அல்லாஹ்வின் தூதரே (ஸல்) அந்த நாளின் அடையாளங்களைப் பட்டியலிட்டுள்ளார்கள்.

4. இந்த அடையாளங்களைப் பார்ப்பதின் மூலம் மனிதன் தன் வாழ்க்கையை சீர்படுத்தி உலக ஆசையிலிருந்து விலகி தான் செய்த பாவங்களுக்கு தவ்பா செய்து கொள்ள வேண்டும். காரணம் பெரிய அடையாளங்களில் ஒன்றான சூரியன் மேற்கிலிருந்து உதித்துவிட்டால் தவ்பாவின் வாசல் அடைக்கப்பட்டுவிடும். இனி அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டாலும் எந்தப் பயனும் இருக்காது. எனவே அதற்கு முன்பே தன்னை மாற்றிக்கொள்ள வேண்டும் என்பதற்காக அடையாளங்களை சொல்லியிருக்கலாம்.

உண்மையான காரணத்தை அல்லாஹ்வே நன்கறிந்தவன்.

## சிறிய அடையாளங்கள்

*இந்த சிறிய அடையாளங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்:*

*1. நடந்து முடிந்த அடையாளங்கள்.*

*2. நடந்து கொண்டிருக்கும் அடையாளங்கள்.*

*3. இனி நடக்கப்போகும் அடையாளங்கள்.*

*இதில் முதலாவதாக,*

## I. நடந்து முடிந்த அடையாளங்கள்:

*சிறிய அடையாளங்களில் சிலவை முன்பே நடந்துவிட்டது என்பதை அல்லாஹ்வும் தன் திருமறையின் மூலம் நமக்கு சுட்டிக் காட்டுகிறான்.*

***கியாமத்து நாள் திடீரென தம்மிடம் வருவதைத் தவிர (வேறெ தனையும்) அவர்கள் எதிர்ப்பார்க்கிறார்களா? அதன் அடையாளங் கள் நிச்சயமாக வந்துவிட்டன. அது அவர்களிடம் வந்த பின்னர் அதைப்பற்றி அவர்கள் நல்லுணர்வு பெறுவதால் என்ன பயன்?***

***அல்குர்ஆன் (47:18)***

## 1.நபிகள் நாயகத்தின் வருகை

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் ஆட்காட்டி விரலையும் நடு விரலையும் இணைத்துக்காட்டி நானும் யுக முடிவு நாளும் இவ்விரு விரல்களைப் போன்று அனுப்பப்பட்டுள்ளோம் என்று கூறினார்கள்.*

***அறிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: முஸ்லிம் (5654)***

*இந்த ஹதீஸின் பொருளுக்கு இரண்டு விதமான விளக்கங்கள் கூறப்படுகின்றன.*

1.ஆட்காட்டி விரலுக்கும், நடுவிரலுக்கும் இடையே உள்ள இடைவெளி மிக நெருக்கமானது. அப்படிப் பார்த்தால் நபியின் வருகைக்குப் பிறகே உலகம் அழிக்கப்பட்டிருக்க வேண்டுமே. ஆனால், இத்தனை வருடங்களாக உலகம் இயங்கிக் கொண்டு தானே இருக்கிறது? என்று நம்முடைய கணக்கின்படி நமக்கு சந்தேகம் எழலாம்.

ஆனால் அல்லாஹ்வின் கணக்கின் படி இத்தனை ஆண்டுகள் இடைவெளி என்பது மிகச் சொற்பமானதுதான். காரணம். அல்லாஹ்விடத்தில் ஒரு நாள் என்பது நாம் கணக்கிடுகின்ற ஆயிரம் ஆண்டுகளுக்கு சமமானதாகும்.

2. உலகம் தோன்றியதிலிருந்து நபியின் வருகைக்கு மத்தியில் உள்ள இடைவெளியையும், நபியின் வருகைக்குப் பிறகு உலகம் அழிக்கப்படுவதற்கு மத்தியில் உள்ள இடைவெளியையும் ஒப்பிட்டால் முதல் இடைவெளியைவிட இரண்டாவது இடை வெளி மிக சொற்பமானதுதான். எனவே இந்த அடிப்படையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தனக்கும் கியாமத்திற்குமிடையே உள்ள இடைவெளி இரண்டு விரல்களுக்கு மத்தியில் உள்ள இடைவெளியைப் போன்று மிக நெருக்கமானது தான் என்பதை விளக்க இப்படி உதாரணம் கூறியுள்ளார்கள்.

## 2. நபிகள் நாயகத்தின் மரணம்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தபூக் போரின் போது அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் சொன்னார்கள்.

இறுதி நாள் வருவதற்கு முன்பு (அதற்குரிய) ஆறு அடையாளங்கள் நிகழும். அவற்றை எண்ணிக் கொள் என்று சொல்லிவிட்டு முதலாவது அடையாளமாக தன்னுடைய மரணத்தைச் சொன் னார்கள்.

**அறிவிப்பவர்: அவ்ஃப் பின் மாலிக் (ரலி)**
**நூல்: புகாரி (3176) சுருக்கம்**

நபிகள் நாயகத்தின் பிறப்பு, அவர்களின் மரணம் இரண்டுமே கியாமத் நாளின் அடையாளங்களாக கூறப்பட்டுள்ளது. இந்த இரண்டு அடையாளங்களும் நடந்து முடிந்துவிட்டன. எனவே உலக அழிவு நாள் மிக சமீபத்திலேயே இருக்கின்றது.

## 3. நபித்தோழர்களின் மரணம்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நட்சத்திரங்கள் வானத்திற்குப் பாதுகாப்பாகும். நட்சத்திரங்கள் போய்விட்டால் வானத்திற்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும். நான் என் தோழர்களுக்குப் பாதுகாப்பு ஆவேன். நான் போய் விட்டால் என் தோழர்களுக்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும். என் தோழர்கள் என் சமுதாயத்துக்குப் பாதுகாப்பு ஆவார்கள். என் தோழர்கள் போய்விட்டால் என் சமுதாயத்தாருக்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும்.

**அறிவிப்பவர்: அபூமூசா அல் அஷ்அரீ (ரலி)**
**நூல்: முஸ்லிம் (4953)**

அதாவது விண்மீன்கள் இருக்கும் காலமெல்லாம் விண்ணும் இருக்கும். மறுமை நாளில் விண்மீன்கள் உடைந்து உதிர்ந்து விடும்போது விண்ணும் அழிந்துபோகும். அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் இருக்கும் வரை நபித்தோழர்களுக்குப் பாது காப்பு. நபியவர்கள் மறைந்துவிட்டால், அவர்களுக்கு எச்சரிக் கப்பட்டுள்ள குழப்பங்கள், போர்கள், மதமாற்றங்கள் ஆகிய அனைத்தும் நடக்கும். நபித்தோழர்கள் இருக்கும் வரை இஸ் லாமிய சமுதாயத்துக்கு ஒருவித பாதுகாப்பு உண்டு.

நபித்தோழர்கள் மறைந்துவிட்டால், இச்சமுதாயத்துக்கு எச்ச ரிக்கை செய்யப்பட்டுள்ள நவீன அனுஷ்டானங்கள், அனாச்சாரங் கள், எதிரிகளின் வெற்றி ஆகிய அனைத்துப் பின்னடைவுகளை யும் இச்சமுதாயம் சந்திக்கும். அப்படிதான் நடந்தது. நடந்து கொண்டும் இருக்கிறது என்று இந்த ஹதீஸிற்கு விளக்கம் கூறப் பட்டுள்ளது.

**(நூல்: அல்மின்ஹாஜ்)**

## 4. சந்திரனின் பிளவு

*இந்த அடையாளம் நடந்துவிட்டது என்பதை அல்லாஹ்வும் தன் திருமறையில் சுட்டிக்காட்டுகிறான்.*

***அந்த நேரம் நெருங்கிவிட்டது (அதற்கு அத்தாட்சியாக) சந்திரனும் பிளந்துவிட்டது.***

***அல்குர்ஆன் (54:1)***

*இந்த நிகழ்வு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மக்கா வாழ்க்கையில் நடந்தது. மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்வதற்கு ஐந்தாண்டுகளுக்கு முன் இச்சம்பவம் நடந்தது. என்ன காரணத்தினால் இந்நிகழ்வு நடந்தது? என்பதை பின்வரும் ஹதீஸ் நமக்கு விளக்குகிறது.*

*மக்காவாசிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஓர் அற்புதச் சான்றைக் காட்டும்படி கேட்டார்கள். ஆகவே சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளப்பதை (தாம் இறைவனின் தூதர் என்பதற்குச் சான்றாக) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காட்டினார்கள்.*

***அறிவிப்பவர்: அனஸ் பின் மாலிக் (ரலி) நூல்: முஸ்லிம் (5398)***

*அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:*

*(ஒரு முறை) நாங்கள் (மக்காவிலுள்ள) 'மினா' எனுமிடத்தில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. (பிளவுண்ட சந்திரனின்) ஒரு துண்டு (ஹிரா) மலைக்கு அப்பாலும் மற்றொரு துண்டு மலைக்குக் கீழேயும் சென்றது. அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் ''(நான் இறைவனின் தூதர் என்பதற்கு) நீங்கள் சாட்சிகளாக இருங்கள்'' என்று சொன்னார்கள்.*

***நூல்: முஸ்லிம் (5396)***

*இந்தச் சம்பவம் இஸ்லாமிய வரலாற்றில் ஓர் அற்புத நிகழ்ச்சியாகும். அதேப் போன்று முஹம்மது (ஸல்) அவர்கள் ஓர்*

இறைத்தூதர் என்பதற்கு வலுவான சான்றாகவும் இந்நிகழ்ச்சி அமைந்துள்ளது. மேலும் நடந்துவிட்ட அடையாளங்களில் ஒன் றாகவும் இது இருக்கிறது.

## 5. நபித்தோழர்களுக்கு மத்தியில் ஏற்பட்ட கருத்து மோதல்கள்

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

இரண்டு பெருங்குழுவினர் ஒருவருக்கொருவர் போரிட்டுக் கொள்ளாத வரை யுகமுடிவு நாள் வராது. அவ்விரு குழுக் களிடையே கடுமையான யுத்தம் நடக்கும். ஆனால் அவ்விரு குழுவினரும் முன்வைக்கும் வாதம் ஒன்றாகவே இருக்கும்.

***அறிவிப்பவர்: ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்)***
***நூல்: முஸ்லிம் (5536)***

*இது கலீஃபா அலீ (ரலி) அவர்களுக்கும் அமீர் முஆவியா (ரலி) அவர்களுக்கும் இடையே ஸிஃப்பீன் எனுமிடத்தில் நடந்த பெரும் சண்டையை குறிக்கிறது என்று விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. ஸிஃப்பீன் என்பது சிரியா நாட்டின் எல்லையில் யூப்ரடீஸ் நதியின் வடக்குக் கரையில் அமைந்துள்ள ஓர் இடத்தின் பெயராகும்.*

*ஹிஜ்ரீ 36ல் (கி.பி. 657) நடந்த இந்தச் சண்டையில் கலந்து கொண்ட இரு குழுவினருமே ''நாங்கள் தான் சத்தியத்திற்காகப் போராடுகிறோம்'' எனும் ஒரே வாதத்தையே முன்வைத்தனர். இந்த சண்டைக்கான முழுப் பின்னணி உஸ்மான் (ரலி) அவர்கள் கொலை செய்யப்பட்டதை மையமாக வைத்து உருவானதாகும். இதுவும் நடந்து முடிந்த அடையாளங்களில் ஒன்றாக அமைந் துள்ளது. இருப்பினும் ''நாங்கள் தான் உண்மையாளர்கள்'' என்று சொல்லி போரிட்டுக்கொள்ளும் எந்த இரு குழுவினருக்கும் இது பொருந்தும் என்றும் விளக்கம் தரப்பட்டுள்ளது.*

## 6. பைத்துல் முகத்தஸ் வெற்றிக் கொள்ளப்படுவது

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவ்ஃப் பின் மாலிக் (ரலி) அவர்களிடம், (இறுதி நாள் வருவதற்கு முன்பு (அதற்குரிய)*

ஆறு அடையாளங்கள் நிகழும். அவற்றை நீ எண்ணிக் கொள் என்று சொன்னார்கள். அதில் ஒன்று தான் பைத்துல் முகத்தஸ் வெற்றிக்கொள்ளப்படும் என்ற ஒரு முன்னறிவிப்பாகும்.

**நூல்: புகாரி (3176)**

இஸ்லாமிய வரலாற்றில் இந்த பைத்துல் முகத்தஸ் இரண்டு முறை வெற்றிக் கொள்ளப்பட்டுள்ளது.

1. உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் ஹிஜ்ரீ 16ல் (கி.பி.637) பைத்துல் முகத்தஸ் முதலாவதாக வெற்றிக் கொள்ளப்பட்டது.

2. இரண்டாவது முறையாக ஸலாஹுத்தின் அய்யூபி (ரஹ்) அவர்களின் மூலம் ஹிஜ்ரீ 583ல் (கி.பி.1187) வெற்றிக் கொள்ளப் பட்டது. இனி கியாமத் நாளின் நெருக்கத்தில் முஸ்லிம் சமுதாயத்தினரின் மூலம் பைத்துல் முகத்தஸ் நிரந்தரமாக வெற்றிக் கொள்ளப்படும்.

## 7. துருக்கியர்களுடன் மாபெரும் யுத்தம்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (சிறிய கண்களும் சிவந்த முகங்களும் சப்பையான மூக்குகளும் உள்ள துருக்கியர்களுடன் நீங்கள் போர் புரியாத வரை யுக முடிவு நாள் ஏற்படாது. அவர்களின் முகங்கள் தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்று இருக்கும். முடியாலான காலணிகளை அணிந்திருக்கும் ஒரு சமுதாயத்தாருடன் நீங்கள் போர் புரியாத வரை யுக முடிவு நாள் ஏற்படாது.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி); நூல்: புகாரி (2928)**

இந்த ஹதீஸில் கூறப்பட்டுள்ள துருக்கியர்கள் யார்? என்பதற்கு இரண்டு விதமான விளக்கங்கள் தரப்பட்டுள்ளது.

1. இந்த அடையாளங்கள் அனைத்தும் நபித்தோழர்களின் காலத்திற்குப் பிறகு வந்த மங்கோலிய நாட்டைச் சேர்ந்த தாத்தாரியர்கள் என்ற கூட்டத்தினரைத்தான் குறிக்கிறது என்று சிலர்

கூறுகிறார்கள். இவர்கள் ஹிஜ்ரீ 652 ல் உச்சக்கட்ட குழப்பம் செய்தார்கள். மிகப்பெரிய அளவில் உடலிலும் பொருளிலும் சேதம் ஏற்படுத்தினார்கள். அந்த சமயத்தில் தான் அப்பாசியாக் களின் கடைசி கலீஃபா முஃதஸிம் என்பவர் ஷஹீதாக்கப்பட்டார். இந்தக் காலக்கட்டத்தில் நடந்த அனைத்து குழப்பங்களையும் தான் கண்கூடாக பார்த்ததாக இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். இந்த முதல் கருத்தின் படி இது நடந்து முடிந்த அடையாளங்களில் ஒன்றாக இது அமைந்துவிடும்.

2. இரண்டாவது கருத்து இவர்கள் வசிக்கும் பகுதி கடுமையான பனிப்பிரதேசமாக இருப்பதால் காலணி உட்பட அவர்கள் அணியும் எல்லா ஆடை அணிகலன்களும் முடியால் அல்லது முடி நிறைந்த தோலால் ஆனவையாக இருக்கும்.

இந்தத் தன்மைகள் யாரைக் குறிக்கின்றன என்பதில் கருத்து வேறுபாடு இருந்தாலும் இமாம் புகாரீ (ரஹ்) அவர்களின் கருத்து துருக்கியர்களையே இவை குறிக்கின்றன என்பதாகும். எனவே தான் இந்த ஹதீஸிற்கு இமாம் அவர்கள் ''துருக்கியர்களுடன் போர் புரிதல்'' என்று பாடத்தலைப்பையும் அமைத்துள்ளார்கள்.

துருக்கியர் என்றால் இன்றிருக்கும் துருக்கி நாட்டைச் சேர்ந்த வர்களாகத்தான் இருக்க வேண்டும் என்பதல்ல. ஏனென்றால் இன்றைய துருக்கிக் குடியரசு 'முஸ்தபா கமால் அத்தா துர்க்' என்பவரால் 1923ஆம் ஆண்டில் தான் உருவாக்கப்பட்டது. மாறாக இந்த ஹதீஸில் இடம்பெற்றுள்ள தன்மைகள் கொண்ட ஓர் இனத் திற்குப் பெயரே 'துருக்கியர்' என்பது தான். இவர்கள் அன்று 'துருக்கியர்' என அழைக்கப்பட்டதால் இப்பெயரால் அவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

மத்திய ஆசியாவில் ஸைபீரியா, ஈரான், ஆப்கானிஸ்தான், இந்தியா மற்றும் மங்கோலியா ஆகிய நாடுகளுக்கிடையே 'துர்கிஸ்தான்' என்றொரு பகுதி இருந்தது. இங்கு ஹிஜ்ரீ 2ஆம் நூற்றாண்டில் முஸ்லிம்கள் குடியேறியுள்ளனர். இப்போது இந்தப் பகுதி

சீனாவிலும் (ஸிஞ்சியாங்) ரஷியாவிலும் (துர்க்மேனிஸ்தான்) பிரிந்து போய்விட்டது.

இப்பிராந்தியம் கடுங்குளிர்ப் பிரதேசம் மட்டுமின்றி, இப்பகுதி மக்கள் சிறிய கண், சிவந்த முகம், சப்பை மூக்கு ஆகிய அடையாளங்கள் கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள். எனவே இது இன்றைய சீனா மற்றும் ரஷிய நாடுகளைக் குறிக்கிறது என்று விளக்கம் தரப்பட்டுள்ளது. இந்த இரண்டாவது கருத்தின்படி இனி நடக்கவிருக்கும் அடையாளங்களில் இது சேர்ந்துவிடும்.

## 8. ஹிஜாஸ் பகுதியில் பயங்கர தீ விபத்து

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*ஹிஜாஸ் பகுதியிலிருந்து ஒரு நெருப்பு கிளம்பி (ஷாம் நாட்டிலுள்ள) ‘புஸ்ரா’ (ஹவ்ரான்) எனும் ஊரிலுள்ள ஒட்டகங்களின் பிடரிகளை ஒளிரச் செய்யாத வரை யுக முடிவு நாள் வராது.*

***அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (5561)***

இந்த ஹதீஸில் முன்னறிவிப்புச் செய்யப்பட்டுள்ள பயங்கர தீ விபத்து ஹிஜ்ரீ 654ஆம் ஆண்டு ஜுமாதல் உக்ரா திங்களில் நடந்துவிட்டது என்று சிலர் விளக்கமளித்துள்ளனர். ஹிஜாஸ் பகுதியிலுள்ள மதீனா நகரில் ஏற்பட்ட இந்தத் தீ விபத்துக்கு முன்னால் பெரிய நிலநடுக்கம் ஏற்பட்டது. மூன்று நாட்கள் நீடித்த இந்த நிலநடுக்கத்திற்குப் பின்னால் ‘அல்ஹர்ரா’ எனும் இடத்தில் பெரும் தீ தோன்றி, கோபுரங்களின் உயரத்திற்குக் கொழுந்துவிட்டு எரிந்தது. எரிமலை வெடித்துச் சிதறி பல மைல்கள் தூரத்திற்கு ஓடியது. இது ஷாம் (சிரியா) நாட்டின் ‘புஸ்ரா’ எனும் நகர எல்லை வரை தெரிந்தது என்பதாக வரலாற்று நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**நூல்: ஃபத்ஹுல் பாரீ**

# II. நிகழ்ந்து கொண்டிருக்கும் அடையாளங்கள்

## 9. காலம் சுருங்குதல்

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*காலம் சுருங்கும் வரை அந்த நாள் ஏற்படாது. (இன்றைய) ஒரு வருடம் (அன்று) ஒரு மாதம் போன்றும், ஒரு மாதம் ஒரு வாரம் போன்றும், ஒரு வாரம் ஒரு நாள் போன்றும், ஒரு நாள் ஒரு மணி நேரம் போன்றும், ஒரு மணி நேரம் ஓர் உலர்ந்த பேரீச்ச இலை எரிகின்ற நேரத்தைப் போன்றும் ஆகிவிடும்.*

***அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: திர்மிதி (2254)***

*காலம் சுருங்குதல் என்பதற்கு (3) விளக்கங்கள் தரப்பட்டுள்ளது.*

*1. காலம் சுருங்குதல் என்றால் அந்தக் காலத்தில் பரகத் இல்லாமல் போய்விடும். இதனால் நேரம் இருந்தும் தனக்கு நேரம் கிடைக்க வில்லையே என்று மனிதன் புலம்புவான்.*

*2. மனிதனின் விஞ்ஞான அறிவு வளர்ந்து அவன் கண்டுபிடிக்கும் நவீன சாதனங்களால் காலம் மிகவும் சுருங்கி விடுதல். (உ.ம்) விரைவுப் பயணம், தொலைத் தொடர்பு சாதனங்கள்.*

*3. உண்மையிலேயே காலம் மிக வேகமாக ஓடுதல், ஆனால் இது இன்னும் நடக்கவில்லை. இனிமேல் நடக்கலாம்.*

## 10. விபச்சாரமும், குடிப்பழக்கமும் அதிகரிக்கும்

*விபச்சாரம் பெருகுவதும், மதுபானம் அருந்தப்படுவதும் யுக முடிவு நாளின் அடையாளங்களாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: புகாரீ (6310)***

*விபச்சாரம், மது இவை இரண்டுமே மார்க்கத்தில் தடை செய்யப் பட்டவைகளில் ஒன்று. மேலும் இவை பெரும்பாவங்களில்*

ஒன்றாகவும் இருக்கிறது. இந்த இரண்டுமே சமுதாயத்திற்கு அதி பயங்கர கேடுகளை விளைவிக்கக் கூடியது. ஆனால் கைசேதம்! சமுதாயத்தை சீர் செய்ய வேண்டிய அரசாங்கமும், பல அரபு நாடுகளும் இதற்கு வழிகோலாக இருப்பது தான்.

## 11. தகுதியற்றவர்களிடம் பொறுப்பு

நம்பகத்தன்மை பாழ்படுத்தப்பட்டால் மறுமை நாளை நீர் எதிர் பார்க்கலாம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியபோது, அது எவ்வாறு பாழ்படுத்தப்படும்? என்று ஒருவர் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் தகுதியற்றவரிடம் பொறுப்பு ஒப்படைக்கப்படும்போது நீர் மறுமைநாளை எதிர் பாரும்'' என்று பதிலளித்தார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (59)**

போதிய படிப்பறிவும் நிர்வாகத் திறனும் இல்லாதவர்களெல் லாம் உயர்ப் பதவில் அமர்ந்துகொண்டு, அதிகாரம் செலுத்தக் கூடிய ஒரு நிலையை இன்று பார்க்கிறோம்.

அந்த இடத்திற்கு தான் தகுதியானவன் இல்லை என்று தெரிந்தும் தனக்கு தகுதி இருப்பதைப் போன்று அவர் காட்டிக்கொள்வார்.

மக்களும் தகுதியிருப்பவர்களையெல்லாம் விட்டுவிட்டு எந்தத் தகுதியுமே இல்லாதவர்களை அதிகாரத்தில் அமர்த்துவார்கள்.

## 12. கொலைகள் பெருகுதல்

கொலைகள் அதிகரிப்பதும் கியாமத் நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (85)**

அநியாயமாக ஓர் உயிரைக் கொலை செய்பவன் முழு மனித சமு தாயத்தையும் கொலை செய்தவன் போன்று என்று கொலையை எச்சரிக்கும் மார்க்கம் இஸ்லாம் மட்டுமே. ஆனால் இன்று அந்தக் கொலை சர்வசாதாரணமாக நடக்கும் ஒன்றாக மாறிவிட்டது.

*உறவினர்கள் மத்தியில் கொலை, வியாபாரத்தில் கொலை, காதலுக்காக கொலை, முன் பகைக்காக கொலை, கல்லூரியில் கொலை, அரசியலில் கொலை என அனைத்து துறைகளிலும் சர்வசாதாரணமாகிவிட்டது.*

*இன்னும் எந்தளவுக்கு இந்தக் கொலை அதிகரிக்கும் என்றால் தேவையில்லாத அற்ப விஷயத்திற்கும், காரணமே இல்லாத வெற்று விஷயத்திற்கும் கூட இந்த கொலை நடக்கும்.*

*இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*என் உயிர் எவன் கைவசம் உள்ளதோ, அவன் மீது சத்தியமாக! மக்களுக்கு ஒரு நாள் வராத வரை உலகம் அழியாது. அன்று கொலை செய்தவனுக்குத் தான் எதற்காகக் கொன்றோம் என்பது தெரியாது. கொல்லப்பட்டவனுக்குத் தான் எதற்காகக் கொல்லப்பட்டோம் என்பது தெரியாது என்று கூறினார்கள். அப்போது அது எவ்வாறு நடக்கும்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கொலை சர்வசாதாரணமாகிவிடும். கொன்றவனும், கொல்லப்பட்டவனும் நரகத்திற்குச் செல்வார்கள் என்று கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (5575)***

## 13. அடிமைப் பெண் தன் எஜமானியைப் பெற்றெடுப்பது

*ஓர் அடிமைப்பெண் தன் எஜமானியைப் பெற்றெடுப்பது யுக முடிவு நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (50)***

*அடிமைப்பெண் தன் எஜமானியை அல்லது எஜமானனைப் பெற்றெடுப்பது என்பதின் கருத்து குறித்து பல்வேறு கருத்துக்கள் கூறப்படுகின்றன.*

*1. கடைசிக் காலத்தில் அடிமைப் பெண்ணுக்குப் பிறக்கும்*

குழந்தை பின்னாளில் விடுதலையாகி பெரும் செல்வம் சேர்த்து தன் தாயையே விலை கொடுத்து வாங்கும் அளவிற்கு கீழ்நிலையில் இருப்பவர்களிடம்கூடப் பணப் புழக்கம் பெருகிவிடும்.

2. மகனே தன் தாயைப் போர்க்கைதியாகப் பிடித்துச்செல்கின்ற அளவுக்குப் போர்களின் எண்ணிக்கையும், பாதிப்பும் அதிகமாகி விடும்.

3. பெற்ற தாயைக் கவனிக்க கடமைப்பட்ட பிள்ளைகள் தாயைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடுவார்கள். இதனால் தாய் தன் மகளின் தயவில் வாழும் நிலை ஏற்படும்.

**(நூல்: ஃபத்ஹுல் பாரீ)**

## 14. கல்வி உயர்த்தப்படுவதும் அறியாமை பரவுவதும்

கல்வி உயர்த்தப்படுவதும் அறியாமை பரவுவதும் நியாயத் தீர்ப்பு நாளின் அடையாளங்களாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: புகாரீ (6310)**

கல்வி உயர்த்தப்படுதல் என்றால் என்ன? என்பதற்கு பல விளக்கங்கள் தரப்படுகின்றன.

1. கல்வி உயர்த்தப்படுதல் என்றால் அந்த கல்வியை கற்ற அறிஞர்கள் மரணிப்பதின் மூலம் கல்வி குறைந்துவிடுதாகும்.

இந்தக் கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் பின்வரும் ஹதீஸ் அமைந்துள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ் கல்வியை (தன்) அடியார்களிடமிருந்து ஒரேடியாகப் பறித்துக் கொள்ள மாட்டான். ஆயினும், அறிஞர்களைக் கைப்பற்றுவதன் மூலமே அவன் கல்வியை பறிப்பான். இறுதியில் எந்த அறிஞரையும் அல்லாஹ் விட்டுவைக்காதபோது

மக்கள் அறிவீனர்களை (தம்) தலைவர்களாக்கிக் கொள்வார்கள். அவர்களிடம் கேள்வி கேட்கப்படும்போது அவர்கள் எந்த அறிவுமில்லாமல் தீர்ப்பு வழங்குவார்கள். எனவே தாமும் வழிதவறி பிறரையும் வழிதவறச் செய்வார்கள்.

**அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் பின் அல்ஆஸ் (ரலி) நூல்: புகாரீ (100)**

2. அறிஞர்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்தாலும் சத்தியத்தை எடுத்துச்சொல்லக் கூடிய அறிஞர்கள் மிக குறைவாகவே இருப் பார்கள்.

3. அதிகாரம் உள்ளவர்களிடத்தில் அறிஞர்களுக்கு எந்தவித மதிப் பும் இல்லாமல் போய்விடுவது. இது இன்றிருக்கும் ஜமாஅத் நிர்வாகிகளின் விஷயத்தில் சரியாகப் பொருந்திப்போகும்.

## 15. பள்ளிவாசலை பாதைகளாகப் பயன்படுத்துதல்

பள்ளிவாசல்கள் பாதைகளாக ஆக்கப்படுவதும் யுக முடிவு நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: தப்ரானீ (9375)**

இது கண்கூடாக நடந்துகொண்டிருக்கும் அடையாளங்களில் ஒன்றாகும். பள்ளிவாசலுக்கு தொழுகைக்கு வராதவர்கள் சுற்றி செல்வதற்கு அலுப்புப்பட்டுக்கொண்டு பள்ளிவாசலை குறுக்கு வழியாக பயன்படுத்துகின்றார்கள். இந்த செயலை பல உலமாக் கள் வெறுக்கத்தக்க காரியம் என்று கூறியுள்ளார்கள்.

பள்ளிவாசலை பாதைகளாகப் பயன்படுத்துவோரின் உள்ளத்தில் தொழ வேண்டும் என்ற சிந்தனை உண்டாக வேண்டும்.

## 16. அர்ப்பனுக்கும் வாழ்வு

செருப்பனியாத (அரை) நிர்வாணமாகத் திரிவோர் மக்களின் தலைவர்களாக ஆவதும் மறுமைநாளின் அடையாளங்களாகும்

என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (8)**

இது வட மாநிலங்களில் இன்றும் நடந்துகொண்டிருக்கும் உண்மை. பார்ப்பதற்கு கோமாளியாக உள்ளவர்களெல்லாம் பதவியில் அமர்ந்து கொண்டு நிர்வாணமாகத் திரிவதையும் அதிகாரம் செலுத்துவதையும் காண்கிறோம்.

கீழ்மட்ட நிலையிலிருந்தவர் திடீரென்று ஒரு வாய்ப்பு கிடைத்ததும் மேல்மட்ட நிலைக்குச் சென்றுவிடுகிறார். ஆனால், ஒரு தலைவனிடத்தில் இருக்க வேண்டிய நீதி, நேர்மை, நியாயம், ஒழுக்கம், சுயகட்டுப்பாடு போன்ற எந்தப் பண்பும் அவர்களிடம் இருக்காது. மக்களுக்கு நல்ல பல கருத்துக்களை வாய்கிழிய பேசுவார்கள். ஆனால் அவர்களின் செயல்பாடுகளோ மிகவும் கீழ்த்தரமானதாக இருக்கும். இது அனைத்துத் துறை சார்ந்த தலைவர்களிடமும் காணப்படுகின்ற ஒரு பொதுவான குறையாக அமைந்துள்ளது.

எனவே மக்களை வழிநடத்தக்கூடிய, மக்களுக்கு முன்மாதிரியாக இருக்க வேண்டிய தலைவர்கள் தங்களை சுயப் பரிசோதனை செய்துகொள்ள வேண்டும். எனவே பொதுவாழ்வில் இருப்பவர்களுக்கு அளவுக்கு மீறிய நாணயமும், கட்டுப்பாடும், உறுதியும், தியாக உணர்வும் இருக்க வேண்டும்.

## 17. தெரிந்தவருக்கு மட்டும் ஸலாம் கூறுதல்

தெரிந்தவருக்கு மட்டும் ஸலாம் கூறுவது யுக முடிவு நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: இப்னு மஸ்ஊத் (ரலி) நூல்: இப்னு குசைமா (1262)**

முஸ்லிம்கள் தங்களுக்கு மத்தியில் சந்தித்துக் கொள்ளும்போது ஸலாம் சொல்வது நபி வழியாகும். அவர் தனக்கு அறிமுகமானவராக இருந்தாலும் சரி, அறிமுகமற்றவராக இருந்தாலும் சரி அனைவருக்கும் ஸலாம் சொல்ல வேண்டும்.

*இன்று சமூக வலைதளங்களில் முதன்மையான முகநூலின் மூலம் அறிமுகமல்லாத பலர் தங்களுக்கு மத்தியில் அறிமுகமாகி நண்பர்களாகிவிடுகிறார்கள்.*

*ஆனால் உண்மையான நட்பும், சகோதரத்துவமும் இந்த ஸலாம் சொல்வதின் மூலம் உண்டாகிறது.*

*எனவே தெரிந்தவர் தெரியாதவர் என அனைவருக்கும் ஸலாம் கூறி ஸலாத்தை பரப்பி அதன் நன்மையை அடைய வேண்டும்.*

## 18. பெண்களின் எண்ணிக்கை அதிகரித்தல்

*ஐம்பது பெண்களுக்கு அவர்களை நிர்வகிக்க (ஒரு) ஆண் என்ற நிலைமை வரும் அளவுக்குப் பெண்கள் மிகுந்து ஆண்கள் குறைந்து போவதும் கியாமத் நாளின் அடையாளங்களாகும்.*

***அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: புகாரீ (81)***

*பெண் குழந்தைகளின் பிறப்பு விகிதம் அதிகமாகவும், ஆண் குழந்தைகளின் பிறப்பு விகிதம் மிக மிகக் குறைவாகவும் இருக்கும் என்பது நபிகளாரின் முன்னறிவிப்பு இல்லை. இருவரின் பிறப்பு விகிதம் ஏறக்குறைய சரிசமமாக இருந்தாலும், ஆண்கள் அதிக அளவிற்கு அழிந்து பெண்கள் அப்படியே மீதமாக இருப்பார்கள் என்பது தான் நபிகளாரின் முன்னறிவிப்பாகும். போர்களும், சண்டைகளும் அதிகமாக நடப்பது தான் இதற்கு ஒரு காரணம்.*

## 19. பள்ளிவாசல்களை வைத்துப் பெருமையடிப்பது

*மக்கள் தங்களுக்குள் பெருமையடித்துக் கொள்ளும் வகையில் பள்ளிவாசல்களைக் கட்டுவது மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்பது நபிமொழி.*

***அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: நஸயீ (682)***

*பள்ளிவாசல் அல்லாஹ்விற்கு சொந்தமான இடம் ஆகும். எனவே நாம் இருக்கும் இடங்களை எப்படி சுத்தமாக, அழகாக வைத்துக் கொள்கிறோமோ அதைவிட அதிகமாக பள்ளிவாசலை சுத்தமாக*

வைக்க வேண்டும். எனவே பள்ளியின் அத்தியாவசிய வசதி களுக்காக செலவு செய்வதில் தவறு கிடையாது.

இதல்லாமல் மற்ற ஊர்களின் பள்ளிகளைவிட நமது ஊர் பள்ளியை பிரம்மாண்டமாக அலங்காரமாக காட்ட வேண்டும் என்ற நோக்கில் செலவு செய்வது கூடாது.

பள்ளிவாசலின் உண்மையான அழகும், செழிப்பும் தொழுகை யாளிகளின் எண்ணிக்கை மூலமாகத்தான் வெளிப்படுகிறது என்பதை நினைவில் வைக்க வேண்டும்.

## 20. ஆடை அணிந்தும் நிர்வாணம்

ஆடை அணிந்தும் நிர்வாணமாகத் தோற்றமளிக்கும் பெண்கள் இனிமேல் தோன்றுவார்கள் என்பதும் நபிமொழியாகும்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (5487)**

மானத்தை மறைக்க ஆடை என்ற நிலை மாறி தனது அங்க அடையாளங்களை கவர்ச்சியாய் வெளிப்படுத்த உதவுவது ஆடை என்ற நிலை உருவாகிவிட்டது.

ஆண்களை விட அதிகம் உடலை மறைக்க கடமைப்பட்டுள்ள பெண்கள் ஆள்பாதி ஆடை பாதி என்ற ரீதியில் உலாவருகிறார்கள்.

இதனால் பெண்களின் கற்பு அனுதினமும் சூறையாடப்படக்கூடிய அவல நிலையை பார்த்து கொண்டு தான் வருகிறோம்.

மானத்தை மறைக்க மார்க்கம் கடமையாக்கிய ஹிஜாபை கூட மாடர்னாக பயன்படுத்தும் முஸ்லிம் பெண்களை என்னவென்று சொல்வது? ஆக இந்நிலையும் கியாமத் நெருங்கிவிட்டது என்பதற்குண்டான அடையாளமாகத் திகழ்கின்றது.

இவர்களைத் திருத்த மேற்சொன்ன நபிமொழி ஒன்றே போது மானதாக இருக்கும்.

இப்படிப்பட்ட பெண்கள் சொர்க்கத்திற்குச் செல்லமாட்டார்கள். சொர்க்கத்தின் வாடையைக் கூட நுகரமாட்டார்கள்.

***முஸ்லிம் (5487)***

## 21. நெருக்கமான கடை வீதிகள்

*கடைகள் பெருகி அருகருகே அமைவதும் நியாயத் தீர்ப்பு நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: அஹ்மத் (10306)***

முற்காலங்களில் பெரிய அளவில் கடைகள் இருக்காது. வாரச் சந்தைகளும் மாதச்சந்தைகளுமே அன்று இருந்தன.

ஆனால் இன்று காணும் இடமெல்லாம் கடை என்ற நிலையை பார்க்கிறோம். இது மக்களுக்கு வசதியாக இருந்தாலும் கியாமத் நெருங்கிவிட்டது என்பதற்குண்டான அடையாளமாகத் திகழ் கின்றது.

## 22. கட்டிடம் கட்டுவதில் போட்டி உருவாகும்

*மக்கள் கட்டிடங்களை (போட்டி போட்டுக் கொண்டு) உயரமாக கட்டாதவரை மறுமை நாள் வராது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (7121)***

*ஆட்டுக்குட்டிகளை மேய்க்கும் இடையர்கள் போட்டி போட்டுக் கொண்டு உயரமான கட்டிடங்களைக் கட்டுவதைக் கண்டால் அதுவும் மறுமையின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (5)***

பின் தங்கிய மக்கள் முதல் மேல்தட்டு மக்கள் வரை போட்டி போட்டுக்கொண்டு கட்டிடங்கள் கட்டும் நிலையை இன்று

காண்கிறோம். தலையை உயர்த்திப் பார்க்கும் அளவிற்கு மிக உயரமான கட்டிடங்களை எழுப்புகிறார்கள்.

முஸ்லிம்கள் கட்டிடங்களை அமைக்கும் விஷயத்தில் எப்படி இருக்க வேண்டும்? என்பதை பின்வரும் நபிமொழிகள் நமக்கு விளக்குகின்றன.

''ஒரு முஸ்லிம் தாம் செய்கின்ற எல்லாச் செலவினங்களுக்காகவும் பிரதிபலன் அளிக்கப்படுவார் (தேவைக்கு அதிகமாக வீடுகட்ட) இந்த மண்ணில் அவர் செய்கின்ற செலவைத் தவிர'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: கைஸ் பின் அபீ ஹாஸிம் (ரலி) நூல்: புகாரீ (5672)**

ஒவ்வொரு கட்டிடமும் அதை கட்டும் நபருக்குக் கேடாகவே அமையும். அத்தியாவசியமானதைத் தவிர என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: அபூதாவூத் (4559)**

## 23. வாழும் ஆசை அற்றுப் போய்விடும்

ஒரு மனிதர் மற்றொரு மனிதரின் மண்ணறையை (கப்றை)க் கடந்து செல்லும் போது ''அந்தோ! நான் இவரது இடத்தில் (மண் ணறைக்குள்) இருந்திருக்கக் கூடாதா?'' என்று (ஏக்கத்துடன்) சொல்லும் காலம் வராத வரை மறுமை நாள் வராது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (7115)**

வாழும் ஆசை அற்றுப் போகும் அளவிற்கு சோதனைகள் மலிந்து விடுவதால் மனிதன் மரணத்தை ஆசைப்படுவான் என்று ஒரு விளக்கம் தரப்பட்டுள்ளது.

**மற்றொரு விளக்கம்:** நாம் ஏன் இந்தக் காலத்தில் வாழ்கிறோம்? முன்பே இறந்திருக்கக் கூடாதா என்று நல்லவர்கள் எண்ணும் அளவிற்கு அந்தக் காலத்தில் குழப்பங்களும், சோதனைகளும்

பெருகிவிடும். அசத்தியவாதிகளின் கை ஓங்கி தீமைகளும், குற்றங்களும் வெளிப்படையாகச் செய்யப்படும். மார்க்கத்தை கடைபிடித்து வாழ முடியுமா? என்று நல்லவர்கள் அஞ்சும் நிலை தோன்றும்.

**(நூல்: ஃபத்ஹுல் பாரீ)**

## 24. எப்படியாவது சம்பாதித்தல்

மக்களுக்கு ஒரு காலம் வரும் அப்போது ஒரு மனிதர், தான் சம்பாதிப்பது ஹலாலான (அனுமதிக்கப்பட்ட) வழியிலா? அல்லது ஹராமான (அனுமதிக்கப்படாத) வழியிலா? என்பது குறித்துப் பொருட்படுத்தமாட்டார்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (2083)**

ஹலாலான வருமானத்தைத் தேடுவது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும். எனவேதான் மார்க்கம் ஹலாலான வருமானத்தை ஈட்டும் படியும் அதற்கு பல நன்மைகளையும் தந்து நம்மை ஊக்கப்படுத்துகிறது.

ஹராமான வழியில் சென்று சம்பாதிக்கும் பணத்தில் பரகத் (அருள்வளம்) இல்லாமல் போய் அதில் பல கேடுகளும் ஆபத்து களுமே வந்து சேருகின்றன.

மேலும் இந்த ஹராமான வருமானத்தின் மூலம் உள்ளம் இறுகி, இறைநம்பிக்கையில் பிரகாசம் போய்விடுகிறது. மேலும் அல்லாஹ்வின் கோபமும் உண்டாகிறது. அவருடைய பிரார்த் தனையும் அல்லாஹ்விடத்தில் ஏற்கப்படாது.

## 25. பூகம்பங்களும் நில அதிர்வுகளும் அதிகரித்தல்

பூகம்பங்கள் அதிகரிக்கும் வரை கியாமத் நாள் ஏற்படாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (1036)**

சமீப காலங்களாக இந்த அடையாளம் நடந்து வருவதை நாம்

பார்க்கிறோம். இந்த திடீர் பூகம்பத்தால் பல இலட்சக்கணக்கான மக்களின் உயிர் மாண்டு போவதை நாம் காண்கிறோம்.

உலகின் ஏதாவது ஒரு மூளையில் இந்த அடையாளம் நிகழ்ந்து கொண்டு தான் இருக்கிறது.

## 26. பேச்சைத் தொழிலாக்கி சம்பாதித்தல்

தங்கள் நாவுகளை (மூலதனமாகக்) கொண்டு சாப்பிடக்கூடிய வர்கள் தோன்றும் வரை யுக முடிவு நாள் ஏற்படாது என்பதும் நபிமொழி.

**அறிவிப்பவர்: ஸஃத் பின் அபீ வக்காஸ் (ரலி)**
**நூல்: அஹ்மத் (1511)**

மார்க்கத்தைப் பிரச்சாரம் செய்வதற்கு நாவு ஒரு பெரிய மூலதன மாகும். இதன் மூலம் சத்திய மார்க்கத்தை மக்களின் உள்ளங்களில் பதிய வைக்கலாம்.

ஆனால் இன்று அந்த மூலதனம் பல அசத்தியக் கொள்கைகளுக் கும் உலக ஆதாயத்திற்கும் சாதனமாய் பயன்படுத்தப்படுகிறது.

இன்று மக்களும் பேச்சை (பயானை) ஒரு ரசனையாகவே பார்க் கிறார்கள். ஒவ்வொரு பேச்சாளருக்கும் சில மார்க்குகளையும் போட்டுவைத்துள்ளார்கள்.

உண்மையான பேச்சாளர் எந்த வித ஆதாயத்தையும் எதிர்பார்க் காமல் தன் உள்ளத்தின் கவலைகளை நாவின் மூலம் வெளிப் படுத்துவார்.

உண்மையான மக்கள் அந்த நல்ல பேச்சை தான் நடைமுறைப் படுத்த வேண்டும் என்ற நோக்கில் கேட்பார்கள்.

## 27. முந்தைய சமுதாயத்தைக் காப்பியடித்தல்

உங்களுக்கு முன்னிருந்த (யூதர்கள் மற்றும் கிறித்த)வர்களின் வழி முறைகளை நீங்கள் அங்குலம் அங்குலமாக முழம் முழமாகப்

*பின்பற்றுவீர்கள். எந்தளவுக்கென்றால் அவர்கள் ஓர் உடும்பின் பொந்துக்குள் புகுந்திருந்தால் கூட நீங்கள் அதிலும் புகுவீர்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நாங்கள் அல்லாஹ்வின் தூதரே! (நாங்கள் பின்பற்றக்கூடியவர்கள் என்று) யூதர்களையும், கிறித்தவர்களையுமா நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்? என்று நாங்கள் கேட்டோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள் ''வேறு யாரை?'' என்று கேட்டார்கள்.*

***அறிவிப்பவர்: அபூ சயீத் அல்குத்ரீ (ரலி) நூல்: புகாரீ (3456)***

*இறுதிக்காலத்தில் முஸ்லிம்கள் யூதர்களையும், கிறித்தவர்களை யும் அடிக்கு அடிப் பின்பற்றி நடப்பார்கள். யூதர்களும், கிறித்தவர் களும் தமது மார்க்கத்தை மறந்து மனம்போன போக்கில் வாழ்வதைப் போல முஸ்லிம்களும் தமது மார்க்க கடமைகளை மறந்து அக்காலத்தில் வாழ்வார்கள்.*

*இன்றுகூட முஸ்லிம்களில் சிலர் எடுத்ததற்கெல்லாம் ஃபேஷன் என்ற பெயரில் மேலை நாட்டு கலாச்சாரத்தைப் பின்பற்றி வருவதைப் பார்க்கிறோம். இந்த மேலை நாட்டு கலாச்சாரம் யூதர்களாலும், கிறித்தவர்களாலும் உருவாக்கப்பட்டதுதான் என் பதை மறந்துவிடக் கூடாது.*

***(நூல்: உம்தத்துல் காரீ)***

## 28. பேசாதவை பேசும்

*விலங்கினங்கள் மனிதனிடம் பேசும் வரையிலும், தோல்சாட்டை யும், செருப்பு வாரும் மனிதனிடம் பேசும் வரையிலும் யுக முடிவு நாள் ஏற்படாது என்பதும் நபிமொழி.*

***அறிவிப்பவர்: அபூ சயீத் அல் குத்ரீ (ரலி) நூல்: அஹ்மத் (11365)***

*பறவைகள் மற்றும் விலங்கினங்களை ஆய்வு செய்து அவை தமக்கிடையே பேசிக் கொள்வதை மனிதன் விளங்கிக் கொள்ளக் கூடிய நிலைமை இன்று ஏற்பட்டுள்ளது.*

## 29. திடீர் மரணம்

*திடீர் மரணம் ஏற்படுவதும் கியாமத் நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அனஸ் (ரலி) நூல்: தப்ரானீ***

இமாம் அல்பானி (ரஹ்) அவர்கள் இந்த அறிவிப்பை ஹஸன் (நல்ல) தரத்தில் அமைந்த ஹதீஸ் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

முற்காலங்களில் ஒருவர் மரணிக்கப்போகிறார் என்றால் அவருக்கு நோய் ஏற்பட்டு அந்த நோயிலேயே பல நாட்கள் கிடப்பார். தனக்கு வந்த நோய் மரணத்தின் அறிகுறி என்று அவர் விளங்கி தன் குடும்பத்தார்களிடம் வஸிய்யத் (மரண சாசனம்) செய்துவிடு வார். மேலும் அல்லாஹ்விடத்தில் மனம் வருந்தி தவ்பாவும் (பாவமன்னிப்பும்) செய்து கொள்வார். அன்றைய காலங்களில் திடீர் மரணம் என்பது மிகக் குறைவுதான்.

ஆனால் இன்றோ திடீர் மரணத்தின் திடுக்கிடும் செய்திகளை அடிக்கடி நாம் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறோம். ஓர் ஆரோக்கியமான நபரை அப்போது தான் பார்த்துவிட்டு சென்றி ருப்போம், அடுத்த நிமிடமே அவர் மரணித்துவிட்டார் என்ற செய்தி நம்மை வந்தடையும். இந்த திடீர் மரணங்கள் இன்று அதிகம் விபத்துகளின் மூலமே ஏற்படுகின்றன. அதே போன்று மாரடைப்பு, தீ விபத்து போன்ற காரணங்களாலும் திடீர் மரணங் கள் ஏற்படுகின்றன.

ஆக இதுவும் மறுமை நாள் நெருங்கிவிட்டது என்பதற்குண்டான அடையாளமாக இருக்கின்றது.

## 30. மானக்கேடான விஷயங்கள் பரவுதல்

மானக்கேடான ஆபாசமான விஷயங்கள் பரவும் வரை கியாமத்

*நாள் ஏற்படாது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி)***
***நூல்: ஹாகிம் (8613)***

*இந்த ஆபாசமான விஷயங்கள் சொல், செயல் இரண்டின் மூல மாகவும் வெளிப்படுகின்றன. செயலில், ஆபாசமான ஆடைகளை அணிவதன் மூலமாகவும், அந்தரங்க விஷயங்களைப் பொது இடத்தில் செய்வதன் மூலமாகவும் மானக்கேடான விஷயங்கள் உருவாகின்றன.*

*சொல்லில், தங்கள் நாவுகளால் தகாத வார்த்தைகளையும், கெட்ட வார்த்தைகளையும் உச்சரிப்பதன் மூலமாக மானக்கேடான விஷயங்கள் உருவாகின்றன.*

*இந்த இரண்டு செயல்களும் முஸ்லிம்களிடத்தில் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறது. எனவே இதுவும் மறுமை நெருங்கிவிட்டது என்பதற்குண்டான அடையாளமாக அமைந்துள்ளது.*

## 31. ஹராமை ஹலாலாக்கும் கூட்டத்தினர்

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*என் சமுதாயத்தாரில் சில கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் விபச்சாரம் (புரிவது), (ஆண்கள்) பட்டுத் துணி (அணிவது), மது (அருந்துவது), இசைக் கருவிகள் (இசைப்பது) ஆகியவற்றை அனுமதிக்கப்பட்டவையாகக் கருதுவார்கள்.*

***அறிவிப்பவர் : அபூ மாலிக் அல் அஷ்அரீ (ரலி)***
***நூல் : புகாரீ (5590)***

*மார்க்கத்தைப் பொறுத்தவரை ஒரு விஷயத்தை ஹலால் என்றோ, அல்லது ஹராம் என்றோ தீர்மானிக்கும் அதிகாரம் அல்லாஹ் வுக்கும், அவனது தூதருக்கும் மட்டும் உரித்தானதாகும்.*

*இதில் யாருக்கும் எந்தத் தலையீடும் கிடையாது. அப்படி*

*யார், மார்க்கத்திற்கு முரணான வகையில் ஹலால் ஹராமை தீர்மானிக்கிறாரோ அவர்களை அல்லாஹ் கடுமையாக எச்சரிக்கிறான்.*

*உங்கள் நாவில் வந்தவாறெல்லாம் பொய் கூறுவதைப் போல் (எதைப்பற்றியும் மார்க்கத்தில்) இது ஆகும். இது ஆகாது என்று கூறாதீர்கள். (அவ்வாறு கூறினால் அல்லாஹ்வின் மீது அபாண்டமாகப் பொய் கூறுவது போலாகும்.) எவர்கள் அல்லாஹ்வின் மீதே பொய்யைக் கற்பனை செய்கிறார்களோ அவர்கள் நிச்சயமாக வெற்றி அடையவே மாட்டார்கள்.*

***அல்குர்ஆன் (16 : 116)***

*இன்று மார்க்க அறிஞர்களைப் போல் தங்களைப் பாவனைச் செய்யும் சிலர் மக்களுக்கு தவறான ஃபத்வா (மார்க்கத் தீர்ப்பு) கொடுத்து அவர்களை வழிகேட்டின் பக்கம் அழைத்துச் செல்வதைப் பார்க்கின்றோம்.*

*இதற்கான காரணம், அவர்கள் மார்க்கத்தைப் பற்றி சரியான புரிதல் இல்லாததும், அவர்களின் மனோயிச்சையின் படி மார்க்க தீர்ப்பு வழங்குதலுமே ஆகும்.*

## 32. இறைத்தூதர் என வாதிடும் பொய்யர்கள்

*எனது சமுதாயத்தில் முப்பது பொய்யர்கள் தோன்றுவார்கள். அவர்கள் அனைவரும் தம்மை அல்லாஹ்வின் தூதர் என்று வாதிடுவார்கள். நான் நபிமார்களில் முத்திரையாவேன். நிச்சயமாக எனக்குப் பின் எந்த நபியும் கிடையாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : சவ்பான் (ரலி) நூல் : திர்மிதி (2145)***

*ஹதீஸில் முப்பது தஜ்ஜால் என்று வந்துள்ளது. நபி (ஸல்) அவர்கள் காலத்திலிருந்து இன்று வரை தன்னை நபி என்று பிரச்சாரம் செய்தவர்கள் ஏராளம். அதில் மிகப் பிரபலமாகப் பேசப்பட்டவர்களில் சிலரை இங்கு குறிப்பிடுகின்றோம்.*

1. நபி (ஸல்) அவர்களின் கடைசிக்காலத்தில் 'யமாமா' பகுதியில் 'முசைலமா' என்பவன் தன்னை 'இறைத்தூதர்' என்று வாதிட்டு பல ஆதரவாளர்களையும் தன் பக்கம் சேர்த்தான். இவன் அபூபக்ர் (ரலி) அவர்களின் ஆட்சியில் நடந்த படையெடுப்பில் கொல்லப் பட்டான்.

2. அதேப்போன்று யமனில் 'அஸ்வத் அல் அனசீ' என்பவன் தன்னை நபி என வாதிட்டான். இவன் நபி (ஸல்) அவர்கள் காலத்திலேயே கொல்லப்பட்டுவிட்டான்.

3. அபூபக்ர் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் 'துலைஹா பின் குவைலித்' என்பவன் 'பனூ அஸத்' கூட்டத்திலிருந்தும், 'ஸஜாஹ்' என்ற பெண் 'பனூ தமீம்' கூட்டத்திலிருந்தும் தங்களை 'நபி' என்று வாதிட்டு வந்தனர். இவர்கள் இருவரும் பின்னர் மனம் திருந்தி இஸ்லாத்திற்கு திரும்பி விட்டனர்.

4. பிறகு 'அப்துல்லாஹ் பின் அஸ்ஸுபைர்' (ரலி) அவர்கள் கூஃபாவின் ஆட்சியாளராக இருந்தபோது 'முக்தார் பின் அபீ உபைத் அஸ்ஸகஃபீ' என்பவன் இவ்வாறே தன்னை நபி என்று வாதிட்டான். ஹிஜ்ரி அறுபதுகளில் அவனும் கொல்லப்பட்டான்.

5. பிறகு 'அப்துல் மலிக் பின் மர்வான்' ஆட்சிக்காலத்தில் 'ஹாரிஸ்' என்பவன் தன்னை நபி என்று வாதிட்டு வந்தான். அவனும் கொல்லப்பட்டான். அப்பாஸியாக்களின் ஆட்சிக்காலத்தில் பலரும் தங்களை நபி என்று வாதிட்டு வந்தனர்.

6. அதேப்போன்று, சமீப காலத்தில் பஞ்சாபில் 'காதியான்' என் னும் இடத்தில் பிறந்த 'மிர்ஸா குலாம் அஹ்மத் அல்காதியானி' (1839-1908) என்பவன் தன்னை நபி என்று வாதிட்டு 'அஹ்மதிய்யா' எனும் இயக்கத்தை உருவாக்கினான். இன்று வரை இவனுடைய இயக்கம் செயல்பட்டு வருகிறது. தமிழ்நாட்டிலும் இவனுடைய இயக்கம் பல இடங்களில் பரவி விரிந்திருக்கிறது. சென்னையில் கோடம்பாக்கத்தில் இருக்கும் 'மஸ்ஜித் மஹ்மூத்' என்று சொல் லப்படும் பள்ளியில்தான் இவர்களின் தலைமையகம்

அமைந்துள்ளது. இதுதவிர, ஈரோடு, மேலப்பாளையம், சங்க ரன்கோயில், கோயம்புத்தூர், குலசேகரப்பட்டிணம் போன்ற ஊர்களிலும் இவர்களின் இயக்கம் ஆங்காங்கே செயல்பட்டு வருகிறது.

7. மிர்சா குலாமிற்குப் பிறகு அமெரிக்காவைச் சார்ந்த 'ரஷாத் கலீஃபா' என்பவனும் தன்னை நபி என்று வாதிட்டான். இவர்கள் தான் '19 கூட்டத்தினர்' என்று அறியப்படுகின்றனர். இவனை முஸ்லிம்கள் ஒன்றுசேர்ந்து சுட்டுக் கொன்றுவிட்டனர்.

8. இப்படி பல பொய்யர்கள் வந்திருக்கிறார்கள். இறுதியாக வரும் பொய்யன் தான் தஜ்ஜால் என்பவன். இவன் தான் மிகப்பெரிய குழப்பவாதி. மற்ற பொய்யர்கள் இறைத்தூதர் என்று தான் வாதிட்டனர். ஆனால் இவன் அதையும் தாண்டி தன்னை இறைவன் என்றே வாதிடுவான்.

**(நூல்: ஃபத்ஹுல் பாரீ)**

## III. இனி நடக்கவிருக்கும் அடையாளங்கள்

### 33. கஹ்தான் இன மன்னரின் ஆட்சி

கஹ்தான் குலத்திலிருந்து ஒரு மனிதர் தோன்றி, தமது கைத்தடியால் மக்களை வழி நடத்தாத வரை யுக முடிவு நாள் வராது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரீ (3517)**

அதாவது, கஹ்தான் குலத்தைச் சேர்ந்த ஒருவர் ஆட்சியதிகாரத் தைப் பிடித்து, மக்களை மிகைக்காத வரை உலகம் அழியாது. இது யாரைக் குறிக்கிறது? எப்போது நடக்கும்? என்பதெல்லாம் உறுதியாக தெரியவில்லை.

ஜஹ்ஜாஹ் எனப்படும் ஒரு மனிதர் ஆட்சி செய்யாத வரை இரவு, பகல் (மாற்றம் நின்று உலகம் அழிந்து) போகாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் – 5580**

*யமன் நாட்டைச் சேர்ந்தவர்களே கஹ்தான் குலத்தார், இக்குலத்திலிருந்து ஒருவர் தோன்றுவார். மக்கள் மீது அதிகாரம் செலுத்துவார். மக்களிடம் கடுமையாக நடந்து கொள்வார். அவரது பெயர் ஜஹ்ஜாஹ் என்பதாகும். இறுதிக்காலத்தில் தோன்றும் 'மஹ்தீ' அவர்களுக்கு முன் அவர் தோன்றுவார் என்று சிலர் கூறுகிறார்கள். ஆனால் உறுதியாக எதையும் குறிப்பிட முடியாது.*

***(நூல்: ஃபத்ஹுல் பாரீ)***

## 34. மதீனா தூய்மையடைதல்

*துருத்தி எவ்வாறு இரும்பின் துருவை நீக்குமோ அதுபோல் மதீனா நகரம் தன்னிடம் உள்ள தீயவர்களை அப்புறப்படுத்தும் வரை யுக முடிவு நாள் வராது என்பது நபிமொழி.*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (1871)***

*மதீனா நகரத்தின் பழைய பெயர் 'யஸ்ரிப்' என்பதாகும். அந் நகரத்தைக் கண்டுபிடித்த, அங்கு முதலில் வந்த யஸ்ரிப் பின் கானியா என்பவரது பெயரால் இது யஸ்ரிப் என அழைக்கப்பட்டு வந்தது. குர்ஆனிலும் இந்தப் பெயர் இடம்பெற்றுள்ளது. நபி (ஸல்) அவர்கள் இங்கு குடியேறிய பின் இந்நகரத்திற்கு 'மதீனா' (நகரம்) எனப் பெயர் வந்தது.*

***(நூல்: இர்ஷாதுஸ் ஸாரீ)***

## 35. செல்வம் பெருகும்

*உங்களிடையே செல்வம் நிரம்பி வழியாத வரை இறுதிநாள் ஏற்படாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (1036)***

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :*

*இப்போதே தர்மம் செய்து கொள்ளுங்கள். ஏனெனில் உங்களுக்கு ஒரு காலம் வரும். அக்காலத்தில் ஒருவர் தமது தர்மப் பொருளை (வலக்கரத்தில்) எடுத்துக்கொண்டு அலைவார். அப்போது ஒரு*

*மனிதன் நேற்றே இதை நீர் கொண்டு வந்திருந்தாலாவது நான் வாங்கியிருப்பேன். இன்றோ அது எனக்குத் தேவையில்லையே என்று கூறுவான்.*

***அறிவிப்பவர் : ஹாரிஸா பின் வஹ்ப் (ரலி) நூல் : புகாரீ (1424)***

*இறுதிக்காலத்தில் தான தர்மங்களை வாங்கிக் கொள்வதற்கு ஆளே இல்லாத அளவுக்கு செல்வம் கொழிக்கும் என்று ஹதீஸில் வந்துள்ளது.*

*எந்தக்காலத்தில் இது நடக்கும்? எனும் கேள்விக்கு பல கருத்துக்கள் கூறப்படுகின்றன.*

*1.இது ஈஸா (அலை) அவர்கள் பூமிக்கு வருகை தந்து தஜ்ஜாலைக் கொன்ற பின் சில காலங்கள் வாழும் போது இந்த நிலை ஏற்படும் என்று சிலர் கூறுகின்றர்.*

*2.வேறு சிலர் இது இமாம் மஹ்தீ அவர்களின் வருகைக்குப் பிறகு ஏற்படும் நிலை என்று கூறுகின்றனர்.*

*3. உமர் பின் அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்களின் ஆட்சிக்காலத்தில் இப்படிப்பட்ட நிலை ஏற்பட்டுவிட்டது என்றும் விளக்கம் தரப்பட்டுள்ளது.*

*4. இது தஜ்ஜாலின் குழப்பங்கள் பரவும்போது ஏற்படும் என்று சிலர் விளக்கமளித்துள்ளனர்.*

## 36. யூப்ரடீஸ் நதியில் தங்கப் புதையல்

*யூப்ரடீஸ் (ஃபுராத்) நதி தங்கப்புதையலை வெளியே தள்ளும். அதைக் காண்பவர்கள் அதிலிருந்து எதையும் எடுக்க வேண்டாம். என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (7119)***

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*(மேற்காசியாவில் பாயும்) யூப்ரடீஸ் நதியானது வற்றி, தங்கமலை*

ஒன்றை வெளிப்படுத்தாத வரை யுக முடிவு நாள் வராது. அதற்காக (உரிமை கொண்டாடி) மக்கள் சண்டையிட்டுக் கொள்வர். அப்போது ஒவ்வொரு நூறு பேரிலிருந்தும் தொண்ணூற்றொன்பது பேர் கொல்லப்படுவர். அவர்களில் ஒவ்வொருவரும் 'உயிர் பிழைப்பவர் நானாக இருக்க வேண்டுமே! என்று கூறுவர்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (5548)**

இன்று உலகில் பல்வேறு காரணங்களுக்காக யுத்தம் நடக்கின்றது. எண்ணெய் வளங்களைச் சுரண்டுவதற்காகவும், பெட்ரோலை மையமாக வைத்தும் இன்று யுத்தம் நடக்கிறது.

இதேப்போன்றுதான் மறுமையின் நெருக்கத்தில் தங்க வளத்தை சுரண்டுவதற்காகவும் பெரிய யுத்தம் நடக்கும்.

எனவே தான் நபி (ஸல்) அவர்கள் நம்மை அதன் பக்கம் செல்ல வேண்டாம் என்று எச்சரிக்கை விடுத்துள்ளார்கள்.

## 37. சிலை வணக்கம் மீண்டும் தலைதூக்கும்

'தவ்ஸ்' குலப்பெண்களின் புட்டங்கள் 'துல்கலஸா'வைச் சுற்றி அசையாத வரை யுக முடிவு நாள் வராது. துல்கலஸா என்பது, 'தவ்ஸ்' குலத்தார் அறியாமைக் காலத்தில் (யமனிலுள்ள) 'தபாலா' எனுமிடத்தில் வழிபட்டு வந்த கடவுள் சிலையாகும். என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (5570)**

இந்த ஹதீஸை அறிவிக்கும் அபூஹுரைரா (ரலி) அவர்களும் இந்த 'தவ்ஸ்' குலத்தைச் சேர்ந்தவர்கள் தான்.

இக்குலத்தார் இஸ்லாத்தை கைவிட்டு மீண்டும் இணைவைப்புக் குத் திரும்பிவிடுவர். ஒழிக்கப்பட்ட 'துல்கலஸா' சிலை வழிபாடு மீண்டும் தலைதூக்கும். அக்குலப் பெண்கள் போட்டியிட்டுக் கொண்டு நெரிசலில் அந்தச் சிலையைச் சுற்றிச் சுற்றி வருவர். நிலைமை இவ்வளவு தூரம் மோசமாகும் அளவுக்கு மார்க்கம்

ஆதரவற்றுப் போய்விடும். அதன் பின்னரே உலக அழிவு நாள் வரும்.

***(நூல்: ஃபத்ஹுல் பாரீ)***

எனது சமுதாயத்தில் உள்ள சில கோத்திரத்தினர் இணைவைப்ப வர்களுடன் சேராத வரை அவர்களின் சிலைகளை வணங்காத வரை மறுமை நாள் ஏற்படாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

***அறிவிப்பவர் : சவ்பான் (ரலி) நூல் : திர்மிதி (2145)***

## 38. வாரி வழங்கும் மன்னர்

*கடைசிக் காலத்தில் ஒரு கலீஃபா (ஆட்சியாளர்) தோன்றுவார். அவர் எண்ணிப் பார்க்காமல் செல்வத்தை வாரி வழங்குவார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : முஸ்லிம் (5588)***

அதாவது, இராக், சிரியா உள்ளிட்ட முஸ்லிம் நாடுகள் மீது இறைமறுப்பாளர்களின் ஆதிக்கம் மேலோங்கிவிடும். முஸ்லிம் களுக்குச் சேர வேண்டிய உணவு தானியங்களையும், நீதியையும் போய் சேர விடாமல் தடுப்பார்கள். இறுதிச் சமுதாயத்தில் எண்ணிப்பார்க்காது வாரி வழங்கும் ஆட்சியாளர் (கலீஃபா) இறுதிக்காலத்தில் வரவிறுக்கும் 'மஹ்தி' என்ற ஆட்சியாளராக இருக்கலாம் என்று சிலர் கூறுகிறார்கள்.

***(நூல்: தக்மிலா)***

## 39. கஃபா ஆலயம் சேதப்படுத்தப்படுதல்

*அபிசீனியாவைச் சேர்ந்த மெலிந்த 'கால்கள் உடைய ஒரு மனிதன் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் இல்லத்தை (கஅபாவை) இடித்துப் பாழாக்குவான்.*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (5578)***

இது யுக முடிவுக்கு முன்னால் நடக்கும். இதுவும் உலக

அழிவிற்கான அடையாளங்களில் ஒன்றாகும். அபிசீனிய கருப்பர்களுக்குப் பெரும்பாலும் கனைக்கால் சிறுத்தே இருக்கும். அத்தகைய கறுப்பர்கள் புனித கஃபாவைத் தகர்க்கும் வேலையில் ஈடுபடுவார்கள். இது உலக அழிவின் அடையாளம் என்பதால் புனித கஃபா ஒரு பாதுகாப்பான இடம் என்ற கருத்துக்கு முரண்படாது.

காரணம் அல்லாஹ் ஒவ்வொரு பொருளின் மீதும் அழிவைத் தீர்மானித்துவிட்டான்.

என்றும் அழியாத நித்திய ஜீவன் அவன் ஒருவன் மட்டுமே. மற்ற அனைத்தும் அழியக்கூடியதே. (பூமியிலுள்ள அனைத்தும் அழிந்தே போகும். மிக கண்ணியமும் பெருமையும் உடைய உமது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்).

**அல்குர்ஆன் (55: 26, 27)**

## 40. யூதர்களுடன் மாபெரும் யுத்தம்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

முஸ்லிம்கள் யூதர்களுடன் போர் தொடுக்காத வரை யுக முடியு நாள் வராது. அப்போது முஸ்லிம்கள் (பதிலடியாக) யூதர்களைக் கொல்வார்கள். எந்த அளவுக்கென்றால் யூதன் ஒருவன் அந்தக் கல்லுக்கும் மரத்துக்கும் பின்னால் ஒளிந்து கொள்வான். உடனே அந்தக் கல் அல்லது அந்த மரம். ''முஸ்லிமே! அல்லாஹ்வின் அடியாரே! இதோ எனக்குப் பின்னால் யூதன் ஒருவன் இருக்கிறான். உடனே நீ வந்து அவனைக் கொன்றுவிடு'' என்று கூறும். பெரிய உடை மரத்தைத் தவிர, ஏனெனில் அது யூதர்களின் மரமாகும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (5601)**

பைத்துல் முகத்தஸைச் சுற்றியுள்ள முள் மரமே உடைமரம்; அல்லது வேலமரம் **(babul)** (ஃகர்கத்) என்றழைக்கப்படுகிறது. அந்த இடத்தில் வைத்தே தஜ்ஜாலுடன் யூதர்களும் கொல்லப் படுவார்கள்.

**(நூல்: தக்மிலா)**

# பெரிய அடையாளங்களின் ஆரம்பம்

இதுவரை நாம் குறிப்பிட்ட அனைத்தும் சிறிய அடையாளங்கள். அதாவது, இந்த அடையாளங்களுக்கும் கியாமத் நாளுக்கும் மத்தியில் ஒரு சிறிய இடைவெளி இருக்கின்றது. ஆனால், இனி வரவிருக்கும் இந்த பெரிய அடையாளங்கள் நிகழ்ந்துவிட்டால் அடுத்தது கியாமத்துதான்.

இந்த பெரிய அடையாளங்களில் மிக முக்கியமாக பத்து அடையாளங்களை நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

1. புகை மூட்டம் 2. தஜ்ஜால் 3. அதிசயப் பிராணி 4. சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது 5. ஈஸா (அலை) இறங்கி வருவது 6. யஃஜூஜ் மஃஜூஜ் வருவது 7. கிழக்கே ஒரு பூகம்பம் 8. மேற்கே ஒரு பூகம்பம் 9. அரபு தீபகற்பத்தில் ஒரு பூகம்பம் 10. இறுதியாக எமனிலிருந்து புறப்படும் தீப்பிழம்பு மக்களை விரட்டிச் சென்று ஒன்று சேர்த்தல்.

ஆகிய பத்து அடையாளங்களை நீங்கள் காணும் வரை அந்த நாள் வராது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஹுதைஃபா பின் உசைத் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5558)**

இந்த பத்து அடையாளங்களில் எது முதலாவதாக நடக்கும்? அதற்கடுத்து எது? கடைசி எது? எனும் வரிசை முறையில் அறிஞர் களிடையே கருத்து வேறுபாடு உள்ளது.

இதற்கான காரணம். பத்து அடையாளங்கள் சம்பந்தமாக வந்தி ருக்கும் ஹதீஸ்களிலேயே வரிசை முறை மாற்றமாகத்தான் வந்துள்ளது.

என்றாலும் சில அறிஞர்கள் குர்ஆன் ஹதீஸை மையமாக வைத்துப் பத்து அடையாளங்களை வரிசைப்படுத்தியுள்ளார்கள். நாமும் அந்த வரிசை முறையை அடிப்படையாக வைத்து பத்து அடையாளங்களைப் பற்றித் தெரிந்துகொள்வோம்.

அதற்கு முன் இந்த பெரிய அடையாளங்களுக்கு ஆரம்பமாக, அடித்தளமாக இருக்கும் இமாம் மஹ்தீயின் வருகையைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்குப் பிறகு அதன் தொடர்ச்சியில் மீதியுள்ள மாபெரும் பத்து அடையாளங்களைப் பற்றி பார்ப்போம்.

## இமாம் மஹ்தீயின் வருகை

உலக அழிவின் சிறிய அடையாளங்களையும், பெரிய அடை யாளங்களையும் இணைக்கும் சங்கிலியாக அமையப் போகும் இமாம் மஹ்தீ (அலை) அவர்களின் வருகை இஸ்லாமிய வரலாற்றில் மிக முக்கியமான நிகழ்வாகும்.

இறுதி நாளின் சமீபத்தில், தஜ்ஜாலின் வருகையை ஒட்டி, முஸ்லிம்களுக்கும், ரோமர்களாகிய கிறித்தவர்களுக்கும் மத்தியில் உலக மகா யுத்தம் நடக்கும். அது போன்ற ஒரு யுத்தத்தை உலகம் இதுவரை கண்டிருக்காது. இந்த யுத்தத்தின் போது தான் இமாம் மஹ்தீயின் வருகை ஏற்படும்.

இமாம் மஹ்தீ சம்பந்தமாக நபி (ஸல்) அவர்கள் நமக்கு முன்னறி விப்புச் செய்த சில அறிவிப்புகளைப் பார்ப்போம்.

## கண்டிப்பாக வருவார்கள்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இவ்வுலகில் ஒரு நாள் மட்டுமே எஞ்சியிருந்தால் என் வழித் தோன்றலைச் சார்ந்த ஒருவர் ஆள்வதற்காக அந்த நாளை அல்லாஹ் நீட்டுவான். அவரது பெயர் என் பெயரை ஒத்திருக்கும். அவரது தந்தையின் பெயர் என் தந்தையின் பெயரை ஒத்திருக்கும். போதும்,

*அநியாயமும் நிரம்பியிருக்கும் இப்பூமியில் அமைதியையும், நீதி யையும் அவர் நிலைநிறுத்துவார்.*

***அறிவிப்பவர் : அப்துல்லாஹ் (ரலி) நூல் : அபூதாவூத் (3733)***

இவ்வுலகில் ஒரு நாள் மட்டும் மீதமிருந்தால் என்ற வார்த்தை யிலிருந்து உலக முடிவுக்கு மிக நெருக்கமான சமயத்தில்தான் மஹ்தீ வருவார்கள் என்று தெளிவாக தெரிகிறது. எனவே, இதுவரை யார் தன்னை மஹ்தீ என்று வாதிட்டுக் கொண்டு இருக்கிறார்களோ அவர்களின் வாதம் பொய்யானதாகும்.

அவரது பெயர் என் பெயரை ஒத்திருக்கும். அவரது தந்தையின் பெயர் என் தந்தையின் பெயரை ஒத்திருக்கும் என்பதிலிருந்து இமாம் மஹ்தீ அவர்களின் முழுப்பெயர் முஹம்மத் பின் அப்துல்லாஹ் என்பதாகும்.

மஹ்தீ என்பது அவர்களின் சிறப்புப் பெயர் தான். மஹ்தீ என்பதற்கு வழிகாட்டப்பட்டவர் அல்லது வழிப்படுத்துபவர் என்று பொருள்.

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*என் வழித்தோன்றலைச் சார்ந்த ஒருவர் அரபு தேசத்தை ஆட்சி செய்யாத வரை உலகம் முடிவுக்கு வராது.*

***அறிவிப்பவர் : அப்துல்லாஹ் (ரலி) நூல் : திர்மிதீ (2156)***

மேற்கூறிய இந்த இரண்டு அறிவிப்பின் மூலமும் இமாம் மஹ்தீ (அலை) அவர்களின் வருகை கியாமத்தின் நெருக்கத்தில் கட்டாயம் நிகழும் என்பதை நம்மால் உணர முடிகிறது.

எனவே யார் இமாம் மஹ்தீயின் வருகையை மறுக்கின்றார்களோ அவர்களுக்கு இதுபோன்ற ஆதாரங்கள் தக்க பதிலடியாக அமைந் துள்ளது.

## இமாம் மஹ்தீ உடன் பைஅத்

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*உங்களிடம் இருக்கும் (கஃபாவின்) புதையலை எடுக்க மூன்று*

இளவரசர்கள் யுத்தம் செய்து, முடிவில் ஒருவரும் வெற்றி அடைய மாட்டார்கள். அப்போது கிழக்கிலிருந்து (ஷாம்) கருப்புக் கொடி களையுடைய (ஒரு படை) வரும். எந்த கூட்டத்தாரும் அவர்களை வெல்ல முடியாத அளவிற்கு அவர்கள் யுத்தம் செய்வார்கள். (அந்தப்படையில் தான் மஹ்தீ இருப்பார்) நீங்கள் அவரைக் கண்டால் பனிக்கட்டியின் மீது தவழ்ந்தேனும் அவரி டம் பைஅத் செய்து கொள்ளுங்கள். அவர் தான் அல்லாஹ்வின் கலீஃபா மஹ்தீ ஆவார்.

**அறிவிப்பவர் : சவ்பான் (ரலி)**
**நூல்கள் : இப்னு மாஜா (4074) பஸ்ஸார், ஹாகிம்.**

இந்தக் கருப்புக் கொடி சம்பந்தமாக இன்னொரு அறிவிப்பும் வருகிறது.

நீங்கள் கருப்புக் கொடிகளை (உடைய படையை) கண்டால் அவர்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள். ஏனென்றால், அதில் தான் அல்லாஹ்வின் கலீஃபா மஹ்தீ இருப்பார்.

**அறிவிப்பவர் : சவ்பான் (ரலி) நூல் : அஹ்மத் (21353)**

இந்த கருப்புக் கொடி சம்பந்தமாக வரும் அறிவிப்புகளின் தரம் குறித்து அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றது.

சில அறிஞர்கள் இந்த ஹதீஸ் பலகீனமானது என்று கூறுகிறார்கள். இமாம் அல்பானியின் கருத்தும் பலகீனமானது என்பது தான்.

வேறு சில அறிஞர்கள் இது பலமான ஸஹீஹான ஹதீஸ் என்று கூறுகிறார்கள். இமாம் இப்னு கஸீர் மற்றும் இமாம் தஹபீயின் கருத்தும் இது தான்.

எப்படியிருந்தாலும் அவர்கள் அநியாயக்காரர்களை அழித்து பூமியில் நீதத்தை நிலைநாட்டுவார்கள். நாம் அவர்களுடன் பைஅத் (உடன்படிக்கை) செய்து அவர்களுடன் போராட வேண்டும்.

## இமாம் மஹ்தீயின் அங்க அடையாளங்கள்:

இமாம் மஹ்தீ (அலை) அவர்களின் முழுத் தோற்றம் குறித்து

ஆதாரப்பூர்வமான அறிவிப்புகளில் எந்த குறிப்பும் வரவில்லை என்றாலும், அவர்களின் நெற்றி மற்றும் மூக்கைப் பற்றி மட்டும் அபூதாவூதில் ஒரு அறிவிப்பு வந்துள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மஹ்தீ எனது சந்ததியைச் சேர்ந்தவராவார். அவர் படர்ந்த நெற்றி யையும், எடுப்பான மூக்கையும் உடையவராவார். அநியாயங் களும், அக்கிரமும் நிரம்பியிருக்கும் இப்பூமியில் அவர் நீதி யையும், அமைதியையும் நிலைநாட்டுவார்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : அபூதாவூத் (3736)**

இந்த அறிவிப்பை இமாம் அல்பானீ (ரஹ்) அவர்கள் ஹஸன் (நல்ல) தரத்தில் அமைந்த ஹதீஸ் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

## நபிகளாரின் சந்ததியில் இமாம் மஹ்தீயின் வருகை:

மஹ்தீ எனது குடும்பத்தைச் சேர்ந்தவராவார். ஃபாத்திமாவின் சந்ததிகளில் உள்ளவராவார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : உம்மு ஸலமா (ரலி) நூல் : அபூதாவூத் (3735)**

அதிலும் குறிப்பாக ஃபாத்திமாவின் மகனான ஹஸன் (ரலி) அவர்களின் சந்ததியில் இமாம் மஹ்தீ வருவார்கள் என்று அதிக மான அறிஞர்கள் கூறுகிறார்கள்.

மஹ்தீ எங்களைச் சார்ந்தவராவார். அஹ்லே பைத்தின் (ஃபாத்திமாவின்) சந்ததியிலிருந்து அவர் வருவார். ஓர் இரவிலே அல்லாஹ் அவரைத் தயார்படுத்துவான்.

**அறிவிப்பவர் : அலீ (ரலி) நூல் : இப்னு மாஜா (4075)**

அதாவது, இமாம் மஹ்தீ (அலை) அவர்களின் பாவங்களை அல்லாஹ் மன்னித்து, அவர்களை நேரான வழியில் செலுத்தி, அவர்களின் உள்ளத்தில் இல்ஹாமையும் (ஞான உதிப்பையும்)

ஏற்படுத்துவான் என்று இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் மேற்கூறிய ஹதீஸிற்கு விளக்கமளித்துள்ளார்கள்.

**நீதமான ஆட்சி:**

இமாம் மஹ்தீ (அலை) அவர்களின் வருகைக்கு முன் பூமி அநியாயங்களாலும், அக்கிரமங்களாலும், அடக்குமுறையாலும் நிரம்பியிருக்கும்.

மக்களை வழிநடத்தக்கூடிய ஆட்சியாளர்கள் அநியாயக்காரர் களாகவும், சர்வாதிகாரிகளாகவும் இருப்பார்கள்.

இமாம் மஹ்தீ வந்த பிறகு அவை அனைத்தையும் ஒழித்து பூமியில் நீதமான ஆட்சியை நிலைநாட்டுவார்கள். இனி பூமி முழுவதும் இஸ்லாமிய ஆட்சியே தலைதூக்கி நிற்கும்.

இப்படிப்பட்ட நீதமான ஆட்சியாளரின் மூலமாக மக்களுக்கு கிடைக்கும் நன்மைகள் குறித்து நபி (ஸல்) அவர்கள் நமக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.

எனது உம்மத்தில் கடைசிக் காலத்தில் மஹ்தீ வெளிப்படுவார். அல்லாஹ் அவருக்கு மழையை பொழிவிப்பான். பூமி செழிப் பாகும். செல்வம் பெருகும். கால்நடைகள் அதிகரிக்கும். உம்மத் (முஸ்லிம் சமுதாயம்) சங்கை பெறும். அவர் ஏழு அல்லது ஒன்பது ஆண்டுகள் வாழ்வார் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : ஹாகிம் (8823)**

இமாம் ஹாகிம், தஹபீ, அல்பானீ போன்ற அறிஞர்கள் இந்த ஹதீஸை ஸஹீஹான (பலமான) ஹதீஸ் என்று கூறியுள்ளார்கள்.

இமாம் மஹ்தீ (அலை) அவர்கள் ஏழு அல்லது ஒன்பது ஆண்டு கள் ஆட்சி செய்வார்கள் என்பதை மேற்கூறிய ஹதீஸின் மூலம் நாம் அறிய முடிகிறது. பெரும்பாலான அறிவிப்புகளில் ஏழு வருடங்கள் என்று தான் வந்துள்ளது.

அநியாயமும் போரும் நிரம்பியிருக்கும் இப்பூமியில் அமைதியை யும், நீதியையும் அவர் நிலை நிறுத்துவார். அவர் ஏழு வருடங்கள் ஆட்சி செய்வார் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : அபூதாவூத் (3736)**

## இமாம் மஹ்தீ குறித்து பல்வேறு கருத்துக்கள்:

இஸ்லாமிய சமூகத்தில் இமாம் மஹ்தீ (அலை) அவர்கள் குறித் துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

சிலர், மஹ்தீ என்று ஒரு மனிதர் கிடையாது. ஈஸா (அலை) அவர்கள் தான் மஹ்தீ என்று கூறி, இமாம் மஹ்தீ அவர்களின் வருகையை முற்றிலுமாக மறுக்கின்றனர். இது தவறான மற்றும் வழிகேடான நிலைப்பாடாகும். ஏனென்றால், இமாம் மஹ்தீ (அலை) அவர்களின் வருகை சம்பந்தமாக பல்வேறு அறிவிப்புகள் வந்துள்ளன,.

அதேப்போன்று, இமாம் மஹ்தீ சம்பந்தமாக ஷியாக்கள் எடுத்துள்ள நிலைப்பாடும் ஒரு வழிகெட்ட நிலைப்பாடாகும். அதாவது, அவர்கள் மஹ்தீ ஏற்கனவே வந்துவிட்டதாகவும், மலையில் ஒளிந்திருப்பதாகவும், கியாமத்தின் நெருக்கத்தில் வெளிப்படுவார் என்றும் கூறுகிறார்கள்.

மூன்றாவதாக இவையனைத்தையும் விட நான் தான் வாக்களிக் கப்பட்ட இமாம் மஹ்தீ என்று பிரச்சாரம் செய்தவர்கள் இந்த உம்மத்தில் அதிகம்.

இவர்கள் உலகின் பல்வேறு பகுதிகளிலும் மஹ்தீ என்று பிரச் சாரம் செய்து தன்னிடம் பைஅத் (உடன்படிக்கை) செய்யும்படி மக்களிடம் கூறி புதிய வழிகேட்டை உண்டாக்கினார்கள். அதில் மிர்ஸா குலாம் அஹ்மத் காதியானீ என்ற பொய்யனும் ஒருவன்.

தமிழ்நாட்டிலும் இப்படி ஒரு கூட்டம் இருக்கிறது. அவர்களுக்கு மஹ்தியாக்கள் என்று சொல்லப்படும். இவர்கள் ஈரோடு,

மேலப்பாளையம், கிருஷ்ணகிரி மாவட்டத்தின் பாலக்கோடு போன்ற ஊர்களில் அதிகமாக இருக்கிறார்கள். 15ஆம் நூற்றாண்டில் தன்னை மஹ்தீ என்று வாதிட்ட முஹம்மத் ஜான்பூரி என்பவனைத்தான் இவர்கள் பின்பற்றுகிறார்கள். தங்களையும் நாங்கள் மஹ்தியாக்கள் என்று பெருமையுடன் சொல்லிக்கொள்வார்கள். ஆனால், தங்களுடைய கொள்கை என்ன என்பது பற்றி அவர்களுக்கே தெரியாது.

நான் தான் மஹ்தீ என்று பிரச்சாரம் செய்தவர்களில் சிலரின் பெயரை மேலதிக விளக்கத்திற்காக நாம் இங்கு குறிப்பிடுகின்றோம்.

1. முஹம்மத் இப்னு ஹஸன் இப்னு அலீ (9-ம் நூற்றாண்டு)
2. அப்துல்லாஹ் அல்மஹ்தி பில்லாஹ் (10-ம் நூற்றாண்டு)
3. இப்னு துமார்த் (12-ம் நூற்றாண்டு)
4. முஹம்மத் ஜான் பூரி (15-ம் நூற்றாண்டு)
5. அஹ்மத் இப்னு அபீ மஹல்லா (17-ம் நூற்றாண்டு)
6. மிர்ஸா குலாம் அஹ்மத் அல்காதியானீ (19-ம் நூற்றாண்டு)
7. முஹம்மத் பின் அஸதுல்லாஹ் அல்கஹ்தானி (20-ம் நூற்றாண்டு)
8. இந்த வரிசையில் சமீப காலத்தில் தன்னை மஹ்தீ என்று வாதிடும் 'ஷகீல் பின் ஹனீஃப்' என்பவனும் அடங்குவான். இவன் பீகார் மாநிலம் 'தர்பங்கா' எனும் ஊரைச் சார்ந்தவன். இவனும் தன்னை மஹ்தீ என்று வாதிட்டு பல மக்களை குழப்பி தன் வலையில் விழச்செய்தான். மார்க்க அறிஞர்கள் பலரும் இவனைக் குறித்து காபிர் என்று எச்சரிக்கை செய்து சில புத்தகங்களையும் எழுதியுள்ளார்கள்.

## மஹ்தீ என்று வாதிடுவோரை உரச வேண்டிய தகுதிகள்:

1. இஸ்லாமிய ஆட்சியாளராக வருகை தருவார்.
2. மக்களுக்கு செல்வத்தை வாரி வழங்கும் அளவு அரசாங்கத்தை வளப்படுத்தி இருப்பார்.
3. ஃபாத்திமா (ரலி) அவர்களின் பரம்பரையிலிருந்து வருபவராக இருப்பார்.
4. தன்னை நபி என்று வாதிட மாட்டார்.
5. குர்ஆன், சுன்னாவை (நபிவழியை) மட்டுமே கடைப்பிடிப்பார்.
6. உலகம் முழுவதும் போர்க்களமாக உள்ள சூழலில் தான் வருகை தருவார்.
7. அவரின் வருகையைத் தொடர்ந்து தஜ்ஜாலின் வருகையும் ஈஸா (அலை) அவர்களின் வருகையும் நிகழும்.

மேற்கூறிய அனைத்து தகுதிகளும் யார் தன்னை மஹ்தீ என்று வாதிட்டார்களோ அவர்களிடம் கிடையாது. எனவே அவர்கள் அனைவரும் பொய்யர்களாக இருக்கிறார்கள்.



# மாபெரும் பத்து அடையாளங்கள்

## 1. தஜ்ஜாலின் வருகை:

இமாம் மஹ்தீ (அலை) அவர்களின் வருகைக்குப் பிறகு தஜ்ஜாலின் வருகை நிகழும். மாபெரும் பத்து அடையாளங்களில் தஜ்ஜாலின் வருகை மிக முக்கியமானதாகும்.

காரணம் தஜ்ஜால் என்ற கொடியவனின் வருகை மக்களின் இறைநம்பிக்கைக்கு மிகப்பெரும் சோதனையாக இருக்கும்.

உலகம் தோன்றியதிலிருந்து அழியும் வரை இவ்வளவு பெரிய மோசமான குழப்பத்தை உலகம் சந்தித்திருக்காது.

எனவே தஜ்ஜால் பற்றிய முழு விவரத்தையும் நாம் அறிந்திருத்தல் அவசியம். அப்படி அறிந்தால் தான் அவன் வருகையின் போது இறைநம்பிக்கையில் தடுமாறாமல் உறுதியாக இருக்க முடியும்.

### தஜ்ஜால் என்பதன் பொருள் :

தஜல் எனும் அரபி வார்த்தையிலிருந்து வந்த பெயர்ச்சொல்லே தஜ்ஜால் என்பதாகும். தஜ்ஜால் என்றால் முலாம் பூசுபவன், பொய்யன், மறைப்பவன், கண்கட்டு வித்தை செய்பவன் என்பது பொருளாகும். மஸீஹ் எனும் அரபிச் சொல்லுக்கு பயணிப்பவன், தடவுபவன், தடவப்பட்டவன் என்பது பொருளாகும்.

தஜ்ஜால் உண்மையைப் பொய்யைப் போன்றும், பொய்யை உண்மையைப் போன்றும் காட்ட முடியும் என்பதாலும், உலகம் முழுவதும் பயணம் செய்து அதை தனது ஆட்சியின் கீழ் கொண்டு வருவான் என்பதாலும், அவனது ஒரு கண் தடவப்பட்டது போல் தட்டையாக இருக்கும் என்பதாலும் அவன் மஸீஹுத்தஜ்ஜால் என்று அழைக்கப்படுகின்றான்.

## தஜ்ஜாலைப் பற்றி எச்சரிக்கை :

அபாய மனிதன் தஜ்ஜால் குறித்து கடுமையான எச்சரிக்கையை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த சமுதாயத்திற்கு செய்துள்ளார்கள். காரணம், முஸ்லிம்கள் அவனது குழப்பத்தில் சிக்கிக் கொள்ளாமல் தன் இறைநம்பிக்கையை காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பதற்காக.

ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்டது முதல் (மறுமை) நாள் வரும் வரை தஜ்ஜால் விஷயத்தைத் தவிர பெரிய விஷயம் ஏதும் ஏற்படுவதில்லை என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : இம்ரான் பின் ஹுஸைன் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5645)**

நூஹ் (அலை) அவர்களுக்குப் பிறகு வந்த எந்த நபியும் தஜ்ஜாலைப் பற்றி தமது சமுதாயத்திற்கு எச்சரிக்காமல் விட்டதில்லை. நிச்சயமாக நானும் அவனைப் பற்றி உங்களுக்கு எச்சரிக்கிறேன் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (5628)**

நபித்தோழர்களெல்லாம் பயப்படும் அளவிற்கு நபி (ஸல்) அவர்கள் அபாய மனிதன் தஜ்ஜால் குறித்து எச்சரிக்கை செய்தார்கள்.

ஒரு நாள் காலையில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அவன் தொடர்பாக(ப் பேசியபோது) அவர்கள் (சில சமயம் குரலைத்) தாழ்த்தவும், (சில சமயம்) உயர்த்தவும் செய்தார்கள். இறுதியில் அவன், (அருகிலுள்ள) பேரீச்சமரத் தோப்புகளுக்கிடையே இருக்கிறானோ என்று நாங்கள் என்னும் அளவுக்குப் பேசினார்கள். பின்னர் நாங்கள் (மறுபடியும்) மாலைப்பொழுதில் நபியவர்களிடம் வந்தோம். அப்போது தஜ்ஜாலைக் குறித்த அச்சம் எங்கள் முகங்களில் இருப்பதை அவர்கள் அறிந்து கொண்டு, ''உங்களுக்கு என்ன நேர்ந்தது?'' என்று கேட்டார்கள், நாங்கள் ''அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் (இன்று) காலையில் தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டீர்கள்.

(அப்போது) அவனைப் பற்றி(க் குரலை)த் தாழ்த்தியும், உயர்த்தியும் பேசினீர்கள். இறுதியில் அவன், (அருகிலுள்ள) பேரீச்ச மரத் தோப்புகளுக்கிடையே இருக்கிறானோ என்று நாங்கள் எண்ணும் அளவுக்குப் பேசினீர்கள். (அதுதான் எங்கள் அச்சத்திற்கு காரணம்)'' என்று கூறினோம்.

**அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5629)**

## தஜ்ஜாலின் உருவ அமைப்பு:

முஸ்லிம் சமுதாயத்தில் தஜ்ஜாலைக் குறித்து பல்வேறு விதமான கருத்துக்கள் நிலவுகின்றன. தஜ்ஜால் என்பது ஒரு தீய சக்தியைப் பற்றியது என்று சிலர் கூறுகின்றனர்.

இன்னும் சிலர், தஜ்ஜால் என்பவன் மனிதன் கிடையாது. மனிதனாக உருவகப்படுத்தப்பட்ட வேறு சில அம்சங்கள் அல்லது பொருட்கள் ஆகும் என்று கூறுகின்றனர்.

இன்னும் பலரோ தஜ்ஜாலுக்கு நபிமொழிகளில் வராத உருவ அமைப்பைக் கொடுத்து வினோதமான தஜ்ஜாலை சித்தரிக்கின்றனர்.

இந்த அனைத்துக் கருத்துக்களும் தவறானதே. எனவே தஜ்ஜாலின் உருவ அமைப்பு குறித்து நபிமொழிகளில் வந்திருப்பதை நாம் அவசியம் அறிந்திருக்க வேண்டும். அப்பொழுது தான் உண்மையான தஜ்ஜால் யார் என்பதை நம்மால் நிரூபிக்க முடியும்.

## தஜ்ஜாலின் கண்கள்:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடையே தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போது அவர்கள் ''அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்லன். அறிந்து கொள்ளுங்கள்! மசீஹுத் தஜ்ஜால் வலக்கண் குருடானவன் ஆவான். அவனது கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருக்கும் என்று கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5619)**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

எல்லா இறைத்தூதர்களும் தம் சமுதாயத்தாரை மகா பொய்யனான ஒற்றைக் கண்ணன் (தஜ்ஜால்) குறித்து எச்சரிக்காமல் இருந்ததில்லை. அறிந்து கொள்ளுங்கள். அவன் ஒற்றைக் கண்ணன் ஆவான். ஆனால் உங்கள் இறைவன் ஒற்றைக் கண்ணன் அல்லன். அந்தப் பொய்யனுடைய இரு கண்களுக்கிடையே காஃப், ஃப, ரா (இறைமறுப்பாளன், காஃபிர்) என்று (தனித்தனி எழுத்துக்களில்) எழுதப்பட்டிருக்கும்.

**அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி) நூல் : முஸ்லிம் (5620)**

அல்லாஹ்வின் தூதுர் (ஸல்) அவர்கள், ''தஜ்ஜால் ஒரு கண் தடவப்பட்டவன் ஆவான். அவனுடைய இரு கண்களுக்கிடையே காஃபிர் என்று எழுதப்பட்டிருக்கும். அதை ஒவ்வொரு முஸ்லிமும் வாசிப்பார் என்று கூறிவிட்டு, அதைத் தனித்தனியாக (காஃப், ஃப, ரா என்று) உச்சரித்துக் காட்டினார்கள்.

**அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி) நூல் : முஸ்லிம் (5622)**

மேலுள்ள ஹதீஸில் வலது கண் ஊனமுற்றவன் (குறையுடையவன்) என்று வந்துள்ளது. ஆனால் மற்றொரு ஹதீஸில் இடது கண் என்றும் வந்துள்ளது. இதற்கு மார்க்க அறிஞர்களின் விளக்கம்.

தஜ்ஜாலின் இரண்டு கண்களுமே குறையுடையது தான். ஒரு கண் தடவப்பட்டிருக்கும். இன்னொரு கண் திராட்சையைப் போன்று துருத்திக் கொண்டிருக்கும்.

தஜ்ஜாலின் தோற்றத்தில் அடுத்த அடையாளமாக அவனுடைய முகத்தில் ஒரு சதைக்கட்டி இருக்கும் என்பதாகவும் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஊனமுற்ற கண்ணின் மூக்கை ஒட்டிய ஓரத்தில் கடினமான சதைக் கட்டி ஒன்று தென்படும் எனவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5624)**

இன்னும் கூடுதல் அடையாளங்களாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தஜ்ஜாலின் நிறத்தைப் பற்றியும், அவனது உடல் வலிமையைப் பற்றியும், அவனது தலைமுடியைப் பற்றியும், அவனது உயரத்தைப் பற்றியும் நமக்கு முன்னறிவிப்புச் செய் துள்ளார்கள்.

1. அவன் சிவந்த நிறமுடையவனாக இருப்பான்.

2. திடகாத்திரமான உடலமைப்புடன் இருப்பான்.

3. சுருட்டைத் தலைமுடியுள்ளவனாக இருப்பான்,

4. மேலும், அவன் (தோற்றத்தில்) இப்னு கதன் என்பவருக்கு ஒப்பானவனாக இருப்பான்.

(இந்த அடையாளங்கள் யாவும் நபி (ஸல்) அவர்களின் கனவில் காட்டப்பட்டவையாகும்.)

**அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) நூல் : புகாரீ (3441)**

இப்னு கத்தன் என்பவருடைய முழுப்பெயர் அப்துல் உஸ்ஸாபின் கத்தன் பின் அம்ர் என்பதாகும். இவருடைய தாயார் கதீஜா (ரலி) அவர்களின் சகோதரி ஹாலா பின்த் குவைலித் ஆவார். 'குஸாஆ' குலத்தைச் சேர்ந்த இவர் அறியாமைக் காலத்தில் வாழ்ந்து மரணித்தவர். நபி (ஸல்) அவர்கள் இவருடைய தோற்றத்தை தஜ்ஜாலுக்கு ஒப்பிட்டுள்ளார்கள்.

**(நூல்: உம்தத்துல் காரீ)**

தஜ்ஜாலின் உடல் அமைப்பு சம்பந்தமாக அவனது கழுத்து மற்றும் நெற்றி குறித்து முஸ்னது அஹ்மதில் ஒரு அறிவிப்பு வந்துள்ளது.

தஜ்ஜால் பரந்த நெற்றியுடையவனாகவும், கழுத்து விசாலமான வனாகவும் இருப்பான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல்: அஹ்மத் (7564)**

தஜ்ஜாலின் உயரம் சம்பந்தமாக அபூதாவூதில் ஒரு அறிவிப்பு வந்துள்ளது.

*(அதில்) அவன் குள்ளமான மனிதனாக இருப்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.*

***அறிவிப்பவர் : உபாததுப்னு ஸாமித் (ரலி)***
***நூல் : அபூதாவூத் (3763)***

*மேலும் தஜ்ஜால் ஒரு திடகாத்திரமான இளைஞனாக இருப்பான் என்றும் அவன் சந்ததி அற்றவனாக இருப்பான் என்றும் நபி (ஸல்) அவர்கள் நமக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.*

*தஜ்ஜால் சுருள் முடி கொண்ட ஓர் இளைஞன் ஆவான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5629)***

*தஜ்ஜால் ஒரு காஃபிர். மேலும் அவன் சந்ததிகளற்றவன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.*

***அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : முஸ்லிம் (5608)***

*இங்கு வந்திருக்கும் நபிமொழிகள் தஜ்ஜாலின் அங்க அடை யாளங்களை தெளிவாக விளக்கிக் கூறுவதுடன், தஜ்ஜாலின் வருகையை மறுப்பவர்களுக்கும் அவனை தவறான முறையில் சித்தரிப்பவர்களுக்கும் தக்க பதிலடிகளாக உள்ளன.*

## தஜ்ஜால் பிறந்துவிட்டானா?

*தஜ்ஜால் என்பவன் ஏற்கனவே படைக்கப்பட்டுவிட்டானா? அல்லது இனிமேல்தான் படைக்கப்படுவானா? என்பதைப் பற்றியும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.*

*இது சம்பந்தமாக தமீமுத்தாரீ (ரலி) அவர்கள் தஜ்ஜாலைக் குறித்து நபி (ஸல்) அவர்களிடம் சொன்ன சம்பவம் முஸ்லிமில் நீண்ட அறிவிப்பாக வருகிறது. தஜ்ஜால் பற்றிய கூடுதல் விவரங் கள் அதில் கிடைப்பதால் அந்த ஹதீஸை நாம் முழுமையாகப் பார்ப்போம்.*

*நபி (ஸல்) அவர்களின் அழைப்பாளர் தொழுகை நேரம் வந்து*

விட்டது என்று அறிவிப்பதை செவியுற்று நான் பள்ளிவாசல் சென்று நபி (ஸல்) அவர்களுடன் தொழுதேன். தொழுகையை முடித்ததும் நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது அமர்ந்தார்கள்.

ஒவ்வொருவரும் தொழும் இடத்திலேயே இருங்கள் என்று கூறிவிட்டு, ''நான் உங்களை ஏன் கூட்டினேன் என்பது தெரியுமா?'' என்று கேட்டார்கள்.

''அல்லாஹ்வும் அவனது தூதரும் நன்கு அறிந்தவர்கள்!'' என்று நாங்கள் கூறினோம். ''அல்லாஹ்வின் மீது ஆணையாக! உங்களை அச்சமூட்டவோ, ஆர்வமூட்டவோ நான் ஒன்று கூட்டவில்லை. தமீமுத்தாரீ என்பவர் கிறித்தவராக இருந்து பின் என்னிடம் பைஅத் செய்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர். தஜ்ஜால் பற்றி நான் உங்களிடம் கூறியிருப்பது போல் ஒரு செய்தியை அவர் என்னிடம் கூறினார். அவர் கூறியதாவது:

லக்ம், ஜுதாம் ஆகிய குலங்களைச் சேர்ந்த முப்பது நபர்களுடன் கப்பலில் நான் பயணம் செய்தேன். அப்போது கடல் அலை ஒரு மாத காலம் எங்களைக் கடலில் அலைக்கழித்துவிட்டது. பிறகு நாங்கள் கடலில் சூரியன் அஸ்தமிக்கும் (மேற்குத்) திசையில் ஒரு தீவில் ஒதுங்கினோம். பிறகு நாங்கள் சிறிய மரக்கலம் ஒன்றில் அமர்ந்து அங்கிருந்த தீவுக்குள் சென்றோம்.

அங்கு (உடல் முழுவதும் அடர்ந்த) முடிகள் நிறைந்த ஒரு பிராணி எங்களைச் சந்தித்தது. அதன் முன்பகுதி எது, பின்பகுதி எது என்றே எங்களால் அறிய முடியவில்லை. (உடல் முழுவதும்) முடிகள் நிறைந்திருந்ததே அதற்கு காரணம்.

அப்போது, ''நாங்கள், ''உனக்குக் கேடுதான். நீ யார்?'' என்று கேட்டோம். அதற்கு அந்தப் பிராணி, ''கூட்டத்தாரே! இந்த மண்டபத்திற்கு உள்ளே இருக்கும் மனிதரை நோக்கிச் செல்லுங் கள். அவர் உங்களைப் பற்றிய செய்தி அறிய ஆவலாக உள்ளார் என்று சொன்னது.

அந்தப் பிராணி ஒரு மனிதரைப் பற்றிக் குறிப்பிட்டதைக் கேட்டு

அது ஷைத்தானாக இருக்குமோ என்று நாங்கள் பயந்துவிட்டோம். உடனே நாங்கள் அந்த மனிதனை நோக்கி விரைந்து நடந்தோம். நாங்கள்அந்த மண்டபத்தைச் சென்றடைந்தோம். அங்கு மாபெரும் உருவமுடைய மனிதன் ஒருவன் இருந்தான். அவனைப் போன்ற ஒரு படைப்பை நாங்கள் ஒருபோதும் கண்டதில்லை. அவன் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தான். அவனுடைய கைகள் அவனது தோளோடு சேர்த்து வைத்து இறுகக் கட்டப்பட்டிருந்தன. அவனுடைய முழங்கால்கள் கணுக்கால்களோடு சேர்த்துச் சங்கிலி யால் பிணைக்கப்பட்டிருந்தன. அவனிடம் நாங்கள், ‘‘உனக்குக் கேடுதான். நீ யார்?’’ என்று கேட்டோம்.

அதற்கு அவன், ‘‘என்னைப் பற்றி அறிய சக்தி பெற்றுவிட்டீர்கள். எனவே நீங்கள் யார்? என எனக்குக் கூறுங்கள்?’’ என்றான். ‘‘நாங்கள் அரபியர்கள். ஒரு கப்பலில் நாங்கள் பயணம் செய்தபோது, ஒரு மாதமாக கடல் எங்களை அலைக்கழித்ததால் இந்த தீபகற்பத்தில் நுழைந்தோம். அடர்ந்த மயிர்களைக் கொண்ட ஒரு பிராணியைக் கண்டோம். அப்பிராணி நான் தான் ‘‘ஜஸ்ஸாஸா’’ ஆவேன். இந்த மடாலயத்தில் உள்ள மனிதரை சந்தியுங்கள் என்று கூறியது. எனவே உம்மிடம் விரைந்து வந்தோம்.’’ என்று கூறினோம்.

அப்போது அவன், ‘‘பைசான் பேரீச்சந்தோட்டத்தைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்’’ என்றான். ‘‘அந்த தோட்டத்தில் நீ எதைப்பற்றி கேட்கிறாய்?’’ என்று கேட்டோம்.

அதற்கு அவன் ‘‘அந்தப் பேரீச்சந்தோட்டத்தின் மரங்கள் கனிகள் தருகின்றனவா என்பதைப் பற்றியே நான் கேட்கிறேன்’’ என்றான். நாங்கள், ‘‘ஆம்’ என்று பதிலளித்தோம். அவன், ‘‘அறிந்துகொள் ளுங்கள். அது கனியே தராத காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது’’ என்று கூறினான்.

பிறகு ‘‘தபரிய்யா நீர்நிலைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்’’ என்று கேட்டான். ‘‘அதில் எதைப்பற்றி நீ கேட்கிறாய்?’’ என்று நாங்கள் கேட்டோம். அதற்கு அவன், ‘‘அதில் தண்ணீர் இருக்கிறதா?’’ என்று கேட்டான். நாங்கள், ‘‘அதில் தண்ணீர் அதிகமாக இருக்கிறது’’ என்று பதிலளித்தோம். அவன், ‘‘அறிந்து

கொள்ளுங்கள். அதிலுள்ள நீர் வற்றும் காலம் நெருங்கிவிட்டது'' என்று சொன்னான்.

பிறகு ''(ஷாம் நாட்டிலுள்ள) ஸுஃகர் நீரூற்றைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள்'' என்று கேட்டான். நாங்கள், ''அதில் எதைப் பற்றி நீ கேட்கிறாய்?'' என்றோம். அதற்கு அவன் அந்த ஊற்றில் தண்ணீர் உள்ளதா? அந்த ஊற்றுத் தண்ணீரால் மக்கள் பயிர் செய்கிறார்களா?'' என்றுகேட்டான். நாங்கள், ''ஆம் அதில் தண்ணீர் அதிகமாக உள்ளது. அங்குள்ளவர்கள் அந்தத் தண்ணீரால் விவசாயம் செய்கிறார்கள்'' என்று சொன்னோம்.

பிறகு அவன், ''உம்மி சமுதாயத்தில் தோன்றக்கூடிய நபியின் நிலை என்ன? என்பதை எனக்குக் கூறுங்கள்'' என்று அவன் கேட்டான். ''அவர் மக்காவிலிருந்து புறப்பட்டு, மதீனாவில் தங்கியிருக்கிறார்!'' என்பதைக் கூறினோம். ''அரபுகள் அவருடன் போர் செய்தார்களா?'' என்று அவன் கேட்க, நாங்கள், ''ஆம்'' என்றோம். ''போரின் முடிவு எவ்வாறு இருந்தது?'' என்று அவன் கேட்டான். அதற்கு நாங்கள், ''அவர் தன்னை அடுத்துள்ள அரபியரையெல்லாம் வெற்றி கொண்டுவிட்டார்'' என்று கூறினோம். அவருக்கு வழிப்படுவதே அவர்களுக்கு நல்லதாகும்'' என்று அவன் கூறிவிட்டு, ''நான் இப்போது என்னைப் பற்றிக் கூறப்போகிறேன். நான் தான் 'தஜ்ஜால்' ஆவேன். (இங்கிருந்து) வெளியேற வெகுவிரைவில் எனக்கு அனுமதி வழங்கப்படலாம். அப்போது நான் வெளியே வருவேன். பூமி முழுவதும் பயணம் செய்வேன். (நான் பயணிக்கக் கூடிய) நாற்பது நாட்களில் எந்த ஊரையும் அடையாமல் இருக்க மாட்டேன். ஆயினும் மக்கா, மதீனா ஆகிய இரு ஊர்களைத் தவிர, அவ்விரு ஊர்களுக்குள் நான் நுழைய முயலும் போதெல்லாம் தம் கையில் வாளுடன் ஒரு வானவர் எதிர்கொண்டு தடுத்து நிறுத்துவார். அவற்றின் ஒவ்வொரு வழியிலும் அதைக் காக்கும் வானவர்கள் இருப்பார்கள்'' என அவன் கூறினான்.

இதைத் தமீமுத்தாரீ அவர்கள் தம்மிடம் கூறியதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும் தமது கைத்தடியால் மிம்பர்

*மீது தட்டி இது (மதீனா) தைபா (தூய நகரம்) இது தைபா எனக் கூறினார்கள். இதே விஷயத்தை முன்பே நான் உங்களிடம் கூறியிருக்கிறேன் அல்லவா? என்று மக்களிடம் கேட்டார்கள். மக்கள் ''ஆம்'' என்றனர். அறிந்து கொள்க! நிச்சயம் அவன் ஷாம் நாட்டின் கடல் பகுதியில் இருக்கிறான். அல்லது யமன் நாட்டின் கடல் பகுதியில் இருக்கிறான்.இல்லை அவன் கிழக்குத் திசையில் இருக்கிறான் என கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5638)***

தஜ்ஜால், நபி (ஸல்) அவர்களின் காலத்துக்கு முன்பே பிறந்து ஏதோ ஓரிடத்தில் இருந்து வருகிறான் என்பதையும், கியாமத்தின் நெருக்கத்தில் அவன் வெளிப்படுவான் என்பதையும் மேற்கண்ட அறிவிப்பிலிருந்து நாம் விளங்கிக் கொள்ள முடியும்.

## தஜ்ஜால் வெளிப்படும் இடம் :

*''தஜ்ஜால் சிரியாவுக்கும் இராக்குக்கும் இடையே உள்ள ஒரு பகுதியிலிருந்து புறப்பட்டு வந்து, வலப்பக்கத்திலும் இடப்பக்கத் திலும் அக்கிரமங்களைக் கட்டவிழ்த்துவிடுவான். அல்லாஹ்வின் அடியார்களே! அப்போது நீங்கள் உறுதியோடு இருங்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

***அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5629)***

*'குராஸான்' என்னும் கீழ்த்திசைப் பகுதியிலிருந்து தஜ்ஜால் வெளிப்படுவான். கேடயங்கள் போல் (வட்டமான) முகம் கொண்ட கூட்டத்தினர் அவனைப் பின்பற்றுவார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.*

***அறிவிப்பவர் : அபூபக்ர் (ரலி) நூல் : திர்மிதீ (2163)***

## தஜ்ஜாலின் மாயாஜாலங்களும், குழப்பங்களும் :

சாமியார்கள், போலி மதகுருமார்கள் சில தந்திரங்களையும், கண்கட்டுவித்தைகளையும் தன்னிடம் வைத்துக் கொண்டு

மக்களை வழிகேட்டின் பக்கம் அழைப்பது போல், தஜ்ஜாலும் சில அற்புதங்களை தன்னுடன் வைத்துக் கொண்டு மக்களை தன் பாதையில் அழைப்பான். தன்னை இறைவன் என்று அவன் வாதிடுவான். தன்னை கடவுளாக மக்கள் நம்ப வேண்டும் என்பதற்காக அல்லாஹ்வின் மூலமாக அவனுக்கு வழங்கப்பட்ட சிலஅற்புதங்களையும்செய்துகாட்டுவான். மந்திரவாதிகளிடமும், சூனியக்காரர்களிடமும் தங்கள் இறை நம்பிக்கையை இழந்து கொண்டிருக்கிற சில பாமர முஸ்லிம்கள், தஜ்ஜாலிடம் தங்களது ஈமானை இழக்க வேண்டிய நிலையே ஏற்படும். (அல்லாஹ் பாதுகாப்பானாக) அந்த அளவுக்கு அவன் அற்புதங்கள் நிகழ்த்தும் சக்தியைப் பெற்றிருப்பான்.

‘‘அவன் ஒரு சமுதாயத்தாரிடம் வந்து (தன்னை இறைவன் என்று ஏற்றுக்கொள்ளுமாறு) அவர்களுக்கு அழைப்பு விடுப்பான். அவர்களும் அவன் மீது நம்பிக்கை கொண்டு அவனது அழைப் புக்குப் பதிலளிப்பார்கள். உடனே வானத்திற்கு (மழை பொழியு மாறு) அவன் கட்டளையிட, மழை பொழியும். பூமிக்கு(த் தாவரங்களை முளைக்கச் செய்யுமாறு) கட்டளையிட, அது முளைய வைக்கும். (அவற்றை மேய்ந்து) அவர்களின் கால்நடைகள் ஏற்கனவே இருந்ததை விட நீண்ட திமில்களைக் கொண்டவையாகவும் மடி கனத்தவையாகவும் வயிறு நிரம் பியவையாகவும் மாலையில் (வீடு) திரும்பும்.

பின்னர், அவன் மற்றொரு சமுதாயத்தாரிடம் வந்து, (தன்னை இறைவன் என்று ஏற்றுக்கொள்ளுமாறு) அவர்களுக்கும் அழைப்பு விடுப்பான். ஆனால் அவனது அழைப்பை அவர்கள் நிராகரித்துவிடுவார்கள். அவர்களிடமிருந்து அவன் திரும்பிச் சென்றுவிடுவான். அதனால், அவர்கள் பஞ்சத்தாலும் வறட்சி யாலும் பாதிக்கப்பட்டவர்களாக காலைப்பொழுதை அடைவார் கள். அவர்களின் கைகளில் அவர்களின் செல்வம் ஏதும் (எஞ்சி) இராது.

அவன் பாழடைந்த இடமொன்றைக் கடந்து செல்வான். அதைப் பார்த்து, ‘‘உன்னிடம் இருக்கின்ற புதையல்களை வெளிப்படுத்து’’

என்று கூறுவான். அப்போது (வெளிப்படும்) அந்தப் புதையல்கள், ராணித் தேனீக்களை (பின்பற்றிச் செல்லும் தேனீக்களை)ப் போன்று அவனைப் பின்தொடர்ந்து செல்லும்.

பின்னர், அவன் வாட்ட சாட்டமான இளைஞர் ஒருவரை அழைத்து, அவரை வாளால் வெட்டி இரு துண்டுகளாக்கி அம்பெய்யும் தூரத்திற்கு இடைவெளி விட்டு (அவ்விரண்டையும்) போடுவான். பின்னர் அந்தச் சடலத்தை அழைப்பான். உடனே அந்த இளைஞர் முகம் ஒளிர சிரித்துக்கொண்டே எழுந்து வருவார்.''

**அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5629)**

தஜ்ஜால் பிறவிக் குருடையும், வெண் குஷ்டத்தையும் நீக்குவான். இறந்தவர்களையும் உயிர்ப்பிப்பான். மக்களிடம் ''நானே உங்கள் இறைவன்'' என்பான். ''யாரேனும் நீ தான் என் இறைவன்'' என்று கூறினால் அவன் சோதனையில் தோற்றுவிட்டான். ''அல்லாஹ் தான் என் இறைவன்'' என்று யார் கூறி அதிலேயே மரணித்து விடுகிறாரோ அவர் தஜ்ஜாலின் சோதனையிலிருந்து விடுபட்டு விட்டார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஸமுரா பின் ஜுன்துப் (ரலி)**
**நூல் : அஹ்மத் (19292)**

தஜ்ஜாலுடன் என்ன இருக்கும் என்பதை அவனைவிட நான் நன்கறிந்தவன். ஓடுகின்ற இரு நதிகள் அவனிடம் இருக்கும். அவற்றில் ஒன்று வெளிப்பார்வைக்கு வெண்மையான நீராகக் காட்சி தரும். மற்றொன்று வெளிப்பார்வைக்கு கொழுந்து விட்டெரியும் நெருப்பாகக் காட்சி தரும். அந்த இடத்தை அடைபவர் நெருப்பாகக் காட்சியளிக்கும் நதிக்குச் சென்று, கண்ணை மூடிக் கொண்டு தலையைத் தாழ்த்தி அதிலிருந்து சிறிது அருந்தட்டும். ஏனெனில், அது குளிர்ந்த நீராகும்'' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**அறிவிப்பவர் : ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5624)**

''தஜ்ஜால் (யுக முடிவு நாளுக்கு முன்) புறப்பட்டு வருவான்.

அவனுடன் நீரும் நெருப்பும் இருக்கும். மக்களுக்கு நீராகக் காட்சி தருவது (உண்மையில்) கரிக்கும் நெருப்பாகும். மக்களுக்கு நெருப் பாகக் காட்சி தருவது (உண்மையில்) குளிரான சுவை நீராகும். உங்களில் யார் அந்த இடத்தை அடைகிறாரோ அவர் நெருப்பாக காட்சியளிப்பதில் விழட்டும்! ஏனெனில், அது நல்ல சுவை நீராகும்'' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஹுதைஃபா பின் அல்யமான் (ரலி)**

**நூல் : முஸ்லிம் (5626)**

''அவனைப் பின்பற்றியவர்கள் தவிர ஏனைய மக்கள் மிகவும் வறுமையில் இருக்கும் போது அவனிடம் மலை போல் ரொட்டி இருக்கும். அவனிடம் இரண்டு நதிகள் இருக்கும். ஒன்றை அவன் சொர்க்கம் என்பான். இன்னொன்றை நரகம் என்பான். அவன் சொர்க்கம் என்று குறிப்பிடும் நதி உண்மையில் நரகமாகும். அவன் நரகம் என்று குறிப்பிடும் நதி உண்மையில் சொர்க்கமாகும். மழை பொழியுமாறு வானத்திற்கு கட்டளையிடுவான். மக்கள் பார்க்கும் வகையில் மழை பெய்யும்.'' இதைக் கடவுளைத் தவிர வேறு யாரும் செய்ய முடியுமா? என்று கேட்பான்.

மக்களிடம் பேசுவதற்காக சில ஷைத்தான்களையும் தஜ்ஜாலுடன் அல்லாஹ் அனுப்புவான். இப்படி அவன் மூலமாக மிகப்பெரிய குழப்பம் நடக்கும்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)**

**நூல் : அஹ்மத் (14426)**

தஜ்ஜாலின் குழப்பங்களில் இதுவும் ஒன்று. தஜ்ஜால் ஒரு கிராம வாசியிடம் சென்று அவரிடம் சொல்வான். நான் உன்னுடைய (இறந்து போன) தாய் தந்தையை மீண்டும் உயிர்ப்பித்தால் நான் தான் உன் இறைவன் என்று நீ சாட்சி சொல்வாயா? என்று கேட்பான். அதற்கு அவர் ஆம் என்பார். உடனே இரண்டு ஷைத்தான்கள் அவருடைய தாய் தந்தையின் தோற்றத்தில் அவருக்கு காட்சியளித்து, மகனே! நீ இவனை பின்பற்றிக்கொள். இவன் தான் உன் இறைவன் என்று கூறுவார்கள்.

**அறிவிப்பவர் : அபூ உமாமா அல்பாஹிலீ (ரலி)**

**நூல் : இப்னு மாஜா (4067)**

இப்படி அதிபயங்கரமான மற்றும் வினோதமான குழப்பங்களை யெல்லாம் தஜ்ஜால் நிகழ்த்துவான். இவனுடைய அபார தந்திரங்களினால் பல அப்பாவி முஸ்லிம்கள் தங்கள் ஈமானைப் பறிகொடுத்து அவனை கடவுகளாக ஆக்கிக் கொள்வார்கள்.

இப்படிப்பட்ட நிர்க்கதியான சூழ்நிலையில் நம்முடைய ஈமான் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு பின்வரும் ஹதீஸில் வரும் ஒரு இறைநம்பிக்கையாளரின் ஈமானே நமக்கு முன்னு தாரணமாகும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

‘‘தஜ்ஜால் புறப்பட்டு வரும் போது இறைநம்பிக்கையாளர்களில் ஒருவர் அவனை நோக்கிச் செல்வார். அப்போது அவரை ஆயுதமேந்திய தஜ்ஜாலின் பாதுகாப்பு படையினர் எதிர்கொண்டு, ‘‘எங்கே செல்கிறாய்?’’ என்று கேட்பார்கள். அந்த மனிதர், ‘‘(இப்போது) புறப்பட்டிருக்கும் இந்த மனிதனை நோக்கிச் செல்கிறேன்’’ என்று பதிலளிப்பார். அதற்கு அவர்கள், ‘‘நம் இறைவனை (தஜ்ஜாலை) நீ நம்பிவில்லையா?’’ என்று கேட்பார் கள். அந்த மனிதர், ‘‘நம் இறைவன் யார் என்பது தெரியாதது அல்ல’’ என்று கூறுவார். அதற்கு அவர்கள், ‘‘இவனைக் கொல் லுங்கள்’’ என்று கூறுவார்கள்.

அப்போது அவர்களில் சிலர் சிலரிடம் ‘‘உங்கள் இறைவன் (தஜ்ஜால்) யாரையும் தானின்றி கொல்லக்கூடாதென உங்களுக்குத் தடை விதிக்கவில்லையா?’’ என்று கூறுவார்கள். ஆகவே, அவர் கள் அந்த மனிதரை தஜ்ஜாலிடம் கொண்டு செல்வார்கள். அந்த இறைநம்பிக்கையாளர் தஜ்ஜாலைக் காணும் போது, ‘‘மக்களே! இவன் தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட தஜ்ஜால் ஆவான்’’ என்று சொல்வார்.

உடனே தஜ்ஜாலின் உத்தரவின் பேரில், அவர் பிடித்துக் கொண்டு வரப்பட்டு (தூண்களுக்கிடையே) நிறுத்தப்படுவார். ‘‘இவனைப் பிடித்து இவனது தலையைப் பிளந்து விடுங்கள்’’ என்று அவன் கட்டளையிடுவான். அப்போது அவர், முதுகும் வயிறும் வீங்கும் அளவுக்கு அடிக்கப்படுவார்.

பிறகு தஜ்ஜால், ''என் மீது நீ நம்பிக்கை கொள்ளவில்லையா?'' என்று கேட்பான்,. அதற்கு அந்த மனிதர், ''நீ பெரும் பொய்யன் மசீஹ் ஆவாய்'' என்று கூறுவார். பிறகு அவரது உச்சந்தலையில் ரம்பத்தை வைத்து அறுத்து அவருடைய இருகால்கள் வரை தனித்தனியே பிளக்கும்படி கட்டளையிடப்படும். அவ்வாறே செய்து (அவரது உடலை இரு துண்டுகளாக்கியதும்) அவ்விருத் துண்டுகளுக்கிடையில் தஜ்ஜால் நடந்து வருவான்.

பிறகு அந்த உடலைப் பார்த்து, ''எழு'' என்பான். உடனே அந்த மனிதர் (உயிர் பெற்று) நேராக எழுந்து நிற்பார். பிறகு அவரிடம், ''என் மீது நம்பிக்கை கொள்கிறாயா? என்று தஜ்ஜால் கேட்பான். அதற்கு அந்த மனிதர் ''உன்னைப் பற்றி இன்னும் கூடுதலாகவே நான் அறிந்து கொண்டேன்'' என்று சொல்வார். பிறகு அந்த மனிதர், ''மக்களே! (இவன் இவ்வாறெல்லாம் செய்வதால் இவனை இறைவன் என நம்பிவிடாதீர்கள்) இவன் எனக்குப் பிறகு மக்களில் வேறெவரையும் எதுவும் செய்ய முடியாது'' என்று கூறுவார்.

உடனே தஜ்ஜால் அவரை அறுப்பதற்காகப் பிடிப்பான். ஆனால், அப்போது அவரது பிடரியிலிருந்து காறை எலும்பு வரையுள்ள பகுதி செம்பாக மாறிவிடும். ஆகவே, அவனால் அவரை ஒன்றும் செய்ய முடியாது.

பிறகு தஜ்ஜால் அந்த மனிதரின் கைகளையும் கால்களையும் பிடித்துத் தூக்கியெறிவான். அந்த மனிதரை தஜ்ஜால் நெருப்பில் தூக்கியெறிந்து விட்டான் என மக்கள் எண்ணிக்கொள்வார்கள். ஆனால், அவர் சொர்க்கத்தில் தான் வீசப்பட்டிருப்பார்.

''இந்த மனிதர் தான் அகிலத்தின் அதிபதியான அல்லாஹ்விடம் மக்களிலேயே மகத்தான உயிர்த்தியாகம் செய்தவர் ஆவார்'' என்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

**அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : முஸ்லிம் (5632)**

## தஜ்ஜாலின் படை மற்றும் ஆட்சி:

உலகம் முழுவதுக்குமான அதிபதி தானே என்றும், இந்த உலகம்

*முழுவதையும் படைத்த கடவுளும் தானே என்றும் தஜ்ஜால் வாதிடுவான். தஜ்ஜால் தன் நாவன்மை மற்றும் மாய தந்திரங்களின் மூலம் மக்களை எளிதில் கவரக்கூடியவனாக இருப்பான். இவனை சந்திக்கும் பக்திமான்கள் பலரும் மேற்சொன்ன இவனின் அற்புதத்தின் மூலம் இவனிடம் சரணடைவார்கள். ஆண்களை விட பெண்கள் அதிக அளவில் இவனைப் பின்பற்றக்கூடியவர் களாக இருப்பார்கள்.*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*''தஜ்ஜாலைப் பின்தொடர்ந்து 'அஸ்பஹான்' (ஈரான்) நாட்டைச் சேர்ந்த யூதர்களில் எழுபதாயிரம் பேர் வருவார்கள். அப்போது அவர்கள் 'தயாலிசா' எனும் (கோடு போட்ட கெட்டியான) ஒரு வகை ஆடை அணிந்திருப்பார்கள்.''*

***அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி) நூல் : முஸ்லிம் (5643)***

*''பமிரிகனாத் என்னும் இந்த உவர் நிலங்களுக்கு தஜ்ஜால் புறப் பட்டுவருவான். அப்போது அதிகமான பெண்கள் அவனைப் பின்பற்றிச் செல்வார்கள். எந்த அளவுக்கெனில், (அன்று) ஒவ் வொரு ஆணும், தனது மனைவி, தாய், மகள், சகோதரி, மாமி ஆகி யோரிடம் சென்று அவர்கள் தஜ்ஜாலைப் பின்பற்றிச் சென்றுவிடக் கூடாது என அஞ்சி, அவர்களைக் கயிற்றினால் கட்டிவைப்பான்'' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி) நூல் : அஹ்மத் (5099)***

*ஆக அதிகமான பெண்களாலும், யூதர்களாலும், கிராமப்புற மக்களாலும் தஜ்ஜாலின் படை அமைந்திருக்கும். கிராமப்புற மக்கள்அறியாமையின்காரணமாகதஜ்ஜாலைப்பின்பற்றுவார்கள். பெண்கள் தஜ்ஜால் காட்டும் உலக மோகத்தால் அவனைப் பின்பற்றுவார்கள். ஆண்களை விட பெண்களே அதிக அளவில் தஜ்ஜாலைப் பின்பற்றுவார்கள் என்று இந்த நபிமொழி கூறுவதால், பெண்கள் கூடுதலான எச்சரிக்கையுடன் இருந்து கொள்ள வேண்டும். தஜ்ஜாலின் சோதனையிலிருந்து இறைவனிடம் பாதுகாப்புத் தேடிக்கொண்டே இருக்க வேண்டும்.*

## தஜ்ஜால் நுழைய முடியாத இடங்கள்:

தஜ்ஜால் உலகம் முழுவதையும் அசுர வேகத்தில் சுற்றி வருவான். ஆனால் சில இடங்களை அவன் நெருங்க கூட முடியாது. அந்த இடங்கள் எது? என்பது பற்றி பின்வரும் நபிமொழிகள் விளக்குகின்றன.

''மஸீஹுத் தஜ்ஜாலைக் குறித்த அச்சம் மதீனாவிற்குள் நுழையாது. அந்த நாளில் மதீனாவுக்கு ஏழு நுழைவாயில்கள் இருக்கும். ஒவ்வொரு நுழைவாயிலிலும் இரண்டு வானவர்கள் (காவல் காப்பதற்காக நியமிக்கப்பட்டு) இருப்பார்கள்'' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

***அறிவிப்பவர் : அபூபக்ரா (ரலி) நூல் : புகாரீ (7125)***

''தஜ்ஜால் கீழ்த்திசையிலிருந்து மதீனாவைக் குறிக்கோளாகக் கொண்டு புறப்பட்டு வருவான். அப்போது மலக்குகள் அவனது முகத்தை 'ஷாம்' பகுதியை நோக்கித் திருப்புவார்கள். அங்கே தான் அவன் அழிவான்'' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (2450)***

மேற்சொன்ன ஹதீஸில் மதீனா மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றொரு ஹதீஸில் இன்னும் மூன்று இடங்களும் குறிப்பிடப் பட்டுள்ளது.

''தஜ்ஜால் நாற்பது நாட்கள் பூமியில் வாழ்வான். அவனிடம் மலைபோல் ரொட்டியும் மேலும் நதிகளும் இருக்கும். அவனுடைய ஆதிக்கம் அனைத்து இடங்களிலும் இருக்கும். ஆனால், மஸ்ஜிதுல் ஹராம், மதீனா, தூர் மஸ்ஜித், பைத்துல் முகத்தஸ் ஆகிய நான்கு பள்ளிகளை அவன் நெருங்க முடியாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

***அறிவிப்பவர் : அபூ உமையா (ரலி) நூல் : அஹ்மத் (22571)***

## தஜ்ஜால் வாழும் நாட்கள் எத்தனை?

இவ்வளவு அபார சக்தியுடன் வெளிப்படும் தஜ்ஜால் நீண்ட

நாட்கள் உலகில் ஆட்டம் போட முடியாது. வெறும் நாற்பது நாட்கள் மட்டுமே அவன் இவ்வுலகில் இருப்பான்.

''தஜ்ஜால் இப்பூமியில் எத்தனை நாட்கள் தங்கியிருப்பான்? என்று நாங்கள் கேட்டோம். அதற்கு நாற்பது நாட்கள் என்று பதிலளித்த நபியவர்கள்'' அன்றைய ஒரு நாள், ஓர் ஆண்டைப் போன்றும், மறுநாள் ஒரு மாதத்தைப் போன்றும், அதற்கு அடுத்த நாள் ஒரு வாரத்தைப் போன்றும், மற்ற நாட்கள் உங்களின் (சாதாரண) நாட்களைப் போன்றும் இருக்கும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5629)**

இந்த ஹதீஸின் கருத்திற்கு மூன்று விதமான விளக்கங்கள் தரப்படுகின்றன.

1. நிஜமாகவே ஒரு நாள் ஒரு வருடத்தைப் போன்று இருக்கும். அதாவது, மற்ற நாட்களில் சூரியனின் சுழற்சி ஒரு நாளைக்கு 24 மணி நேரம். ஆனால், அந்த ஒரு நாளில் சூரியன் தன் சுற்றை முடிக்க ஒரு வருடம் ஆகும்.

இந்த கருத்திற்கு இமாம் நவவீ மற்றும் இமாம் குர்துபீ (ரஹ்) முன்னுரிமை கொடுக்கிறார்கள்.

2. இரண்டாவது கருத்து : உண்மையாகவே அப்படி இருக்காது. மாறாக, அந்த நாளின்துன்பம் ஒரு வருடத்தைப் போன்று தெரியும். பொதுவாகவே உலகின் நியதி. சந்தோஷமான தருணங்கள் விரைவாக கடந்து செல்லும். ஆனால் துன்பமான தருணங்கள் உள்ளத்தை விட்டும் மறையாமல் இருக்கும். எனவே தஜ்ஜாலின் முதல் நாளில் அவனின் ஃபித்னா மேலோங்கியிருப்பதால் அது மக்களுக்கு ஒரு வருடம் போன்று தெரியும்.

3. மூன்றாவது கருத்து: தஜ்ஜால் தன் சூனியம் மேலும் கண்கட்டு வித்தையால் ஒரு நாளை ஒரு வருடம் போன்று காட்டுவான். மக்களுக்கு பகல் இருந்து கொண்டே இருப்பது போன்று தெரியும். இது முல்லா அலீ காரீ (ரஹ்) அவர்களின் கருத்தாகும்.

சரியான விளக்கத்தை அல்லாஹ்வே நன்கறிந்தவன்.

## தஜ்ஜாலிடமிருந்து பாதுகாப்புப் பெற:

*மாபெரும் குழப்பவாதியான இந்த தஜ்ஜாலிடமிருந்து தப்பிக்க சில வழிமுறைகளை நபி (ஸல்) அவர்கள் நமக்கு கற்றுத் தந்துள்ளார்கள். அவற்றை நாம் கடைப்பிடிக்க வேண்டும்.*

*1. தொழுகையில் அத்தஹிய்யாத்தின் இறுதியில் நான்கு விஷயங் களை விட்டும் பாதுகாப்புத் தேடுமாறு நபி (ஸல்) அவர்கள் போதனை செய்தார்கள். அதில் ஒன்று. (அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால்)*

*இறைவா! (பெருங்குழப்பவாதியான) தஜ்ஜாலின் சோதனையிலி ருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்பு கோருகிறேன்.*

***அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி) நூல் : புகாரீ (6376)***

*இந்த துஆவை நபி (ஸல்) அவர்கள் வழமையாக செய்து வந்துள்ளார்கள்.*

*2. இது தஜ்ஜாலின் வருகைக்கு முன் நாம் செய்ய வேண்டிய பிரார்த்தனை. தஜ்ஜாலை நமது காலத்தில் நாம் அடைந்தால் அவனது அற்புதத்தில் மயங்கி ஈமானை இழக்காமலிருக்க 'கஹ்ஃப்' அத்தியாயத்தின் ஆரம்பப் பகுதியை நாம் ஓதி வர வேண்டும்.*

*உங்களில் யார் அவனை அடைகிறாரோ அவர் அவனுக்கெதிராக 'அல்கஹ்ஃப்' அத்தியாயத்தின் ஆரம்ப வசனங்களை ஓதிக்கொள் ளட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5629)***

*முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் எத்தனை ஆயத் ஓத வேண்டும் என்ற எண்ணிக்கையோடு வந்துள்ளது.*

*கஹ்ஃப் அத்தியாயத்தில் முதல் பத்து வசனங்களை யார் மனனம் செய்கிறாரோ அவர் தஜ்ஜாலிடமிருந்து பாதுகாக்கப்படுவார் என்பது நபிமொழி.*

***அறிவிப்பவர் : அபூத்தர்தா (ரலி) நூல்: முஸ்லிம் (1342)***

*அபூத்தர்தாவின் மற்றொரு அறிவிப்பின் படி திர்மிதியில் மூன்று ஆயத் என்றும் வந்துள்ளது.*

*'கஹ்ஃப்' அத்தியாயத்தின் முதல் மூன்று வசனங்களை யார் ஓதுவாரோ அவர் தஜ்ஜாலிடமிருந்து பாதுகாக்கப்படுவார் என்பதும் நபிமொழி.*

***நூல் : திர்மிதி (2811)***

*இந்த வழிமுறைகள் தஜ்ஜாலின் வருகையை அடைந்தவர்களுக்கு மட்டுமல்ல. தஜ்ஜாலின் வருகையை அடையாதவர்களுக்கும் தான்.*

*3. மூன்றாவது வழி: தஜ்ஜாலால் நுழைய முடியாத அந்த நான்கு இடங்களில் ஒன்றில் தஞ்சம் புகுவது.*

*4. நான்காவது வழி: தஜ்ஜாலின் சந்திப்பை விட்டும் தூரமாக இருப்பது.*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*''எவர் தஜ்ஜாலைக் குறித்து கேள்விப்படுகிறாரோ அவர், அவனை விட்டும் திரும்பிச் சென்று விடட்டும். ஏனெனில் அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஒரு மனிதன் அவனிடத்தில் வரும் போது தன்னை முஃமின் என்றே எண்ணி வருவார். பிறகு அவன் எழுப்பும் சந்தேகங்களில் அவர் வீழ்ந்து விடுவார்.''*

***அறிவிப்பவர் : இம்ரான் பின் ஹுசைன் (ரலி)***
***நூல் : அபூதாவூத் (3762)***

## தஜ்ஜாலின் மரணம் மற்றும் அவன் கொல்லப்படும் இடம்:

*(''ஈசா அலை) அவர்கள் தஜ்ஜாலைத் தேடிச் செல்வார்கள். இறுதியில் (ஃபாலஸ்தீனத்திலுள்ள) 'லுத்து' எனும் நகரத்தின் தலைவாயிலருகே அவனைக்கண்டு அவனைக் கொன்றொழிப் பார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5629)***

*தஜ்ஜாலைக் கொல்லும் சமயத்தில்தான் தஜ்ஜாலுடன் இருக்கும் 70,000 யூதர்களையும் முஸ்லிம்கள் தேடிச் சென்று கொலை செய்வார்கள்.*

## தஜ்ஜாலைப் பற்றி மற்ற மதங்களின் பார்வை:

**கிறித்துவம்:** *அந்தி கிருத்து* **(Anti Christ)** *என்று தஜ்ஜாலை கிருத்துவம் அழைக்கின்றது. ஆர்ப்பரிக்கும் அலையில் இருந்து அவன் தோன்றுவான் என விவிலியம் கூறுகின்றது. இவன் பாவத்தின் மகன் என்றும் இவனது வருகை உலக அழிவின் அடையாளங்களில் ஒன்று எனவும் இயேசு கூறியதாக பைபிள் பதிவு செய்துள்ளது.*

*இயேசு (ஈஸா) ஒலிவ மலையின் மீது உட்கார்ந்து இருக்கையில் சீடர்கள் அவர்களிடம் ''உம்முடைய வருகைக்கும், உலகத்தின் முடிவுக்கும் அடையாளம் என்ன என்று எங்களுக்குச் சொல்ல வேண்டும்?'' என்று கேட்ட போது இயேசு உடைய பதில்களில் ஒன்று தான் தஜ்ஜால் பற்றியது.*

*''அந்தி கிறிஸ்து (தஜ்ஜால்) வருவான்.''*

***(மத்தேயு 24: 4,5) (வெளிப்பாடு 6:1,2) (யோவான் 2: 18)***

*(இயேசு) 'அவர் பூமியை தமது வாக்கின் கோலால் அடித்து, தனது வாயின் சுவாசத்தால் துண் மார்க்கனை சங்கரிப்பார். (ஏசாயா 11:4)*

*அவனை (தஜ்ஜால்) கர்த்தர் தன்னுடைய வாயின் சுவாசத்தி னாலேயே அழித்து, தம்முடைய வருகையின் பிரசன்னத்தினாலே நாசம் பண்ணுவார்.*

***(தெசலோனியர் 2: 8)***

## இந்து மதம்:

*இந்து மதத்தில் தஜ்ஜாலை ஒன்றிய அந்தாக் ஆசர் என்பவனைப் பற்றிய குறிப்பு உள்ளது. அந்தாக் ஆசர் எனும் சமஸ்கிருத சொல்லுக்கு இறுதியில் வரும் ஒற்றைக்கண்ணன் என்பது பொருளாகும். இவன் வன்மம் மிகுந்தும் ஆயிரம் கைகள், ஆயிரம் தலைகள், இரண்டாயிரம் பாதங்கள் மற்றும் இரண்டாயிரம்*

கண்களை கொண்டவனாகவும் இருப்பான். இவன் மந்தார் பாவத்தில் (மக்காவில் உள்ள மலை) முற்படும்போது கொல்லப் படுவான்.

**பார்க்க : ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யாவின் ஹரிவன்ஸ் புராணா பாகம் 1, பக்கம் 492, 502, 503)**

## யூத மதம்:

உலகமே தஜ்ஜாலின் வருகையை நினைத்து பயந்துக் கொண்டி ருக்கிறது. ஆனால் யூதர்கள் தஜ்ஜாலின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் தஜ்ஜாலை கடவுகளாக ஏற்றுக் கொள்வார்கள். தஜ்ஜாலின் படையில் 'இஸ்பஹான்' நாட்டைச் சார்ந்த 70,000 யூதர்கள் இருப்பார்கள்.

## இப்னு ஸய்யாத் தான் தஜ்ஜாலா?

## யார் இவன்?

இந்த இடத்தில் நாம் இப்னு ஸய்யாத் என்பவனை குறித்து தெரிந்து கொள்வது மிகப் பொருத்தமானதாக இருக்கும். முஸ்லிம் சமுதாயத்தில் பலருக்கும் இவனைப்பற்றி தெரியாமல் இருக்கலாம். மார்க்கம் பற்றிய அறிவு உள்ளவர்களுக்கு கூட இவன் பெயர் புதிதாக தோன்றலாம். ஆனால், ஹதீஸ் நூல்களில் இவனைப் பற்றி பல்வேறு அறிவிப்புகள் வந்திருக்கின்றன.

இவனது பெயர் இப்னு ஸய்யாத் அல்லது இப்னு ஸாயித். இவன் இயற்பெயர் ஸாஃப் என்பதாகும். இவன் மதீனாவின் புறநகர்ப்பகுதியில் வசித்து வந்த ஒரு யூதச்சிறுவன். இவன் சிறு வயதிலேயே ஒரு மந்திரவாதியாக இருந்தான். சோதிடர்களைப் போன்று பல விஷயங்களைக் கூறி வந்தான். அவற்றில் சில பலித்தன. சில பொய்த்தன.

பனுந்நஜ்ஜார் குலத்தாருடன் நட்புறவு ஒப்பந்தம் செய்து கொண்ட யூதர்களில் இவனும் ஒருவனாக இருந்ததால், இவனை பனுந்நஜ்ஜார் குலத்தைச் சேர்ந்தவன் என்பார்கள்.

**உண்மைக்கும், சந்தேகத்திற்கும் மத்தியில் இப்னு ஸய்யாத்:**

*இறுதிக் காலத்தில் தோன்றும் மகா பொய்யனான தஜ்ஜால் குறித்து நபி (ஸல்) அவர்கள் சொன்ன அடையாளங்களில் சிலவை இப்னு ஸய்யாதுக்கும் பொருந்திப் போயின.*

*நபி (ஸல்) அவர்கள் தஜ்ஜாலின் பிறப்பு குறித்து சொன்னார்கள். தஜ்ஜாலின் பெற்றோருக்கு முப்பது வருடத்திற்கு குழந்தை இருக்காது. பிறகு தான் ஒரு குழந்தைப் பிறக்கும். அது அதிகம் இடர்தரக்கூடியதாகவும் குறைவாகப் பயன்தரக்கூடியதாகவும் இருக்கும். அவனுடைய இரு கண்களும் உறக்கத்தில் இருப்பதைப் போன்று இருக்கும். ஆனால், அவன் உள்ளம் உறங்காது. இந்த சூழ்நிலையில் தான் முஸ்லிம்கள் ஒரு யூத தம்பதியினருக்குப் பிறந்த ஒரு அதிசய குழந்தையைப் பற்றி கேள்விப்பட்டு, அதன் பெற்றோரிடம் சென்று குழந்தையைப்பற்றி விசாரிக்கிறார்கள். உங்களுக்கு குழந்தை இருக்கிறதா? என்று, அதற்கு பெற்றோர் ஆம் இருக்கிறது. எங்களுக்கு முப்பது வருடமாக குழந்தை இல்லை. இப்பொழுதுதான் ஒரு குழந்தை பிறந்திருக்கிறது. ஆனால், அது அதிகம் தொந்தரவு தரக்கூடியதாகவும், குறைவான பலன் தரக்கூடியதாகவும் இருக்கிறது. மேலும் அது ஒற்றைக் கண் உடையதாக இருக்கிறது என்று கூறினார்கள்.*

*இதையெல்லாம் இப்னு ஸய்யாதும் கேட்டுக் கொண்டு தான் இருந்தான். அவனிடம் சென்று இது உண்மையா? என்று கேட்டதற்கு, அவன் ஆம் என்று பதிலளித்தான்.*

***அறிவிப்பவர் : அபூபக்ரா (ரலி) நூல் : அஹ்மத் (19597)***

**நபிகள் நாயகத்தின் பரிசோதனை :**

*இந்த வியப்பான செய்தி மதீனா முழுக்க பரவுகிறது. நபி (ஸல்) அவர்களுக்கும் இந்த செய்தி கிட்டியது.*

*ஒரு சந்தர்ப்பத்தில் நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் மற்றும் உமர் (ரலி) ஆகியோரும் மதீனாவின் வீதியொன்றில் அவனை*

*(இப்னு ஸய்யாதை)ச் சந்தித்தார்கள். அவன் மற்ற சிறுவர் களுடன் விளையாடிக் கொண்டிருந்தான். நபி (ஸல்) அவர் களைப் பார்த்ததும் மற்ற சிறுவர்கள் ஓடிவிட்டனர். இப்னு ஸய்யாத் (மட்டும்) அப்படியே உட்கார்ந்து கொண்டான். அதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வெறுத்ததைப் போன்றிருந்தது. ஆகவே, அவனிடம் உன் கரங்கள் மண்ணைத் தழுவட்டும். ''நான் அல்லாஹ்வின் தூதர் என நீ சாட்சியம் அளிக்கிறாயா?'' என்று கேட்டார்கள். அதற்கு அவன், ''நான் அல்லாஹ்வின் தூதர் என நீர் சாட்சியம் அளிக்கிறீரா?'' என்று (திருப்பிக்) கேட்டான். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''நான் அல்லாஹ்வையும், அவனுடைய வானவர் களையும் அவனுடைய வேதங்களையும் நம்பிக்கை கொண் டேன். நீ என்ன காண்கிறாய்?'' என்று கேட்டார்கள். அதற்கு இப்னு ஸய்யாத் ''தண்ணீரின் மீது சிம்மாசனம் ஒன்றை காண்கிறேன்'' என்று சொன்னான். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ''நீ கடல் மீதுள்ள இப்லீசின் சிம்மாசனத்தையே காண்கிறாய்'' என்று கூறிவிட்டு, ''இன்னும் என்ன காண்கிறாய்?'' என்று கேட்டார்கள். அதற்கு அவன் ''அல்லாஹ்விடமிருந்து செய்திகளைக் கொண்டு வரும் இரு உண்மையாளர்களையும், ஒரு பொய்யரையும் அல்லது இரு பொய்யர்களையும் ஓர் உண்மை யாளரையும் நான் காண்கிறேன்'' என்று சொன்னான்.*

*அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவனுக்கு குழப்பம் ஏற்பட்டுள்ளது. அவனை விட்டுவிடுங்கள்'' என்று கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : அபூசயீத் அல் குத்ரீ (ரலி) நூல் : முஸ்லிம் (5606)***

*முஸ்லிமின் மற்றொர் அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாதை இப்படியும் பரிசோதித்தார்கள். அதாவது,*

*நபி (ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாதிடம் ''(உன் நிலை பற்றி) நீ என்ன கருதுகிறாய்?'' என்று கேட்டார்கள். அதற்கு இப்னு ஸய்யாத், ''எனக்கு மெய்யான செய்திகளும் பொய்யான*

*செய்திகளும் உதிக்கின்றன'' என்று கூறினான். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ''உனக்கு இப்பிரச்சனையில் (உண்மையும் பொய்யும் கலந்து) குழப்பம் ஏற்பட்டுள்ளது'' என்று கூறிவிட்டு, ''நான் ஒன்றை மனதில் உனக்காக (உன்னைச் சோதிப்பதற்காக) மறைத்து வைத்துள்ளேன். (அது என்னவென்று சொல்)'' என்று கூறினார்கள். இப்னு ஸய்யாத் ''அது 'துக்' என்று பதிலளித்தான் (அதாவது 'துகான்' (44)வது அத்தியாயத்தின் 10ஆவது வசனம் என்பதை அரைகுறையாகச் சொன்னான்). உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''தூர விலகிப்போ, நீ உன் எல்லையைத் தாண்டிவிட முடியாது'' என்று கூறினார்கள்.*

*அப்போது உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதரே! என்னை விடுங்கள். இவனது கழுத்தை நான் வெட்டி விடுகிறேன்'' என்று கேட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''இவன் (இப்னு ஸய்யாத்) அவனாக (தஜ்ஜாலாக) இருந்தால் இவனைக் கொல்லும் பொறுப்பு உங்களுக்கு கொடுக் கப்படவில்லை. இவன் அவனில்லையென்றால், இவனைக் கொல்வதால் உங்களுக்கு நன்மையேதும் இல்லை'' என்று சொன் னார்கள்.*

***அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5614)***

*இப்படி பல்வேறு கட்டங்களில் இப்னு ஸய்யாதுடன் நபி (ஸல்) அவர்களுக்கு சந்திப்பு ஏற்பட்டுள்ளது. ஒவ்வொரு சமயத்திலும் நபி (ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாதின் உண்மைநிலை குறித்து அறிய ஆர்வப்பட்டுள்ளார்கள்.*

*பிறகு எப்படியாவது அவன் விவரத்தை கண்டறிய நபி (ஸல்) அவர்கள் இப்படி ஒரு தந்திரத்தையும் கையாண்டார்கள்.*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் உபை பின் கஅப் (ரலி) அவர்களும் இப்னு ஸய்யாத் தங்கியிருந்த பேரீச்சந்தோட்டத்தை நோக்கி நடக்கலாயினர். பேரீச்சந்தோட்டத்திற்குள் நுழைந்தவுடன்*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இப்னு ஸய்யாத் தம்மைப் பார்த்துவிடும் முன்பே அவனிடமிருந்து அவனது பேச்சு எதையாவது கேட்டுவிட வேண்டுமென்று திட்டமிட்டப்படி பேரீச்ச மரங்களுக்கிடையில் தம்மை மறைத்துக் கொண்டு நடந்தார்கள். அப்போது இப்னு ஸய்யாத் தனது படுக்கையில் ஒரு பூம்பட்டுப் போர்வைக்குள் எதையோ முணுமுணுத்தபடி படுத்திருந்தான். இப்னு ஸய்யாதின் தாய், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களுக்கிடையே தம்மை மறைத்துக் கொண்டு வருவதைக் கண்டு, இப்னு ஸய்யாதை, ''ஸாஃபியே!'' (இது இப்னு ஸய்யாதின் பெயர்) இதோ முஹம்மத்! என்றாள். உடனே இப்னு ஸய்யாத் குதித்தெழுந்து உட்கார்ந்து கொண்டான். (அதனால், அவனது பேச்சு எதையும் கேட்க முடியவில்லை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''அவள் அவனை அப்படியே விட்டுவிட்டிருந்தால் அவன் (உண்மை நிலையைத்) தெளிவுப்படுத்தியிருப்பான்'' என்று சொன்னார்கள்.*

***அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5614)***

இப்னு ஸய்யாத் தொடர்பாக நபி (ஸல்) அவர்களுக்கு தெளிவான வஹீ (இறைச்செய்தி) வராத காரணத்தினால் இவன் தஜ்ஜாலாக இருப்பானோ என்ற சந்தேகம் இருந்து கொண்டே இருந்தது.

**நபித்தோழர்களின் கருத்து :**

நபித்தோழர்களில் பலருக்கும் இதே சந்தேகம் இருந்தது.

*சில ஸஹாபாக்கள் (நபித்தோழர்கள்) இப்னு ஸய்யாத் தான் தஜ்ஜால் என்று அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டுக்கூறியுள்ளார்கள்.*

*1. ஒரு சந்தர்ப்பத்தில் உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் முன்னிலையில் இப்படி சத்தியம் செய்தபோது அதை நபி (ஸல்) அவர்கள் மறுக்காமல் இருந்தார்கள்.*

***அறிவிப்பவர் : முஹம்மத் பின் அல்முன்கதிர் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5613)***

*2. மஸீஹ் தஜ்ஜால் இப்னு ஸய்யாத்தான் என்பதில் நான் சந்தேகம் கொள்ளவில்லை என இப்னு உமர் (ரலி) கூறுபவராக இருந்தார்கள்.*

***அறிவிப்பவர் : நாஃபிவு (ரஹ்) நூல் : அபூதாவூத் (3769)***

*3. இப்னு ஸய்யாத்தான் தஜ்ஜால் என்பதை ஒரு முறையல்ல, ஏழு முறை அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூற நான் விரும்புகிறேன் என இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : அபுல் அஹ்வஸ் (ரலி) நூல் : தப்ரானீ (9973)***

## இப்னு ஸய்யாதின் வாக்குமூலம் :

*இப்படி நபியும், நபித்தோழர்களும் இப்னு ஸய்யாத் விஷயத்தில் தொடர் சந்தேகத்திலேயே இருந்தார்கள். காரணம் அவன் நடவடிக்கைகள் அவ்வாறு இருந்தன. ஆனால், பிற்காலத்தில் அந்த சந்தேகம் நிவர்த்தி செய்யப்பட்டது. இப்னு ஸய்யாத் தஜ்ஜால் இல்லை எனும் விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு தெளிவுபடுத்தப்பட்டது.*

*தமீமுத்தாரீ (ரலி) அவர்கள் தஜ்ஜாலைப் பார்த்து வந்த நிகழ்வை நபி (ஸல்) அவர்களிடம் சொன்ன போது இந்த ஐயத்திற்கு தீர்வு கிடைத்தது. அதேப்போன்று, நபி (ஸல்) அவர்கள் தஜ்ஜால் குறித்து சொன்ன அடையாளங்களில் பெரும்பாலானவைகள் இப்னு ஸய்யாதிடம் இல்லாமல் இருந்தது.*

*இதைவிட மிக முக்கியமாக இப்னு ஸய்யாதே தான் தஜ்ஜால் கிடையாது எனும் விஷயத்தை ஒத்துக் கொண்டது கவனிக்கத் தக்கதாகும்.*

*அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறுவதாவது, (ஒரு முறை) நாங்கள் ஹஜ்ஜுக்கு அல்லது உம்ராவுக்குச் சென்றோம். எங்களுடன் இப்னு ஸாயிதும் இருந்தான். (வழியில்) நாங்கள் ஓரிடத்தில் தங்கினோம். (ஓய்வெடுப்பதற்காக) மக்கள் கலைந்து சென்றபின் நானும் இப்னு ஸாயிதும் மட்டுமே எஞ்சியிருந்தோம்.*

*அவனைப் பற்றிச் சொல்லப்படுகிற விஷயங்களால் அவனருகில் இருப்பதை நான் மிகவும் வெறுத்தேன். அவன் தனது பயணச் சாமான்களைக் கொண்டு வந்து எனது பயணச்சாமான்களுடன் வைத்தான்.*

*அப்போது நான், ''வெயில் கடுமையாக உள்ளது. அந்த மரத்திற்கு கீழே நீ உன் பொருட்களை வைத்தால் நன்றாயிருக்குமே'' என் றேன். அவ்வாறே அவன் செய்தான். அப்போது ஆட்டு மந்தை ஒன்று வந்தது. உடனே அவன் சென்று, ஒரு பெரிய கோப்பை (நிறைய பால்) உடன் என்னிடம் வந்து, ''அபூசயீதே! பருகு வீராக!'' என்றான். நான் ''வெயிலும் கடுமையாக உள்ளது. பாலும் சூடாக உள்ளது என்று - அவன் கையிலிருந்து வாங்கி அருந்தப் பிடிக்காமல் அல்லது அவன் கையிலிருந்து வாங்கப்பிடிக்காமல் -சொன்னேன்.*

*அவன், ''அபூசயீதே! நான் ஒரு கயிற்றை எடுத்து வந்து அதை ஒரு மரத்தில் மாட்டி தற்கொலை செய்து கொள்ளலாமா என்று நினைத்தேன். என்னைப்பற்றி மக்கள் பேசிக்கொள்கிற செய்திகளே காரணம். அபூசயீதே! யாருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறிய ஹதீஸ் தெரியாவிட்டாலும், அன்ஸாரிகளே! உங்களுக்குத் தெரியாமல் போகாது.*

*(அபூசயீதே!) நீங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களை நன்கறிந்தவர்களில் ஒருவரல்லவா? அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவன் (தஜ்ஜால்) இறைமறுப்பாளன் என்று சொல்லவில்லையா? நானோ ஒரு முஸ்லிமாக இருக்கிறேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'அவன் (தஜ்ஜால்) குழந்தை பாக்கியமற்ற மலடன் என்று கூறவில்லையா?*

*நானோ என் குழந்தையை மதீனாவில் விட்டு வந்துள்ளேன். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவன் மதீனாவுக்குள்ளும் மக்காவுக்குள்ளும் நுழைய முடியாது என்று கூறவில்லையா? நானோ மதீனாவிலிருந்து மக்காவை நாடி வந்து கொண்டி ருக்கிறேன் என்று சொன்னான். இதையெல்லாம் கேட்டுவிட்டு*

அவனை மன்னிக்கும் அளவுக்கு நான் போய்விட்டேன். பிறகு அவன், ''அறிந்து கொள்க. அல்லாஹ்வின் மீதாணையாக! தஜ்ஜாலை நான் அறிவேன். அவனது பிறப்பையும், இப்போது அவன் எங்கே இருக்கிறான் என்பதையும் நான் அறிவேன்'' என்றான். அப்போது நான் ''காலமெல்லாம் உனக்கு நாசமுண்டாகட்டும்'' என்று கூறி (சபித்து)விட்டேன்.

**நூல் : முஸ்லிம் (5610)**

இப்படி இப்னு ஸய்யாதே தான் தஜ்ஜால் கிடையாது என்ற விஷயத்தை ஒத்துக்கொண்டாலும் நீ அந்த தஜ்ஜாலாக இருக்க உனக்கு விருப்பம் இருக்கா? என்று அவனிடம் கேட்கப்பட்ட போது, ''அவ்வாறு என்னிடம் கோரப்பட்டால் அதை நான் வெறுக்கமாட்டேன்'' என்று பதிலளித்தான்.

**அறிவிப்பவர் : அபூசயீத் அல் குத்ரீ (ரலி) நூல் : முஸ்லிம் (5609)**

இப்படி இப்னு ஸய்யாதின் ஒவ்வொரு நடவடிக்கையும் அன்று வாழ்ந்த மக்களுக்கு வியப்பாகவே இருந்தது.

## இப்னு ஸய்யாத் எப்போது மரணித்தான்?

இவன் நபி (ஸல்) அவர்களின் காலத்திற்குப் பிறகும் உயிரோடு இருந்தான்.

நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது: அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள், ''நான் இப்னு ஸய்யாதை இருமுறை சந்தித்தேன். முதல் முறை சந்தித்துவிட்டு வந்து அவ(னுடைய நண்ப)ர்களில் ஒருவரிடம், ''இவன் (இப்னு ஸய்யாத்) அவர் (நபி) என்று நீ ங்கள் பேசிக்கொள்கிறீர்களா? எனக்கேட்டேன். அதற்கு அவர், ''அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை'' என்று பதிலளித்தார்.

அதற்கு நான், ''நீர் என்னிடம் பொய் சொல்கிறீர். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் சிலர் என்னிடம், அவன் உங்களிலேயே அதிகச் செல்வமும் நிறைய குழந்தைகளும் உள்ளவனாக ஆகாத வரை மரணிக்க மாட்டான் என்று கூறினார்கள். அவனைப் பற்றி

*அவ்வாறே இன்றும் அவர்கள் கருதிக் கொண்டிருக்கிறார்கள் (நபி என்று கருதாவிட்டால் அவ்வளவு உறுதியாக நீங்கள் எப்படி இவ்வாறு நம்பினீர்கள்?)'' என்று கேட்டேன் என்று கூறினார்கள்.*

*மேலும், அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: பிறகு நாங்கள் பேசிக் கொண்டிருந்துவிட்டு, அவனிடமிருந்து நான் (புறப்பட்டு) வந்துவிட்டேன். பிறகு அவனை மறுபடியும் நான் சந்தித்தபோது, அவனது கண் ஒன்று வீங்கிப் புடைத்திருந்தது. நான் ''இப்போது நான் காணுகின்ற நிலையில் உன்னுடைய கண் எப்போது மாறியது?'' என்று கேட்டேன். அதற்கு அவன், ''எனக்குத் தெரியாது'' என்று பதிலளித்தான். ''உன் தலையிலேயே அது இருக்க, உனக்கு எப்படி தெரியாமல் போகும்?'' என்று கேட்டேன்.*

*அதற்கு அவன், ''அல்லாஹ் நாடினால் உம்முடைய இந்தக் கைத்தடிக்கும் அல்லாஹ் (இந்தக்குறையுள்ள) கண்ணை உருவாக்குவான்'' என்று கூறிவிட்டு, கழுதையைப் போன்று மிகக் கடுமையாக கத்தினான். அப்போது என் தோழர்களில் சிலர், என்னிடமிருந்த கைத்தடியால் அது உடையும் அளவுக்கு நான்தான் அவனை அடித்துவிட்டேன் என்று எண்ணினர். ''அல்லாஹ்வின் மீதாணையாக! அ(வன் கத்திய)தற்கான காரணத்தை நான் அறியவில்லை.*

*பிறகு அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் இறைநம்பிக்கையாளர்களின் அன்னை (ஹஃப்ஸா - ரலி) அவர்களிடம் சென்று அதைப்பற்றித் தெரிவித்தார்கள். அதற்கு ஹஃப்ஸா (ரலி) அவர்கள் ''அவனிடம் உமக்கென்ன வேலை?'' என்று கேட்டுவிட்டு, ''அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அவனுக்கு (தஜ்ஜாலுக்கு) ஏற்படும் ஒரு கோபத்தை முன்னிட்டே அவன் மக்களிடையே முதன் முதலில் புறப்பட்டு வருவான்'' என்று கூறியதை நீர் அறியவில்லையா?'' என்று கேட்டார்கள்.*

**நூல் : முஸ்லிம் (5618)**

இவன் எப்போது மரணித்தான் என்பது குறித்து பல கருத்துக்கள்

*கூறப்படுகின்றன. மதீனாவில் நடந்த 'அல்ஹர்ரா' என்ற நிகழ்வின் போது அவன் காணாமல் போய்விட்டதாக ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.*

*நாங்கள் இப்னு ஸய்யாதை அல்ஹர்ராவுடைய தினத்தன்று தொலைத்துவிட்டோம்.*

***நூல் : அபூதாவூத் (3771)***

*'அல்ஹர்ரா நாள்' என்பது ஹிஜ்ரி 63ஆம் ஆண்டில் நடந்த நிகழ்ச்சியைக் குறிக்கும். மதீனாவாசிகளுக்கும் யஸீத் பின் முஆவியா அனுப்பிய ஷாம் (சிரியா) நாட்டுப்படைகளுக்கும் இடையே மதீனாவைச் சுற்றி 'அல்ஹர்ரா' என்றழைக்கப்பட்ட இடத்தில் சண்டை நிகழ்ந்தது.*

***(நூல் : உம்தத்துல் காரீ)***

*இன்னொரு கருத்து என்னவெனில், இப்னு ஸய்யாத் மதீனாவில் தான் மரணித்தான் என்றும் கூறப்படுகிறது.*

*எப்படியிருந்தாலும் இப்னு ஸய்யாதும் தஜ்ஜாலைப் போன்று ஒரு குழப்பவாதியாகவே மக்களுக்கு இருந்தான். அந்த முப்பது பொய்யர்களில் இவனும் ஒருவனாக கணக்கிடப்படுகிறான்.*

## 2. ஈசா நபியின் இரண்டாம் வருகை

*மாபெரும் பத்து அடையாளங்களில் ஈசா நபியின் வருகையும் ஒன்றாகும். தஜ்ஜாலின் அட்டூழியங்கள் எல்லை மீறிச் செல்லும் போது அவனை அழிப்பதற்காக ஈசா (அலை) அவர்கள் வானிலிருந்து பூமிக்கு வருகை தருவார்கள்.*

*பனூ இஸ்ரவேலர்களுக்கு அனுப்பப்பட்ட நபிமார்களில் ஒருவர் தான் ஈசா (அலை) அவர்கள். இன்ஜில் என்ற வேதமும் அவர்களுக்கு கொடுக்கப்பட்டிருந்தது. எனவே இந்த இடத்தில் ஈசா (அலை) அவர்கள் பற்றிய சில முக்கிய தகவல்களை நினைவூட்டிய பிறகு தலைப்பிற்குச் செல்வது பொருத்தமானதாக இருக்கும்.*

## அல்குர்ஆன் பார்வையில் ஈசா (அலை)

### *முன்மாதிரி முஸ்லிம் பெண்மணி:*

*இம்ரான் மேலும் இம்ரானின் மனைவியான ஹன்னாவுக்கு மகளாகப் பிறந்தவர் தான் மர்யம் (அலை) அவர்கள். அல்லாஹுதஆலா குர்அனில் மர்யம் (அலை) அவர்களை கற்பொழுக்கத்திற்கு முன்னுதாரணமாகவும், உலக முஸ்லிம் பெண்களில் முதன்மையாளராகவும் சிறப்பித்துக் கூறுகிறான்.*

*(நபியே! மர்யமை நோக்கி) வானவர்கள் கூறிய சமயத்தில் ''மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் உம்மை தேர்ந்தெடுத்திருக் கிறான். உம்மை பரிசுத்தமாகவும் ஆக்கியிருக்கிறான். உலகத் திலுள்ள பெண்கள் அனைவரையும் விட உம்மை மேன்மை யாக்கியும் வைத்திருக்கிறான், (என்றும்) (ஆகவே) மர்யமே! நீர் உமது இறைவனுக்கு வழிப்பட்டு குனிந்து (சிரம்பணிந்து) வணங்குபவர்களுடன் நீரும் குனிந்து (சிரம் பணிந்து) வணங்கு வீராக!'' (என்று கூறினார்கள்.)*

***அல்குர்ஆன் : (3: 42,43)***

*நம்பிக்கை கொண்ட பெண்களுக்கு (இரு பெண்களை) அல்லாஹ் உதாரணமாக கூறுகிறான். (முதலாவது) ஃபிர்அவ்னுடைய மனைவி (ஆசியா). அவள் (தன் இறைவனிடம்) ''என் இறை வனே! உன்னிடத்தில் உள்ள சொர்க்கத்தில் எனக்கு ஒரு வீட்டை அமைத்து தா. ஃபிர்அவ்னை விட்டும் அவனுடைய செயலை விட் டும் என்னை பாதுகாத்துக் கொள். அநியாயக்கார சமுதாயத்தை விட்டும் என்னை பாதுகாத்துக்கொள்'' என்று பிரார்த்தனை செய்து கொண்டே இருந்தாள்.*

*(இரண்டாவது) இம்ரானுடைய மகள் மர்யம். அவள் தன் கற்பை பாதுகாத்துக் கொண்டாள். ஆகவே, அவளுடைய கர்ப்பத்தில் நம் ரூஹிலிருந்து ஊதினோம். அவள் தன் இறைவனின் வசனங்களையும், வேதங்களையும் உண்மையாக்கி வைத்ததுடன் (இறைவனுக்கு) முற்றிலும் வழிப்பட்டவளாகவும் இருந்தாள்.*

***அல்குர்ஆன் : (66: 11,12)***

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*‘‘ஆண்களில் அதிகமானோர் முழுமை பெற்றிருக்கிறார்கள். ஆனால், பெண்களில் இம்ரானின் மகள் மர்யமையும், ஃபிர்அவ்னின் மனைவி ஆஸியாவையும் தவிர வேறெவரும் முழுமை பெறவில்லை.’’*

***அறிவிப்பவர் : அபூமூஸா அல் அஷ்அரீ (ரலி) நூல் : புகாரீ (3769)***

*இப்படி அல்லாஹ்வாலும், அவனுடைய தூதராலும் சிறப் பித்துக்கூறப்பட்ட தீன்குலப் பெண்மணி மர்யம் (அலை) அவர்களுக்கு மகனாகப் பிறந்தவர் தான் ஈசா (அலை) அவர்கள். அல்லாஹுதஆலா ஈசா (அலை) அவர்களின் பிறப்பை அற்புதப் படைப்பாகவும், உலக மக்களுக்கு ஓர் அத்தாட்சியாகவும், அல்லாஹ்வின் (தன்) வல்லமையை எடுத்துறைக்கும் சான்றாகவும் ஆக்கியுள்ளான்.*

*இதுபற்றிய கூடுதல் விவரங்களை அடுத்தடுத்துப் பார்ப்போம்.*

## ஈசா நபியின் அற்புதப் பிறப்பு:

*அல்லாஹுதஆலா தன் வல்லமையால் எந்த ஆண் துணையு மின்றி மர்யம் (அலை) அவர்களுக்கு மகனாக ஈசா (அலை) அவர் களை பிறக்க வைத்தான்.*

*(மேலும், மர்யமை நோக்கி) வானவர்கள் ‘‘மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் தன் (ஆகுக! என்ற) ஒரு வார்த்தையைக் கொண்டு உமக்கு (ஒரு குழந்தையை அளிக்க) நற்செய்தி கூறுகிறான்’’ என்றும், ‘‘அதன் பெயர் அல்மஸீஹ் ஈஸா இப்னு மர்யம்’’ என்பதாகும். ‘‘அவர் இம்மை மறுமையில் மிக்க கம்பீரமானவராகவும், (இறைவனுக்கு) மிக்க நெருங்கியவர்களில் ஒருவராகவும் இருப்பார்’’ என்றும் கூறினார்கள்.*

*(அதற்கு மர்யம் தன் இறைவனை நோக்கி) ‘‘என் இறைவனே! (மனிதர்களில்) ஒருவருமே என்னைத் தீண்டாதிருக்கும்போது*

*எனக்கு எவ்வாறு குழந்தை உண்டாகும்?'' என்று கூறினார். (அதற்கு) ''இப்படித்தான்'' அல்லாஹ் தான் நாடியதை படைக் கிறான். அவன் ஒரு பொருளை (படைக்க) நாடினால் அதை 'ஆகுக' என அவன் கூறியவுடனே அது ஆகிவிடும்'' என்று கூறினான்.*

***அல்குர்அன் : (3: 45,47)***

## பிறந்த குழந்தை பேசுமா?

*இந்த அற்புதப் பிறப்பு அன்று வாழ்ந்த மக்களுக்கு வியப்பாக வும், புத்திக்கு எட்டாததாகவும் இருந்தது. இதனால் அந்த மக்கள் மர்யம் (அலை) அவர்களின் மீது இல்லாத பொல்லாத அவதூறு களை அள்ளி வீசினார்கள்.*

*இந்த அவதூறு சொன்னவர்களின் வாய்களை அல்லாஹ் எப்படி வியக்க வைத்தான் என்பதையும், மர்யம் (அலை) அவர்கள் மீது ஏற்பட்ட கலங்கத்தை எப்படி துடைத்தான் என்பதையும் பின்வரும் வசனங்கள் வழியாகப் பார்ப்போம்.*

*பின்னர், (மர்யம் தான் பெற்ற) அக்குழந்தையைச் சுமந்து கொண்டு தன் மக்களிடம் வரவே, அவர்கள் (இவரை நோக்கி) ''மர்யமே! நிச்சயமாக நீ மகா கெட்ட காரியத்தைச் செய்து விட்டாய். ஹாரூனுடைய சகோதரியே! உன் தந்தை கெட்டவராக இருக்கவில்லை(யே). உன் தாயும் நடத்தைக் கெட்டவளாக இருக்கவில்லையே!'' என்று கூறினார்கள்.*

*(அதற்கவர், இதைப்பற்றித் தன் குழந்தையிடம் கேட்கும் படி) அதன் பக்கம் (கையை) ஜாடை காண்பித்தார். அதற்கவர்கள் ''மடியிலிருக்கக்கூடிய சிறு குழந்தையிடம் நாங்கள் எப்படி பேசுவோம்'' என்று கூறினார்கள்.*

*(இதைச்செவியுற்ற அக்குழந்தை அவர்களை நோக்கிக்) கூறிய தாவது, ''நிச்சயமாக நான் அல்லாஹ்வுடைய அடிமை ஆவேன். அவன் எனக்கு வேதத்தைக் கொடுத்து என்னை நபியாகவும் ஆக்குவான்.*

*நான் எங்கிருந்த போதிலும், அவன் என்னை மிக்க பாக்கிய வானாகவே ஆக்குவான். நான் வாழும் வரை தொழுகையைக் கடைப்பிடித்து தொழுகும்படியும், ஜகாத்து கொடுத்து வரும் படியும் அவன் எனக்கு உபதேசத்திருக்கிறான்.*

*என் தாய்க்கு நான் நன்றி செய்யும் படியாகவும் (எனக்கு உபதேசித்து) நான் முரடனாக வழிகெட்டவனாக ஆகாதபடியும் செய்வான்.*

*நான் பிறந்த நாளிலும், நான் மரணிக்கும் நாளிலும் (மறுமையில்) நான் உயிருள்ளவராக எழுப்பப்படும் நாளிலும், என்மீது ஸலாம் உண்டாகுக!'' (என்றும் அக்குழந்தை கூறியது).*

***அல்குர்ஆன் (19 : 27,28,29,30,31,32,33)***

### ஈசா நபியின் உதாரணம்:

*இந்த அற்புதப்படைப்பை கண்டு வியக்கும் மக்களுக்கு அல்லாஹ் இன்னொரு பதிலையும், அதை தன் வல்லமைக்கு சான்றாகவும் கூறுகிறான்.*

*ஆண் துணை ஏதுமின்றி பிறந்த ஒரு குழந்தைக்கு இவ்வளவு வியப்பு என்றால், ஆண் என்ன பெண் துணையே இன்றி இதற்கு முன் ஒரு படைப்பை அல்லாஹ் படைத்திருக்கிறான்.*

*அல்லாஹ் கூறுகிறான்:*

*நிச்சயமாக அல்லாஹ்விடம் ஈசாவிற்கு உதாரணம் ஆதமுடைய உதாரணத்தைப் போன்றதே: அவன் அவரை மண்ணால் உற்பத்தி செய்து (மனிதனாக) 'ஆகு' என்று கூறினான். உடனே (அப்படி) ஆகிவிட்டது.*

***அல்குர்ஆன் : (3:59)***

### ஈசா நபி போதித்த ஓரிறைக் கொள்கை:

*கற்களையும், சிலைகளையும் வணங்கிக்கொண்டிருந்த மக்களுக்கு*

நேர்வழிகாட்ட இறைத்தூதராக அனுப்பப்பட்டவர் தான் ஈசா (அலை) அவர்கள். இணைவைப்பு என்னும் இருளில் மூழ்கி கிடந்த மக்களை ஏகத்துவம் எனும் ஜோதியின் பக்கம் கொண்டு வந்தார்கள். அல்லாஹ்வின் தன்னிகரற்ற தன்மையையும், அவனின் வல்லமையையும் மக்களின் உள்ளங்களில் விதைத்தார்கள். ஈசா நபி போதித்த அந்த ஓரிறைக்கொள்கையைப் பற்றி அல்குர்ஆன் கூறுவதை கேளுங்கள்.

''நிச்சயமாக அல்லாஹ்தான் என் இறைவனும், உங்கள் இறைவனும் ஆவான். ஆகவே, அவனையே வணங்குங்கள். இதுதான் நேரான வழி'' (என்றும் கூறினார்).

**அல்குர்ஆன் (3: 51)**

இப்படி சத்திய இஸ்லாத்தையும், ஓரிறைக்கொள்கையையும் மக்களிடம் எடுத்துரைத்து தன் தூதுத்துவப்பணியை சரிவர நிறைவேற்றிக் கொண்டே இருந்தார்கள். ஆனால், நபிமார்கள் விஷயத்தில் அல்லாஹ்வின் வழிமுறை, அவர்களுக்கு பல சிரமங்களைக் கொடுத்து அவர்களை சோதிப்பது தான். அந்த வகையில் ஈசா (அலை) அவர்களின் காலத்தில் பல குழப்பங்கள் உருவாகின்றன.

ஒரு பக்கம் ஈசா (அலை) அவர்களின் ஏகத்துவ வளர்ச்சியைக் கண்டு பொறுக்க முடியாத யூதர்கள் ஈசா (அலை) அவர்களை ஏற்க மறுத்து, அவர்களின் பிறப்பு குறித்து அபாண்டமாக பேசினார்கள்.

இன்னொரு பக்கம் ஈசா (அலை) அவர்களைக் கொண்டு நம்பிக்கை கொண்ட நஸாராக்கள் (கிறிஸ்தவர்கள்) அவர்களை நம்ப வேண்டிய விதத்தில் நம்பவில்லை. புதிய வழிகெட்ட கொள்கையை உண்டாக்கினார்கள்.

நஸாராக்களில் சிலர், ஈசா (அலை) அவர்களை அல்லாஹ்வின் மகன் (தேவகுமாரன்) என்றும், இன்னும் சிலரோ, வறம்பு மீறி ஈசா (அலை) அவர்கள் தான் கடவுள் என்றும் பல அவதூறுகளை கட்டவிழ்த்துவிட்டார்கள்.

இறுதியாக ஈசா (அலை) அவர்களை கொலை செய்வதற்கே யூதர் கள் தயாராகிவிட்டார்கள். இந்த சமயத்தில் தான் அல்லாஹு தஆலா ஈசா (அலை) அவர்களை காப்பாற்றி உயிரோடு தன் பக்கம் உயர்த்திக்கொண்டான். ஈசா (அலை) அவர்களுக்குப் பதிலாக ஆள் மாறாட்டம் செய்யப்பட்டு அந்த நபரைத் தான் யூதர்கள் கொலை செய்து சிலுவையில் அறைந்தார்கள்.

### ஈசா நபி கடவுளல்ல:

இறைவேதத்தையும், இறைவனின் கட்டளைகளையும், மக்களி டத்தில் சேர்ப்பதற்காக அல்லாஹ்வின் புறத்திலிருந்து அனுப்பப் படும் இறைத்தூதர்களுக்கு அவர்களுக்குண்டான அந்தஸ்தை மட்டுமே கொடுக்க வேண்டும். அந்த அந்தஸ்தை கூட்டவும் கூடாது. குறைக்கவும் கூடாது.

அவர்களும் நம்மைப் போன்ற ஒரு சாதாரண மனிதர் தானே என்று தாழ்த்தவும் கூடாது. இறைவன் புறத்திலிருந்து வந்தவர் என்று கூறி அவருக்கு இறைத்தன்மை வழங்கவும் கூடாது.

இந்த வகையில் தான் நஸாராக்களில் (கிறிஸ்தவர்களில்) சிலர் ஈசா (அலை) அவர்களை அல்லாஹ்வின் மகன் என்றும் இன்னும் சிலர் ஈசா (அலை) அவர்கள் தான் கடவுள் என்ற அந்தஸ்திற்கும் உயர்த்தினார்கள். அதேப்போன்று தான் முக்கடவுள் கொள்கை (பிதா, குமாரன், பரிசுத்த ஆவி) என்ற கோட்பாட்டையும் உருவாக்கினார்கள்.

அல்லாஹுதஆலா இந்த அனைத்து வழிகெட்ட கொள்கைகளை யும் தன் திருமறையில் வண்மையாக கண்டித்து நிராகரித்துப் பேசுகின்றான்.

முதலாவதாக, ஈசா (அலை) அவர்களை அல்லாஹ்வின் மகன் என்று கூறுவோருக்கு அல்லாஹ்வின் பதிலடி.

யூதர்கள் (நபி) ‘உஜைரை’ அல்லாஹ்வின் மகன் என்று கூறு கின்றனர். (இவ்வாறே) கிறிஸ்தவர்கள் ‘மஸீஹை’ அல்லாஹ் வுடைய மகன் என்று கூறுகின்றனர். இவர்கள் தங்கள் வாய்களால்

கூறும் இக்கூற்றானது இவர்களுக்கு முன்னிருந்த நிராகரிப்பாளர்களின் கூற்றையே ஒத்திருக்கிறது. அல்லாஹ் இவர்களை அழித்துவிடுவான். (சத்தியத்தைப் புறக்கணித்து) இவர்கள் எங்கு வெருண்டோடுகின்றனர்?

**அல்குர்ஆன் (9:30)**

அடுத்ததாக ஈசா (அலை) அவர்கள் தான் கடவுள் என்று கூறுவோருக்கு அல்லாஹ்வின் பதிலடி.

எவர்கள், மர்யமுடைய மகன் மஸீஹை அல்லாஹ்தான் என்று கூறுகின்றனரோ அவர்கள் நிச்சயமாக நிராகரிப்பவர்களாகவே இருக்கின்றனர். ஆகவே, (நபியே) நீர் கூறுவீராக, ''மர்யமுடைய மகன் மஸீஹையும், அவருடைய தாயையும், உலகத்திலுள்ள (மற்ற) அனைவரையும் அல்லாஹ் அழித்துவிடக் கருதினால் (அவனைத் தடுக்க) எவன்தான் சிறிதேனும் சக்தி பெறுவான்? (ஏனென்றால்) வானங்கள், பூமி இன்னும் இவற்றுக்கு மத்தியிலுள்ள அனைத்தின் ஆட்சி அல்லாஹ்வுக்குரியதே! அவன் விரும்பியதை (விரும்பியபடி) படைக்கிறான். அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக பேராற்றலுடையவன்.

**அல்குர்ஆன் (5:17)**

கடைசியாக முக்கடவுள் கொள்கை கொண்டவர்களுக்கு அல்லாஹ் தரும் பதிலடி.

''நிச்சயமாக அல்லாஹ் (பிதா, சுதன், பரிசுத்த ஆவி ஆகிய இம்)மூவரில் ஒருவன் தான்'' என்று கூறியவர்களும் மெய்யாகவே நிராகரிப்பாளர்களாகிவிட்டார்கள். ஏனென்றால், ஒரே ஓர் இறைவனைத் தவிர வேறு இறைவன் இல்லவே இல்லை. (ஆகவே, இவ்வாறு) அவர்கள் கூறுவதிலிருந்து விலகிக் கொல்லாவிட்டால் அவர்களில் (அல்லாஹ்வை) நிராகரிப்பவர்களை துன்புறுத்தும் வேதனை நிச்சயமாக வந்தடையும்.

**அல்குர்ஆன் (5: 73)**

வேதத்தையுடையவர்களே! உங்கள் மார்க்கத்தில் நீங்கள் அளவு

கடந்து சென்று விடாதீர்கள். மேலும், அல்லாஹ்வைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதுவும்) கூறாதீர்கள். நிச்சயமாக மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹ், அல்லாஹ்வுடைய ஒரு தூதர் தான். (அவனுடைய மகனல்ல) அவனுடைய ('குன்' என்ற) வாக்கா(ல் பிறந்தவரா)கவும் இருக்கிறார். அல்லாஹ்(தன்) வாக்கை மர்யமுக்கு அளித்தான். (மற்ற ஆத்மாக்களைப் போன்று அவரும்) அவனால் படைக்கப்பட்ட ஓர் ஆத்மாவே. ஆகவே, அல்லாஹ்வையும், அவனுடைய தூதர்களையும் நீங்கள் நம்பிக்கை கொள்ளுங்கள். (கடவுள்கள்) 'மூவர்' என்றும் கூறாதீர்கள். (இவ்வாறு கூறுவதை) விட்டுவிடுங்கள். (அது) உங்களுக்குத்தான் மிக நன்று. ஏனென்றால், அல்லாஹ் ஒருவன் தான் வணக்கத்திற்குரியவன். அவன் சந்ததிகளை விட்டும் மிகப் பரிசுத்தமானவன். வானங்கள், பூமியில் இருப்பவை அனைத்தும் அவனுக்கு உரியவையே! (உங்கள் அனைவரையும்) பாதுகாக்க அல்லாஹ் (ஒருவனே) போதுமானவன் (ஈஸா அவசியமில்லை)

**அல்குர்ஆன் (4:171)**

### ஈசா நபியின் மறுப்பு:

இந்த கிறிஸ்தவர்கள் யாரை கடவுள் என்றும் அல்லாஹ்வின் மகன் என்றும் கூறுகிறார்களோ அத்தகைய ஈசா (அலை) அவர்களே இதை மறுத்து, நான் கடவுளும் கிடையாது. அல்லாஹ்வின் மகனும் கிடையாது. மாறாக நான் அல்லாஹ்வின் அடிமையும், அவனின் தூதரும் ஆவேன் என்று தன்னிலை விளக்கம் கொடுப் பதை கிறிஸ்தவர்கள் பார்த்து திருந்த வேண்டும்.

''நிச்சயமாக மர்யமுடைய மகன் மஸீஹ் அல்லாஹ்தான்'' என்று கூறியவர்களும் உண்மையாகவே நிராகரிப்பாளர்களாகி விட்டார்கள். எனினும் அந்த மஸீஹோ ''இஸ்ராயீலின் சந்ததி களே! என் இறைவனும் உங்கள் இறைவனுமாகிய அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள்'' என்றே கூறினார். எவன் அல்லாஹ் வுக்கு இணைவைக்கிறானோ அவனுக்கு நிச்சயமாக அல்லாஹ் சொர்க்கத்தைத் தடுத்துவிடுகிறான். அவன் செல்லும் இடம்

*நரகம்தான். (இத்தகைய) அநியாயக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்பவர்கள் ஒருவருமில்லை.*

***அல்குர்ஆன் (5:72)***

*இதைச் செவியுற்ற அக்குழந்தை அவர்களை நோக்கிக் கூறிய தாவது, ''நிச்சயமாக நான் அல்லாஹ்வுடைய அடிமை ஆவேன். அவன் எனக்கு வேதத்தைக் கொடுத்து என்னை நபியாகவும் ஆக்குவான்.''*

***அல்குர்ஆன் (19:30)***

*ஈஸாவும், சிறப்பு வாய்ந்த வானவர்களும் அல்லாஹ்வுக்கு அடிமையாய் இருப்பதைப் பற்றி குறைவாக கருத மாட்டார் கள். எவர்கள் கர்வம் கொண்டு அல்லாஹ்வுக்கு அடிமையாய் இருப்பதைக் குறைவாகக் காண்கின்றனரோ அவர்கள் அனை வரையும் (மறுமையில்) அவன் தன்னிடமே கொண்டு வரச் செய்வான்.*

***அல்குர்ஆன் (4: 172)***

*நாளை மறுமை நாளில் அல்லாஹ்வுக்கும், ஈஸா (அலை) அவர் களுக்கும் மத்தியில் நடக்கவிருக்கும் உரையாடலைப்பற்றியும் அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான். அந்த உரையாடலிலும்கூட ஈசா (அலை) அவர்கள் இந்த வழிகெட்ட கொள்கைகளை மறுத் துப் பேசி, தனக்கும் இதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்று கூறி ஒதுங்கிப்போவதை கிறிஸ்தவர்கள் சிந்திக்க வேண்டும்.*

*அல்லாஹ் மறுமை நாளில் ஈஸாவை நோக்கி ''மர்யமுடைய மகன் ஈஸாவே! அல்லாஹ்வுடன் என்னையும், என் தாயையும் இரு கடவுள்களாக எடுத்துக் கொள்ளுங்கள் என்று மனிதர்களை நோக்கி நீர் கூறினீரா?'' என்று கேட்பான் என்பதையும் ஞாபகமூட்டுவீராக. அதற்கு அவர் கூறுவார். ''நீ மிகப் பரிசுத்தமானவன். எனக்கு ஒரு சிறிதும் தகாததை நான் ஒரு போதும் கூற மாட்டேன். அவ்வாறு நான் கூறியிருந்தால் நிச்சயமாக நீ அதை அறிந்திருப்பாயே! என் உள்ளத்திலுள்ளதை நீ நன்கறிவாய். உன் உள்ளத்திலுள்ளதை நான் அறிய மாட்டேன். நிச்சயமாக நீதான் மறைவானவை அனைத்தையும்*

*நன்கறிபவன். நீ எனக்கு ஏவியபடியே நான் (அவர்களை நோக்கி), நீங்கள் எனக்கும் உங்களுக்கும் இறைவனாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள்'' என்று தான் கூறினேன். தவிர, வேறொன்றையும் (ஒருபோதும்) நான் கூறவில்லை. நான் அவர்களுடன் இருந்த வரை அவர்களின் செயலை நான் பார்த்துக் கொண்டிருந்தேன். நீ என்னைக் கைப்பற்றிய பின்னர் நீதான் அவர்களைக் கவனித்த வனாக இருந்தாய். அனைத்திற்கும் நீயே சாட்சி.*

***அல்குர்ஆன் (5: 116,117)***

இப்படி அசத்திய கொள்கைகளை அன்று வாழ்ந்த கிறிஸ்தவர்கள் உருவாக்கினாலும் உண்மையான கொள்கையுடைய சத்திய இஸ்லாத்தைப் பின்பற்றக்கூடிய, ஈசா (அலை) அவர்களை நபியாக மட்டும் பார்க்கக்கூடிய உண்மை கிறிஸ்தவர்களும் அன்று இருக்கவே செய்தார்கள். இவர்களுக்குத்தான் ஈசா நபியின் சீடர்கள் (ஹவாரியீன்கள்) என்று பெயர். இன்றும் மிக சொற்பமாக இருக்கின்றார்கள்.

*அவர்களில் பலர் (தம்மை) நிராகரிப்பதை ஈஸா உணர்ந்த பொழுது (அவர்களை நோக்கி) ''அல்லாஹ்வுக்காக எனக்கு உதவி செய்பவர் யார்?'' எனக் கேட்டார். (அதற்கு) அவருடைய தோழர்கள், ''நாங்கள் அல்லாஹ்வுக்காக (உங்களுக்கு) உதவி செய்கிறோம். மெய்யாகவே! அல்லாஹ்வை நாங்கள் நம்பிக்கை கொள்கிறோம். (ஆதலால்) நிச்சயமாக நாங்கள் (முஸ்லிம்கள்) முற்றிலும் அவனுக்கு வழிப்பட்டோம் என்பதாக நீர் சாட்சி கூறுவீராக'' என்று கூறினார்கள்.*

*''எங்கள் இறைவனே! நீ அருட் செய்த (வேதத்)தை நாங்கள் நம்புகிறோம். (உன்) இத்தூதரையும் நாங்கள் பின்பற்றி நடக்கி றோம். ஆதலால் (அவரை) உண்மைப்படுத்தியவர்களுடன் எங்களையும் நீ பதிவு செய்து கொள்வாயாக!'' (என்றும் அந்தத் தோழர்கள் பிரார்த்தித்தார்கள்).*

***அல்குர்ஆன் (3: 52,53)***

## ஈசா நபியின் வருகையை மறுக்கும் வழிகேடர்கள்

அல்லாஹ்வால் விண்ணுலகத்திற்கு உயர்த்தப்பட்ட ஈசா (அலை) அவர்கள் கியாமத் நாளின் நெருக்கத்தில் மீண்டும் இவ்வுலகிற்கு வருவார்கள் என்பது கியாமத் நாளின் பத்து பெரும் அடையாளங்களில் ஒன்றாகும். எனவே, முஸ்லிம்கள் அனைவரும் இதை நம்பிக்கை கொள்வது மிக அவசியமாகும். மேலும் இது அஹ்லுஸ்ஸுன்னாவின் கொள்கை கோட்பாடு களில் கட்டுப்பட்டதாகும்.

ஈசா (அலை) அவர்கள் மீண்டும் இப்பூமிக்கு வருவார்கள் என்பது குர்ஆன், மேலும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களின் மூலம் ஊர்ஜிதமான ஒரு விஷயம். எனவே, இதை மறுப்பவர்கள் கண்டிப்பாக வழிகேடர்களே. காதியானிகள் போன்ற வழிகெட்ட கொள்கையைச் சார்ந்த சிலர், ஈசா (அலை) அவர்களின் வருகையை மறுக்கின்றார்கள். மேலும், இவர்கள் தங்கள் நிலைப்பாட்டிற்கு ஆதாரமாகச் சில வாதங்களையும் முன்வைக்கிறார்கள்.

எனவே நாம் இந்த இடத்தில், ஈசா நபியவர்கள் கொல்லப்பட வில்லை என்பது பற்றியும், அவர்களை அல்லாஹ் தன் பக்கம் உயிரோடு உயர்த்திக் கொண்டான் என்பது பற்றியும் ஈசா நபியின் இரண்டாம் வருகை சம்பந்தமாக வந்திருக்கும் ஆதாரங்கள் பற்றியும் பார்ப்பது அவசியமாகும். இந்த சான்றுகளே மறுப் பாளர்கள் முன்வைக்கும் வாதங்களுக்குத் தக்க பதிலடியாக அமைந்துவிடும்.

## ஈசா நபி சிலுவையில் அறையப்பட்டார்களா?

யூதர்கள் ஈசா நபியை (இயேசுவை) கொலை செய்து சிலுவையில் அறைந்துவிட்டனர் என்பது கிறிஸ்தவர்களின் அடிப்படைக் கொள்கை. இந்த பொய்யான கொள்கையை புனித குர்ஆன் பகிரங்கமாக எதிர்க்கின்றது.

காரணம் ஈசா (அலை) அவர்கள் யூதர்களால் கொலை செய்யப் படவுமில்லை. சிலுவையில் அறையப்படவுமில்லை.

*மாறாக, ஈசா (அலை) அவர்களின் இடத்தில் இன்னொரு நபர் ஆள்மாறாட்டம் செய்யப்பட்டு அந்த நபரையே யூதர்கள் கொலை செய்து சிலுவையில் அறைந்தார்கள். ஈசா (அலை) அவர்களை அல்லாஹ் காப்பாற்றி தன் பக்கம் உயர்த்திக்கொண்டான். இது தான் நடந்த உண்மையான சம்பவமாகும். எனவே, இதுபற்றிய அல்லாஹ்வின் கூற்றை நாம் பார்ப்போம்.*

*அவர்களின் (இத்தகைய) நிராகரிப்பினாலும், மர்யமின் மீது அபாண்டமான அவதூறைக் கூறியதனாலும் (அவர்களை நாம் சபித்தோம்.)*

*மேலும், ‘‘அல்லாஹ்வுடைய தூதர், மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹை நிச்சயமாக நாம் (சிலுவையில் அறைந்து) கொலை செய்துவிட்டோம்’’ என்று அவர்கள் கூறியதனாலும் (அவர்களைச்சபித்தோம்) அவரை அவர்கள் கொலை செய்யவு மில்லை. அவரை அவர்கள் சிலுவையில் அறையவும் இல்லை. (அவர் இருந்த அறைக்குள் அவரைத் தேடிச் சென்றவன் அவரைப்போல் ஆக்கப்பட்டுவிட்டான். தேடிச் சென்ற மற்றவர் கள் அவனையே சிலுவையில் அறைந்தனர். இதனால்) அவர்கள் சந்தேகத்திற்குள்ளாக்கப்பட்டு விட்டனர். ஆகவே, எவர்கள் இதற்கு மாறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களோ அவர்கள் வீண் சந்தேகத்திலேயே ஆழ்ந்துவிட்டனர். வீண் சந்தேகத்தைப் பின்பற்றுவதைத் தவிர அதில் அவர்களுக்கு உண்மையான ஞான (ஆதார)ம் கிடையாது. நிச்சயமாக அவர்கள் அவரைக் கொலை செய்யவே இல்லை.*

*எனினும், அல்லாஹ் அவரைத் தன் அளவில் உயர்த்திக் கொண்டான். அல்லாஹ் (அனைவரையும்) மிகைத்தவனாக. ஞானமுடையவனாக இருக்கிறான்.*

***அல்குர்ஆன் (4: 156,157,158)***

மேற்சொன்ன வசனங்களில் அல்லாஹு¬தஆலா ஈசா நபியவர்கள் கொலை செய்யப்படவில்லை என்னும் விஷயத்தை மிக ஆணித்தரமாகக் குறிப்பிடுகின்றான்.

அதேப்போன்று, நாங்கள் தான் ஈசா நபியைக் கொன்றோம் என்று யார் கூறுகிறார்களோ அவர்கள் அல்லாஹ்வின் சாபத் திற்குரியவர்கள் எனும் விஷயத்தையும் மேற்சொன்ன வசனத் தில் அல்லாஹ் குறிப்பிடுகிறான். மேலும், ஈசா நபியவர்கள் கொலை செய்யப்பட்டுவிட்டார்கள் என்று கூறுவோர் வெரும் யூகத்தை தான் பின்பற்றுகின்றனரே தவிர ஒரு உறுதியான கருத்து அவர்களிடம் இல்லை என்பதையும் அல்லாஹ் இந்த வசனங்களில் குறிப்பிடுகிறான்.

**ஈசா நபியின் வருகை பற்றிய ஆதாரங்கள்:**

*அல்லாஹ்வால் கைப்பற்றப்பட்டு பாதுகாக்கப்பட்டிருக்கும் ஈசா (அலை) அவர்கள் கியாமத் நாளின் நெருக்கத்தில் மீண்டும் பூமிக்கு வருகை தருவார்கள் என்பது குர்ஆன் மற்றும் சுன்னாவின் மூலம் ஊர்ஜிதமான ஒரு விஷயம். எனவே, ஈசா நபியின் வருகையை மறுக்கும் மறுப்பாளர்களுக்கு நாம் பதில் சொல்வதற்கு முன்பாக ஈசா (அலை) அவர்களின் இரண்டாம் வருகை சம்பந்தமாக வந்திருக்கும் ஆதாரங்களை முதலில் பார்ப்போம்.*

**முதல் ஆதாரம்:**

***ஈஸாவோ, நமது அடிமையே தவிர வேறில்லை. அவர் மீது நாம் அருள்புரிந்து, இஸ்ராயீலின் சந்ததிகளுக்கு அவரை நாம் ஓர் உதாரணமாக்கினோம். நாம் நாடினால் (உங்களை அழித்துவிட்டு பிறகு) உங்களுக்குப் பதிலாக வானவர்களை படைத்து, பூமியில் பிரதிநிதிகளாக ஆக்கிவிடுவோம்.***

***நிச்சயமாக (வரவிருக்கும்) மறுமைக்குரிய அத்தாட்சிகளில் அவரும் ஓர் அத்தாட்சியாவார். ஆகவே, நிச்சயமாக நீங்கள் இதில் சந்தேகிக்க வேண்டாம். என்னையே பின்பற்றி நடங்கள். இதுவே நேரான வழி.***

***அல்குர்ஆன் (43: 59,60,61)***

*ஈசா (அலை) அவர்களின் வருகை சம்பந்தமாக வந்திருக்கும்*

ஆதாரங்களில் முதன்மையான மற்றும் தெளிவான ஆதாரமாக இந்த வசனம் அமைந்துள்ளது.

இந்த வசனத்தில் அல்லாஹுதஆலா ஈசா (அலை) அவர்களை கியாமத் நாளின் அடையாளம் என்று கூறுகிறான். ஒருவரை கியாமத் நாளின் அடையாளம் என்று எப்போது கூற முடியுமென்றால் அவர் அந்த நாளுக்கு மிக நெருக்கத்தில் உலகத்தில் வாழ வேண்டும். அப்போது தான் அவரை கியாமத் நாளின் அடையாளம் என்று கூற முடியும். எனவே, ஈசா (அலை) அவர்கள் உலக அழிவிற்கு முன் உலக அழிவின் அத்தாட்சியாக மீண்டும் பூமிக்கு வருகை தருவார்கள் என்பதை நாம் நம்பியாக வேண்டும்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒருவரை கியாமத் நாளின் அடையாளம் என்று எப்படி கூற முடியும்? என்று யாரும் சந்தேகிக்க கூடாது என்பதற்காக, ''அவர் மறுமை நாளின் அடையாளமாவார்'' என்று அல்லாஹ் கூறிவிட்டு ''இந்த விஷயத்தில் நீங்கள் சந்தேகப்பட வேண்டாம்'' என்று தொடர்ச்சியாக கூறுகிறான்.

**இரண்டாவது ஆதாரம்:**

***வேதமுடையவர்களில் ஒவ்வொருவரும் அவர் (ஈஸா மீண்டும் வந்து) மரணிப்பதற்கு முன் அவரை நம்பிக்கை கொள்ளாமல் இருக்க மாட்டார்கள். கியாமத் நாளில் அவர் அவர்களுக்கு சாட்சியாக இருப்பார்.***

***அல்குர்ஆன் (4: 159)***

இந்த வசனம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அருளப் படுகிறது. இவ்வசனம் அருளப்படும் போது ஈசா நபியவர்கள் மரணித்திருக்கவில்லை என்பதும் இவ்வசனத்திலிருந்து தெரிகிறது.

ஏனெனில், ''நம்பிக்கை கொண்டார்கள்'' என்று இறந்தகால வினையாகக் கூறாமல் ''நம்பிக்கை கொள்ளாமல் இருக்க மாட்டார்கள்'' என்று எதிர்கால வினையாகக் கூறப்பட்டுள்ளது.

எனவே இது ஈசா நபியின் இரண்டாம் வருகையைத் தான் குறிக்கிறது.

மேலும், இந்த வசனத்தின் கருத்தை வலுவூட்டும் விதமாக வந்திருக்கும் அபூஹுரைரா (ரலி) அவர்களின் கூற்றையும் நாம் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும். ஈசா நபியின் வருகை சம்பந்தமாக வந்திருக்கும் நபிமொழியை அறிவித்த பிறகு அபூஹுரைரா (ரலி) அவர்கள் சொன்னார்கள். இதில் உங்களுக்கு சந்தேகம் இருந்தால் இவ்வசனத்தை (4:159) படித்துப் பார்த்துக் கொள்ளுங்கள்.

**நூல் : புகாரீ (3448)**

இந்த வசனத்தின் கீழ் நாம் இன்னொரு விஷயத்தையும் தெரிந்து கொள்ள வேண்டும். அதாவது, இந்த வசனத்தில் வேதமுடையோர் என்று கூறப்பட்டுள்ளது. இது யூதர்களையும், கிறிஸ்தவர்களையும் குறிக்கும்.

யூதர்களைப் பொறுத்தவரை அவர்கள் ஈசா நபியின் பகிரங்க எதிரிகளாக இருந்தனர். ஈசா நபியைப் பின்பற்றாமல் புறக்கணித்துவிட்டு இவர் தவறான வழியில் பிறந்தவர் என்றெல்லாம் விமர்சனம் செய்தனர்.

கிறிஸ்தவர்கள் ஈசா நபியை ஏற்றுக் கொண்டாலும் இறுதிவேதம் குர்ஆன் சொல்லுகின்ற முறையில் ஈசா நபியை நம்பவுமில்லை. ஏற்கவுமில்லை. எனவே இவ்விரு சாராரும் ஈசா நபியை நம்ப வேண்டிய விதத்தில் நம்பவுமில்லை. பின்பற்றவுமில்லை.

இப்படி இருக்கும்போது ஈசா (அலை) அவர்கள் மீண்டும் இப்பூமிக்கு வருகை தரும் போது இவ்விரு சாராரும் அவர்களை சரியான முறையில் நம்பிக்கை கொள்ளும் நிலைமை உருவாகும் என்பதை இவ்வசனம் நமக்கு முன்னறிவிப்புச் செய்கிறது. எனவே, இது எதிர்காலத்தில் நடக்கவிருக்கும் ஒரு நிகழ்ச்சியாகத்தான் இவ்வசனம் நமக்கு தெரிவிக்கிறது.

**மூன்றாவது ஆதாரம்:**

மேற்சொன்ன இரண்டு ஆதாரங்களும் குர்ஆனிலிருந்து எடுக் கப்பட்டதாகும். அடுத்ததாக ஈசா நபியின் வருகைப் பற்றி நபிமொழிகளில் நாம் பார்த்தால் எக்கச்சக்கமான அறிவிப்புகள் நமக்கு கிடைக்கின்றன. கிட்டத்தட்ட அதன் அறிவிப்புகளின் எண்ணிக்கை 70 ஆகும். அதில் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களின் எண்ணிக்கை 50 ஆகும். ஹதீஸ் கலையில் இப்படிப்பட்ட அறிவிப்புகளுக்கு 'முதவாதிர்' என்று சொல்லப்படும். அதாவது, ஒரே செய்தியை ஒன்றுக்கும் மேற்பட்டோர் அறிவிப்பது. இப்படி ஒவ்வொரு காலக்கட்டத்திலும் அந்த செய்தி அதிகமானோரால் அறிவிக்கப்பட்டிருக்கும். இந்த முதவாதிர் என்ற தரம் தான் ஹதீஸ் கலையில் மிக உயர்ந்த தரம்.

அந்த வகையில் ஈசா (அலை) அவர்களின் வருகை சம்பந்தமாக வந்திருக்கும் அனைத்து ஹதீஸ்களையும் இங்கு ஒன்று சேர்ப் பது நோக்கமல்ல. ஆதாரம் என்ற அடிப்படையில் ஒரு சில ஹதீஸ்களை மட்டும் நாம் இங்கு பார்ப்போம்,.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

''உங்களைச் சார்ந்த ஒருவரே உங்களுக்கு(த் தொழுவிக்கும்) இமாமாக இருக்க மர்யமின் மைந்தர் உங்களிடையே இறங்கு வாரேயானால் அப்போது உங்களுக்கு எப்படியிருக்கும்?

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (3449)**

ஈசா (அலை) அவர்களின் வருகையைக் காணும் முஸ்லிம்களின் நிலை எப்படியிருக்கும் என்பதை நபி (ஸல்) அவர்கள் இங்கு சித்தரிக்கிறார்கள். தஜ்ஜாலின் குழப்பங்களாலும் சோதனைகளா லும் துவண்டு போய் இருக்கும் முஸ்லிம்களுக்கு ஈசா நபியின் வருகை மிகுந்த மகிழ்ச்சியையே கொடுக்கும்.

மேலும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்)அவர்கள் கூறினார்கள்:

என் உயிர் யார் கையில் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! விரைவில்

(உலக அழிவுக்கு முன்) மர்யமின் மைந்தர் உங்களிடையே நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப்பார். பன்றியைக் கொள்வார். ஜிஸ்யா (எனும் காப்பு) வரியை வாங்க மறுப்பார். (இஸ்லாம் ஒன்றையே மக்களிடமிருந்து ஏற்பார்) வாங்கிக் கொள்வதற்கு யாரும் இல்லாத அளவுக்குச் செல்வம் கொழிக்கும். இந்த நேரத்தில் ஒரேயொரு சஜ்தா (சிரவணக்கம்) இந்த உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாக (மக்களின் பார்வையில்) ஆகிவிடும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (3448)**

இதுவரை ஈசா (அலை) அவர்களின் வருகை சம்பந்தமாக வந்திருக்கும் ஒரு சில ஆதாரங்களை நாம் பார்த்தோம். இத்தனை ஆதாரங்கள் சொல்லப்பட்டிருந்தும் ஈசா நபியின் வருகையை மறுப்பவர்கள் கண்டிப்பாக வழிகேடர்களும், குழப்பவாதிகளு மாகவே இருக்க முடியும்.

**ஈசா நபியின் வருகை ஏன்?**

மீண்டும் ஈசா (அலை) அவர்கள் இவ்வுலகிற்கு எதற்காக வரு கிறார்கள்? என்ன பின்னணி? என்று நமக்கு கேள்வி வரலாம்.

இதை நம்முடைய வெற்று அறிவுகளால் சிந்திக்க முடியாது. அனைத்தையும் அறிந்தவன் அல்லாஹ் ஒருவன் மட்டுமே. தான் நாடியதை அவன் செய்வான். அவனிடம் யாரும் குறுக்கு விசா ரணை செய்ய முடியாது.

என்றாலும் ஒரு சில பின்னணிகளை குர்ஆன் ஹதீஸ் ஒளியில் இமாம்கள் கூறுகிறார்கள்.

1. உலகில் வந்த இறைத்தூதர்களில் யாருக்கும் அவர் தேவகுமாரன் என்றும் கடவுள் என்றும் அவதூறு சொல்லப்பட்டதில்லை. ஆனால், இந்த அவதூறு ஈசா (அலை) அவர்களுக்கு சொல் லப்பட்டது. எனவே, இது நுபுவ்வத்தில் (தூதுத்துவத்தில்) ஏற்பட்ட ஒரு கலங்கம் ஆகும். இந்த கலங்கத்தை துடைக்கவும்

கிறிஸ்தவர்களுக்கு சரியான கொள்கையை தெளிவுபடுத்தவும் ஈசா நபியின் வருகை அவசியமாகிறது.

2. ஈசா (அலை) அவர்கள் பனூ இஸ்ரவேலர்களுக்கு அனுப்பப் பட்ட தூதர்களில் இறுதியானவர். முஹம்மத் (ஸல்) அவர்கள் அனைத்து சமுதாயத்துக்கும் அனுப்பப்பட்ட தூதர்களில் இறுதி யானவர்.

இந்த விஷயத்தில் யூதர்கள் பல்வேறு விதமான குழப்பங்கள் செய்தார்கள். எல்லா வேதங்களிலும் 'மஸீஹ்' என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இச்சொல் ஈசா நபி மற்றும் தஜ்ஜால் ஆகிய இரண்டு பேருக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது. வித்தியாசம், ஈசா நபி நேர்வழியின் மஸீஹ். தஜ்ஜால் வழிகேட்டின் மஸீஹ்.

ஈசா (அலை) அவர்கள் யூதர்களுக்கு நபியாக அனுப்பப்பட்ட போது யூதர்கள் ஈசா நபியை 'இவர் நேர்வழியின் மஸீஹ் கிடை யாது. தஜ்ஜால் தான் நேர்வழியின் மஸீஹ்' என்று கூறி அவர்களை ஏற்க மறுத்தனர். எனவேதான் தஜ்ஜாலின் வருகையை நினைத்து உலகமே பயந்து கொண்டிருக்கும் போது, யூதர்கள் அவனின் வருகைக்காக காத்திருக்கிறார்கள்.

எனவே, குழப்பம் செய்யக்கூடிய வழிகேட்டின் மஸீஹான தஜ்ஜாலை அழிப்பதற்கும் நேர்வழியின் மஸீஹ் யார் என்பதை நிரூபிப்பதற்கும் ஈசா நபியின் வருகை அவசியமாகிறது.

3. ஈசா நபியவர்கள் (இயேசு) கொலை செய்யப்பட்டு சிலுவை யில் அறையப்பட்டு விட்டார்கள் என்று யாரெல்லாம் தவறான நம்பிக்கை கொண்டுள்ளார்களோ அவர்களுக்கு பதிலடி கொடுக்கவும் ஈசா நபியின் வருகை அவசியமாகிறது. இதனால் தான் ஈசா (அலை) அவர்கள் உலகிற்கு வந்ததும் சிலுவைகளை உடைத்து கிறிஸ்தவர்களின் பொய் பிரச்சாரத்தை முறியடிப்பார்கள்.

4. மனிதனாகப் பிறந்த அனைவரும் பூமியில் தான் மரணிக்க வேண்டும் என்று அல்லாஹ் தீர்மானித்திருக்கின்ற விதியை

*நடைமுறைப்படுத்துவதற்கும் ஈசா நபியின் வருகை கட்டாய மாகிறது.*

## ஈசா நபியின் பெயரும் அவர்களின் தோற்றமும் :

*ஈசா (அலை) அவர்களின் இயற்பெயர் 'அல்மஸீஹ் ஈசா பின் மர்யம்' என்பதாகும். இந்த முழுப்பெயர் திருக்குர்ஆனில் மூன்று இடங்களில் வந்தள்ளது. (3: 45) (4:157) (4:171)*

*இதில் 'ஈசா' என்ற வார்த்தை மட்டும் குர்ஆனில் (13) இடங்களில் வந்துள்ளது. (2:87) (2:253) (3:52) (3:55) (3:59) (5:110) (5:112) (5:114) (5:116) (19:34) (43:63) (61:6) (61:14) இந்தப் பெயரைக்கொண்டே ஈசா (அலை) அவர்கள் அறியப்படுகிறார்கள். இந்த வார்த்தை அரபிமொழி கிடையாது. இப்ரானி அல்லது சுர்யானி மொழியைச் சார்ந்ததாகும்.*

*அதேப்போன்று 'அல்மஸீஹ்' என்ற பெயர் மட்டும் குர்ஆனில் (5) இடங்களில் வந்துள்ளது. (4:172) (5:17) (5:72) (5:75) (9:30) இந்த மஸீஹ் என்ற வார்த்தை அரபி மொழியைச் சார்ந்ததாகும். தமிழில் அதற்கு தடவுபவர், தடவப்பட்டவர் என்று பொருள்.*

*ஈசா நபிக்கு மஸீஹ் என்று பெயர் வரக் காரணம் என்ன? என்பதற்கு அறிஞர்கள் பலரும் பல காரணங்களைக் குறிப்பிட்டுள்ளார்கள். அறிந்து கொள்வதற்காக ஒரு சிலதை மட்டும் இங்கு பார்ப்போம்.*

*1. அல்லாஹுதஆலா ஈசா (அலை) அவர்களுக்கு கொடுத்த அற்புதங்களில் ஒன்று அவர்கள் குருடரையும் வெண்குஷ்ட காரரையும் தன் கைகளால் தடவினால் அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு அவர்கள் குணம்பெற்றவர்களாக ஆகி விடுவார்கள். தன் கைகளால் தடவுவதால் 'அல் மஸீஹ்' என்று அழைக்கப்படுகிறார்கள்.*

*2. எண்ணெய் மூலம் தடவப்பட்டு தன் தாயின் வயிற்றிலிருந்து வெளிவந்ததால் 'மஸீஹ்' என்று சொல்லப்படுகிறது.*

*3. ஈசா (அலை) அவர்கள் பிறக்கும் போதே அல்லாஹ்வின்*

*பரக்கத்தைக் கொண்டு தடவப்பட்டவராக பிறந்தார்கள். இதன் காரணமாகவே நான் எங்கிருந்த போதும் அல்லாஹ் என்னை பாக்கியம் நிறைந்தவனாக ஆக்கியுள்ளான் என்று சொன்னார்கள். (19:31)*

*இவையனைத்தும் அறிஞர்களின் கருத்துக்கள் மட்டுமே. சரியான விளக்கத்தை அல்லாஹ்வே நன்கறிந்தவன்.*

*இது தவிர ஈசா (அலை) அவர்கள் 'ரூஹுல்லாஹ்' என்றும் 'கலிமதுல்லாஹ்' என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறார்கள். அதேப்போன்று, கிறிஸ்தவர்களால் 'இயேசு' மற்றும் 'கர்த்தர்' என்றும் ஆங்கிலத்தில்* **'Jesus'** *(ஜீஸஸ்) என்றும் அழைக்கப் படுகிறார்கள்.*

*அல்லாஹுதஆலா குர்ஆனில் ஈசா (அலை) அவர்களுக்கு வைத்த 'மஸீஹ்' எனும் பெயரைத்தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் தஜ்ஜாலுக்கு பெயராக வைத்துள்ளார்கள். எனவே, இந்த இடத்தில் நாம் இரண்டு பேருக்கும் உள்ள வித்தியாசத்தை விளங்கிக்கொள்ள வேண்டும்.*

*1. ஈசா (அலை) அவர்களோடு வந்திருக்கும் 'மஸீஹ்' செய் வினையையும் தஜ்ஜாலோடு வந்திருக்கும் மஸீஹ் செயல்பாட்டு வினையையும் குறிக்கும். அதாவது, ஈசா (அலை) அவர்கள் நோய்களை தன் கரங்களால் தடவி குணமாக்குவார்கள். ஆனால், தஜ்ஜால் ஒரு கண் தடவப்பட்டவனாக இருப்பான்.*

*2. இரண்டாவது வித்தியாசம். ஈசா (அலை) அவர்கள் நேர்வழியின் மஸீஹாவார்கள். தஜ்ஜால் வழிகேட்டின் மஸீஹாவான். ஈசா (அலை) அவர்கள் உண்மையாளர். தஜ்ஜால் பொய்யனாவான்.*

## தோற்றம்:

*ஈசா (அலை) அவர்கள் பற்றிய அனைத்து குறிப்புகளும் குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் காணக்கிடைக்கின்றன. அத்தகைய*

உயர்மிகு நபியின் எழில்மிகு தோற்றம் குறித்தும் நபிமொழிகளில் கூறப்பட்டுள்ளது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மிஃராஜ் பயணம் (விண் வெளிப் பயணம்) சென்றிருந்த போது பல நபிமார்களைப் பார்த்தார்கள். அதில் ஈசா நபியும் ஒன்று. அவர்களைப் பற்றி பல அங்க அடையாளங்களை நபி (ஸல்) அவர்கள் நமக்கு வர்ணித்துள்ளார்கள்.

*1. சிவப்பு நிறமுடையவர்.*

*2. நடுத்தர உயரமுடையவர்.*

*3. சுருள் முடி உடையவர்.*

*4. அகன்ற மார்புடையவர்.*

*5. (அப்போதுதான்) குளியலறையிலிருந்து வெளியே வந்தவரைப் போன்று இருந்தார்.*

**நூல்: புகாரீ (3437, 3438)**

*6. சிவப்பும் வெண்மையும் கலந்த மிதமான சரும அமைப்பை கொண்டவர்.*

*7. படிந்த தொங்கலான தலைமுடியுடையவர்.*

**நூல்: புகாரீ (3239)**

அதேப்போன்று, நபி (ஸல்) அவர்கள், தான் கண்ட கனவின் மூலமாகவும் ஈசா நபியின் வர்ணனையை நமக்கு விவரித்துள் ளார்கள்.

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*இன்றிரவு கஅபாவின் அருகே நான் கனவில் (ஒரு நிகழ்ச்சியைக்) கண்டேன். மாநிற மனிதர்களிலேயே மிக அழகான மாநிறம்*

கொண்ட மனிதர் ஒருவர் அங்கிருந்தார். அவரது தலைமுடி அவரது தோள்களுக்கிடையே தொங்கிக் கொண்டிருந்தது. படிய வாரப்பட்ட தொங்கலான முடியுடையவராக அவர் இருந்தார். அவரது தலையிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. இரு மனிதர்களின் தோள்கள் மீது தமது இரு கைகளையும் அவர் வைத்துக் கொண்டு கஅபாவைச் சுற்றிக் கொண்டிருந்தார். நான், ''இவர் யார்?'' என்று கேட்டேன். ''மர்யமின் மகன் ஈசா அவர்கள்'' என்று பதிலளித்தார்கள்.

**நூல் : புகாரீ (3440)**

ஈசா (அலை) அவர்களின் தோற்றத்தைப் பற்றி வர்ணித்த நபி (ஸல்) அவர்கள் ஈசா நபியை ஒரு மனிதரோடு ஒப்பிட்டும் விளக்கியுள்ளார்கள்.

''இறைத்தூதர்கள் எனக்குக் காட்டப்பட்டனர். மூஸா (அலை) அவர்கள் (யமனியர்களான) ''ஷனூஆ'' குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று உயரமான மனிதராக இருந்தார்கள். மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களையும் நான் பார்த்தேன். அவர்கள் என் தோழர் உர்வா பின் மஸ்ஊதுக்கு மிக நெருக்கமான சாயலுடையவர்களாக இருந்தார்கள்.

**அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி) நூல் : முஸ்லிம் (271)**

இவைகள்தான் ஆதாரங்கள் அடிப்படையில் ஈசா (அலை) அவர்களின் தோற்றம் பற்றி வந்திருக்கும் சரியான வர்ணனை ஆகும். இது தவிர கிறிஸ்தவர்களால் இன்று சித்தரிக்கப்பட்டு காட்டப்படும் போலியான உருவ அமைப்பிற்கு எந்த ஆதாரமும் கிடையாது. அது வெறும் கற்பனை மட்டுமே. எனவே, அந்த தோற்றத்தில் ஈசா நபியை நாம் கற்பனை செய்து பார்க்கக்கூடாது.

## ஈசா நபி இறங்குமிடம்:

பூமிக்கு வருகை தரும் ஈசா (அலை) அவர்கள் எந்த இடத்தில் வந்து இறங்குவார்கள் என்பது பற்றிய குறிப்பும் நபிமொழிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*''இதற்கிடையே மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களை அல்லாஹ் (பூமிக்கு) அனுப்பி வைப்பான். அவர் (சிரியாவின் தலைநகர்) திமஷ்க் (டமாஸ்கஸ்) நகரின் கிழக்குப் பகுதியிலுள்ள வெள்ளைக்கோபுரத்திற்கு அருகில் இரு வானவர்களின் இறக்கை கள் மீது தம் கைகளை வைத்தவாறு இறங்குவார்.*

*அப்போது அவர் குங்குமப்பூ நிறத்தில் இரு ஆடைகளை அணிந்திருப்பார். அவர் தமது தலையைத் தாழ்த்தினால் நீர்த்துளி சொட்டும். தலையை உயர்த்தினாலோ வெண்முகத்தைப் போன்று நீர்த்துளி வழியும். அவரது மூச்சுக்காற்றைச் சுவாசிக்கும் (அதாவது அவரை நெருங்கும்) எந்தவோர் இறைமறுப்பாளனும் சாகாமல் இருக்க மாட்டான். அவர் விடும் மூச்சானது அவரது பார்வை எட்டும் தூரம் வரை செல்லும்.''*

***அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)***

***நூல் : முஸ்லிம் (5629)***

### எந்த சூழலில் வருவார்கள்?

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*தஜ்ஜாலின் கொடுமை தாங்க முடியாமல் முஸ்லிம்கள் 'அஃபீக்' எனும் கனவாயில் தஞ்சம் புகுவார்கள். அந்த இடத்தை தஜ்ஜாலும் யூதர்களும் முற்றுகையிடுவார்கள். இந்த முற்றுகை முஸ்லிம்களுக்கு மிக பாரமானதாக இருக்கும். இந்த சமயத்தில் தான் முஸ்லிம்கள் தஜ்ஜாலுடன் போர் செய்வதற்கு முடிவு எடுத்து காலையில் ஃபஜ்ருடைய தொழுகைக்கு தயாராகி, இகாமத் சொல்லும் சமயத்தில் ஈசா (அலை) அவர்களின் வருகை நிகழும். ஈசா நபியைக் கண்டதும் இமாம் மஹ்தீ (அலை) அவர்கள் தொழ வைக்க கோரிக்கை வைப்பார்கள். ஆனால், ஈசா (அலை) அவர் கள் அதற்கு மறுப்பு தெரிவித்து இமாம் மஹ்தீயையே தொழ வைக் கச் சொல்வார்கள்.*

*தொழுகையில் ருகூவிலிருந்து எழும் போது 'ஸமிஅல்லாஹுˉ லிமன் ஹமிதா' என்று சொல்லிய பிறகு 'கதலல்லாஹுˉத் தஜ்ஜால்*

*வ அழ்ஹரல் முஃமினீன்' (அல்லாஹ் தஜ்ஜாலைக் கொன்று முஸ்லிம்களை மிகைக்கச் செய்வானாக!) என்று சொல்லப்படும்.*

***நூல்: அஹ்மத் (17226) இப்னு ஹிப்பான் (6938)***

## தஜ்ஜாலைக் கொல்வார்கள்:

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*''ரோம பைஸாந்தியர், அஃமாக் மற்றும் தாபிக் ஆகிய இடங்களில் நிலை கொள்ளாத வரை யுக முடிவு நாள் ஏற்படாது. அவர்களை நோக்கி மதீனாவிலிருந்து ஒரு படை புறப்படும். அன்றைய நாளில் பூமியில் வசிப்போரில் அவர்களே சிறந்தவர்களாயிருப் பர். அவர்கள் அணிவகுத்து நிற்கும் போது ரோமர்கள், எங்களுக் கும் எங்களில் சிறைக்கைதிகளாகப் பிடிக்கப்பட்டோருக்கு மிடையே நாங்கள் போர் செய்ய எங்களை விட்டு விடுங்கள் என்று கூறுவார்கள். அப்போது முஸ்லிம்கள் ''இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் சகோதரர்கள் மீது போர் தொடுக்க உங்களை நாங்கள் அனுமதிக்க மாட்டோம்'' என்று சொல்வார்கள்.*

*ஆகவே, ரோமர்கள் முஸ்லிம்கள் மீது போர் தொடுப்பார்கள். அப்போது முஸ்லிம்களில் மூன்றிலொரு பகுதியினர் தோற்று வெருண்டோடுவார்கள். அவர்களை அல்லாஹ் ஒரு போதும் மன்னிக்கவே மாட்டான்.*

*அவர்களில் மூன்றிலொரு பகுதியினர் கொல்லப்படுவார்கள். அவர்கள் அல்லாஹ்விடம் மிகச்சிறந்த உயிர்த்தியாகிகளாவர். மூன்றிலொரு பகுதியினர் (ரோமர்களை) வெற்றி கொள்வார்கள். அவர்கள் (அதன்பின்னர்) ஒருபோதும் சோதனைக்குள்ளாக்கப்பட மாட்டார்கள். இவ்வாறு அவர்கள் கான்ஸ்டாண்டிநோபிளை வெற்றி கொள்வார்கள்.*

*அவர்கள் தம் வாட்களை ஆலிவ் மரங்களில் தொங்கவிட்டுப் போர்ச் செல்வங்களை பங்கிட்டுக் கொண்டிருக்கும் போது அவர்களிடையே ஷைத்தான், ''நீங்கள் புறப்பட்டு வந்த பின்*

உங்கள் குடும்பத்தாரிடையே மஸீஹ் (தஜ்ஜால்) வந்துவிட்டான்'' என்று குரலெழுப்புவான்.

உடனே அவர்கள் தம் குடும்பத்தாரை நோக்கிப் புறப்பட்டுச் செல்வார்கள். ஆனால், அது பொய்யான செய்தியாயிருக்கும். அவர்கள் ஷாமுக்கு (சிரியா) வரும் போது, 'மசீஹ்' (தஜ்ஜால்) புறப்படுவான்.

இந்நிலையில், அவர்கள் போருக்காக ஆயத்தமாகி அணிகளைச் சீர் செய்து கொண்டிருக்கும்போது, தொழுகைக்காக இகாமத் சொல்லப்படும். அப்போது மர்யமின் புதல்வர் ஈசா (அலை) அவர்கள் (வானிலிருந்து) இறங்கி வந்து அவர்களுக்குத் தலைமை யேற்பார்கள். அவரை அல்லாஹ்வின் விரோதி (தஜ்ஜால்) காணும்போது, தண்ணீரில் உப்பு கரைவதைப்போன்று கரைந்து போவான். அவனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டால் கூட அவன் தானாகக் கரைந்து அழிந்துவிடுவான். ஆயினும், ஈசாவின் கரத்தால் அவனை அல்லாஹ் அழிப்பான். அப்போது ஈசா (அலை) அவர்கள் தமது ஈட்டி முனையில் படிந்துள்ள அவனது இரத்தத்தை மக்களுக்குக் காட்டுவார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (5553)**

மேலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

''பின்னர், ஈசா (அலை) அவர்கள் தஜ்ஜாலைத் தேடிச் செல் வார்கள். இறுதியில் (பாலஸ்தீனத்திலுள்ள) 'லுத்து' எனும் நகரத்தின் தலைவாயிலருகே அவனைக்கண்டு, அவனைக் கொன்றொழிப்பார்கள்.''

**அறிவிப்பவர்: நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி) நூல்: முஸ்லிம் (5629)**

மேலும், இந்தப் போரின் போது தான் தஜ்ஜாலுடன் இருக்கும் 70,000 யூதர்களையும் முஸ்லிம்கள் கொலை செய்வார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

''முஸ்லிம்கள் யூதர்களுடன் போர் தொடுக்காத வரை யுக முடிவு

*நாள் வராது. அப்போது, முஸ்லிம்கள் (பதிலடியாக) யூதர்களைக் கொல்வார்கள்.*

*எந்த அளவுக்கென்றால், யூதன் ஒருவன் அந்தக் கல்லுக்கும் மரத்துக்கும் பின்னால் ஒளிந்து கொள்வான். உடனே, அந்தக் கல் அல்லது அந்த மரம், முஸ்லிமே! அல்லாஹ்வின் அடியாரே! இதோ எனக்குப் பின்னால் யூதன் ஒருவன் இருக்கிறான். உடனே நீ வந்து அவனைக் கொன்றுவிடு'' என்று கூறும். பெரிய உடை மரத்தைத் தவிர, ஏனெனில் அது யூதர்களின் மரமாகும்.''*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (5601)***

## நீதமான ஆட்சியும், நிம்மதியான வாழ்வும்:

*தஜ்ஜாலையும் யூதர்களையும் அழித்தொழித்த பிறகு ஈசா (அலை) அவர்கள் நீதமான ஆட்சியை உலகத்தில் நிலைநாட்டுவார்கள். அந்த நீதமான ஆட்சிக்காலத்தில் உலகின் நிலை எவ்வாறிருக்கும் என்பதை பின்வரும் ஹதீஸ்களிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளலாம்.*

*''பின்னர் தஜ்ஜாலிடமிருந்து அல்லாஹ் காப்பாற்றிய ஒரு சமுதாயத்தார் மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களிடம் வருவார்கள். அவர்களின் முகங்களை(ப் பரிவோடு) அவர் தடவிக்கொடுத்துச் சொர்க்கத்தில் அவர்களுக்குக் கிடைக்கவிருக்கும் படித்தரங்கள் குறித்து அவர்களுக்குத் தெரிவிப்பார்'' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)***
***நூல் : முஸ்லிம் (5629)***

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :*

*''என் உயிர் யார் கையில் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! விரைவில் (உலக அழிவுக்கு முன்) மர்யமின் மைந்தர் உங்களிடையே நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப்பார். பன்றியைக்*

*கொல்வார். ஜிஸ்யா (எனும் காப்பு) வரியை வாங்க மாட்டார். வாங்கிக் கொள்வதற்கு யாரும் இல்லாத அளவிற்கு செல்வம் கொழிக்கும். அந்த நேரத்தில் ஒரேயொரு சஜ்தா (சிரவணக்கம்) இந்த உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாக (மக்களின் பார்வையில்) ஆகிவிடும்.''*

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (3448)**

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*''அல்லாஹ்வின் மீதாணையாக! (உலக அழிவுக்குமுன்) மர்யமின் மைந்தர் (ஈசா, உங்களிடையே) நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப் பார். பன்றியைக் கொல்வார். ஜிஸ்யா (எனும் காப்பு) வரியை வாங்க மறுப்பார். அப்போது (உயர்ந்த செல்வமான) ஒட்டகங்கள் அப்படியே விடப்படும். அவற்றை யாரும் தேடி அலைய மாட்டார்கள்.*

*(அந்த நேரத்தில் மக்களிடையே) பகைமையும் வெறுப்பும் போட்டி பொறாமையும் அகன்றுவிடும். செல்வங்களைப் பெற் றுக்கொள்ளுமாறு மக்கள் அழைக்கப்படுவார்கள். ஆனால், அதை யாரும் ஏற்க மாட்டார்கள்.*

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (243)**

*''அன்றைய நாளில் (எந்த அளவுக்கு வளம் கொழிக்குமெனில்) ஒரு குழுவினர் சேர்ந்து ஒரேயொரு மாதுளம் பழத்தை உண்பர். அதன் தோலி அவர்கள் அனைவருக்கும் நிழல் அளிக்கும். அவர்களுக் குப் பால் வளமும் கிட்டும். எந்த அளவுக்கென்றால் பால் தரும் ஓர் ஒட்டகம் ஒரு பெரும் கூட்டத்துக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் பசுவொன்று ஒரு குலத்தாருக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் ஆடொன்று உறவினர்கள் அடங்கிய ஒரு கூட்டத்திற்கே போதுமானதாயிருக்கும்'' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

**நூல் : முஸ்லிம் (5629)**

*''ஈசா அலை அவர்கள் வந்ததற்கு பிறகுள்ள வாழ்க்கை மகிழ்ச்சி தான். மழைபொழிய வானத்திற்கு உத்தரவிடப்படும். விளைவிக்க பூமிக்கு கட்டளையிடப்படும். எந்தளவுக்கென்றால் நீ ஸஃபா மலையின் மீது விதைத்தாலும் அது விளைச்சலைத்தரும். இன்னும் ஒரு மனிதன் சிங்கத்தை கடந்து செல்வான். அது அவனுக்கு எந்த தீங்கும் அளிக்காது. மேலும், பாம்பை மிதிப்பான். அது அவனுக்கு எந்த தீங்கும் அளிக்காது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)***
***நூல் : அல் ஜாமி உஸ்ஸஃகீர் (7366)***

## ஈசா நபி ஹஜ் செய்வார்கள் :

*இரண்டாம் வருகை தரும் ஈசா (அலை) அவர்கள் இஸ்லாத்தின் கடமைகளில் ஒன்றான ஹஜ்ஜை (புனித பயணத்தை) நிறைவேற்றுவார்கள் என்ற செய்தியை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நமக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.*

*''என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது ஆணையாக! (இறுதி நாட்களில்) மர்யமின் புதல்வர் (ஈசா) அவர்கள் (மக்கா - மதீனா இடையே உள்ள) 'ஃபஜ்ஜுர்ரவ்ஹா' எனுமிடத்தில் ஹஜ்ஜுக்காக அல்லது உம்ராவுக்காக அல்லது அவ்விரண்டுக்குமாகத் தல்பியாச் சொல்வார்கள்'' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (2403)***

## இரண்டாம் வருகை முடிவுறும் காலம்:

*பூமியிலிருந்து உயர்த்தப்பட்டு வானுலகில் பாதுகாக்கப்பட்டு மீண்டும் இப்பூமிக்கு வரும் ஈசா (அலை) அவர்களின் வாழ்க்கை நிரந்தரமானதல்ல. ஒவ்வொரு பொருளுக்கும் அல்லாஹ் அழிவைத் தீர்மானித்துவிட்டான் என்னும் அல்லாஹ்வின் விதி ஈசா நபியையும் வந்தடையும்.*

*தஜ்ஜாலையும், யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரையும் அழித்தொழித்த பிறகு பூமியில் நீதமான ஆட்சியை நிலைநிறுத்தி மக்கள் மத்தியில் ஏகத்துவத்தை பிரகடனப்படுத்திய பிறகு தான் ஈசா (அலை) அவர்கள் மரணிப்பார்கள்.*

*ஈசா நபியின் இந்த இரண்டாம் வருகை முற்றுப்பெரும் காலம் குறித்தும் நபி (ஸல்) அவர்கள் நமக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.*

*''ஈசா (அலை) அவர்கள் 40 வருடங்கள் பூமியில் வாழ்வார்கள். பிறகு அவர்களின் உயிர் கைப்பற்றப்படும். முஸ்லிம்கள் அவர்களுக்காக (ஜனாசா) தொழுகை நடத்துவார்கள்.''*

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)**
**நூல் : அஹ்மத் (8902) அபூதாவூத் (3766)**

## 3. யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் வருகை

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்த பெரிய பத்து அடையாளங்களில் யஃஜூஜ் மஃஜூஜ் என்னும் கூட்டத்தினரின் வருகையும் ஒன்றாகும். ஈசா (அலை) அவர்கள் தஜ்ஜாலைக் கொன்ற பிறகு கியாமத் நாளின் அடுத்த அடையாளமாக இவர்களின் வருகை உண்டாகும். தஜ்ஜாலின் மூலம் எந்தளவு தீங்கும், குழப்பங்களும் பரவுமோ அதேப்போன்று, இவர்கள் மூலமாகவும் மிகப்பெரிய குழப்பங்கள் பூமியில் ஏற்படும். எனவே, இவர்களைப் பற்றி குர்ஆன், ஹதீஸில் சொல்லப்பட்ட முக்கிய தகவல்களையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். காரணம், இவைகள் மறுமை சார்ந்த நம்பிக்கையோடு தொடர்புடையதாகும்.*

### யஃஜூஜ் மஃஜூஜ் குறித்து அல்குர்ஆனில்:

*கியாமத் நாளின் முதன்மையான அடையாளமாகத் திகழும் தஜ்ஜாலைப் பற்றி கூட குர்ஆனில் எந்த குறிப்பும் கிடையாது. ஆனால், இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரைப் பற்றிய*

குறிப்பு குர்ஆனில் இடம்பெற்றுள்ளது என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

''இரு மலைகளின் இடைவெளியை அவர் அடைந்தபோது அவற்றிற்கு முன்னால் மக்கள் சிலரைக் கண்டார். அவர்கள் பேச்சை (எளிதில்) புரியக்கூடியவர்களாக இருக்கவில்லை.

அவர்கள் (இவரை நோக்கி ஜாடையாக) ''துல்கர்னைனே! நிச்சயமாக யஃஜூஜ் மஃஜூஜ் (என்னும் மக்கள்) எங்கள் ஊரில் (வந்து) பெரும் குழப்பம் செய்கிறார்கள். எங்களுக்கும் அவர்களுக்கும் இடையில் நீர் ஒரு தடையை ஏற்படுத்தும் பொருட்டு ஒரு தொகையை நாங்கள் சேகரம் செய்யலாமா? என்று கேட்டார்கள்.

அதற்கவர், ''என் இறைவன் எனக்குக் கொடுத்திருப்பதே (போது மானது) மிக்க மேலானது. (உங்கள் பொருள் தேவையில்லை எனினும், உங்கள்) உழைப்பைக் கொண்டு எனக்கு உதவி செய் யுங்கள். உங்களுக்கும் அவர்களுக்கும் இடையில் உறுதியான ஒரு தடுப்பை (சுவரை) எழுப்பி விடுகிறேன்'' என்றும்

''நீங்கள் (அதற்குத் தேவையான) இரும்புப்பாலங்களை என்னிடம் கொண்டு வாருங்கள்'' என்றும் கூறி, '(அவற்றைக் கொண்டு வந்து இரு மலைகளுக்கிடையில் இருந்த பள்ளத்தை நிறைத்து) இரு மலைகளின் உச்சிக்கு அவை சமமாக உயர்ந்த பின்னர் நெருப்பாக பழுக்கும் வரை அதை ஊதுங்கள்'' என்றார். (அதன் பின்னர்) ''செம்பையும் என்னிடம் கொண்டு வாருங்கள். நான் அதை உருக்கி அதன் மீது ஊற்றுவேன்'' என்றார்.

''பின்னர், அதைக் கடந்து வர (யஃஜூஜ் மஃஜூஜ்களால்) முடியாது. அதைத் துளைத்துத் துவாரமிடவும் அவர்களால் முடியாது'' (என்று கூறினார்).

(இவ்வாறு தயாரான தடுப்பைக் கண்ட அவர்) ''இது என் இறைவனின் அருள்தான். என் இறைவனின் வாக்குறுதி(யாகிய

*யுக முடிவு) வரும்போது இதை(யும்) தூள்தூளாக்கிவிடுவான். என் இறைவனின் வாக்குறுதி உண்மையாக இருக்கிறது'' என்று கூறினார்.*

*அந்நாள் வருவதற்குள் சிலர் சிலருடன் (கடல்) அலைகளைப் போல் மோதும் படி நாம்விட்டு விடுவோம். (பின்னர்) சூர் (எக்காளம்) ஊதப்பட்(டு அனைவரும் மடிந்து விட்)டால் பின்னர் (உயிர் கொடுத்து) அவர்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து விடுவோம்.*

***அல்குர்ஆன் (18: 93 – 99)***

*யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்திற்கு வழி திறக்கப்பட்டால் அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் (தண்ணீர்பாய்ந்து ஓடுவதைப்போல்) வழிந்து (உலகின் பல பாகங்களிலும் அதிசீக்கிரத்தில் பரவி) விடுவார்கள்.*

***அல்குர்ஆன் (21:96)***

*யஃஜூஜ் மஃஜூஜ் என்ற கூட்டம் இனிமேல் உண்டாகும் ஒரு கூட்டம் கிடையாது. ஏற்கனவே அவர்கள் படைக்கப்பட்டு மக்களுக்கு செய்த அத்துமீறல்களின் காரணமாக துல்கர்னைன் என்ற ஆட்சியாளரின் மூலமாக தடுப்புச்சுவர் எழுப்பப்பட்டு தடுக்கப்பட்டிருக்கிறார்கள். கியாமத் நாளின் நெருக்கத்தில் அந்த தடையை அல்லாஹ் உடைத்து அவர்களை வெளியாக்குவான். மேலும், அவர்களின் வருகையை கியாமத் நாளின் அடையாள மாகவும் ஆக்கியுள்ளான் என்பதை மேற்கண்ட வசனங்களிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளலாம்.*

## யார் இவர்கள்?

*யஃஜூஜ் மஃஜூஜ் என்பது வடகிழக்கு ஆசியாவில் வாழ்ந்த ஒரு சமூகத்தாரின் பெயராகும். இவர்கள் வளமிக்க நாடுகளைக் கொள்ளையடித்து வாழ்ந்து வந்தனர். ஆசிய ஐரோப்பிய நாடுகளைக் கூட்டம் கூட்டமாக வந்து தாக்கியுள்ளனர். மாஸ்கோ உள்ளிட்ட ரஷியப் பகுதிகளில் அவர்கள் வசித்துள்ளார்கள்.*

*இவர்களின் அராஜகச் செயல்களால் பாதிக்கப்பட்ட ஓர் அப்பாவி சமூகத்தார் பேரரசர் துல்கர்னைனிடம் தடுப்புச்சுவர் எழுப்புவதற்கு உதவி கேட்டதைப் பற்றியே மேற்சொன்ன வசனங்கள் குறிப்பிடுகின்றன.*

*இந்தப் பேரரசர் துல்கர்னைன் அவர்கள் இறைத்தூதர் இப்ராஹீம் (அலை) அவர்களுடைய காலத்தில் வாழ்ந்த ஒரு நல்ல மனிதராவார். உலகின் நாலா பாகங்களிலும் இவரது ஆட்சியதிகாரம் பரவியிருந்தது. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டு, மக்களுக்கு சேவை செய்யக்கூடிய விசால மனம் படைத்த மன்னராக இவர் விளங்கினார். ஆர்மீனியா, ஆதர்பைஜான் ஆகிய இரு மலைகளுக்கிடையில் தான் இவர் தடுப்புச்சுவர் எழுப்பி, அந்த மக்களை யஃஜூஜ் மஃஜூஜ் கூட் டத்தாரின் கொடுமைகளிலிருந்து காப்பாற்றினார்.*

***(நூல்: ஃபத்ஹுல் பாரீ)***

*இந்த கூட்டத்தினர் தனி இனம் கிடையாது. இவர்களும் நம்மைப் போன்ற ஒரு மனிதப்படைப்பு தான். இவர்களும் ஆதம் (அலை) அவர்களின் சந்ததியில் தோன்றியவர்கள் தான் என்பதை பின்வரும் நபிமொழி நமக்கு விளக்குகிறது.*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*‘‘வல்லவனும் மாண்புடையோனுமாகிய அல்லாஹ் மறுமை நாளில் (ஆதி மனிதரை நோக்கி) ‘ஆதமே! என்பான். அதற்கு அவர்கள் என் இறைவா இதோ வந்துவிட்டேன். கட்டளை யிடு காத்திருக்கிறேன் என்று கூறுவார்கள். அப்போது நீங்கள் உங்கள் வழித்தோன்றல்களிலிருந்து நரகத்திற்கு அனுப்பப் படவிருப்பவர்களை (மற்றவர்களிலிருந்து) தனியாகப் பிரித்திடு மாறு அல்லாஹ் உங்களுக்கு ஆணையிடுகிறான் என்று ஒருவர் கூறுவார்.*

*ஆதம் (அலை) அவர்கள் எத்தனை நரகவாசிகளை? என்று கேட்பார்கள். அதற்கு அவர், ஒவ்வோர் ஆயிரம் பேரிலிருந்தும்*

*தொள்ளாயிருத்துத் தொண்ணூற்றொன்பது பேரை (வெளியே கொண்டு வாருங்கள்) என்று பதிலளிப்பார். இப்படி அவர் கூறும் வேளையில் (அங்கு நிலவும் பயங்கர சூழ்நிலையின் காரணத்தால்) கர்ப்பம் கொண்ட பெண் ஒவ்வொருத்தியும் கர்ப்பத்தை (பீதியின் காரணத்தால் அரை குறையாகப்) பிரசவித்து விடுவாள். பாலகன் கூட நரைத்து மூப்படைந்துவிடுவான். மக்களை போதையுற்றவர்களாக நீங்கள் காண்பீர்கள். ஆனால், அவர்கள் (உண்மையிலேயே மதுவால்) போதையுற்றிருக்க மாட்டார்கள். ஆனால், (அந்த அளவிற்கு) அல்லாஹ்வின் வேதனை கடுமையாய் இருக்கும்.*

*(இவ்வாறு நபி கூறியதைக்கேட்ட) நபித்தோழர்கள் அல்லாஹ் வின் தூதரே, எங்களில் யார் தான் அந்த ஒருவர் என்று கேட்டார் கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். சந்தோஷமாயிருங் கள் உங்களில் ஒருவரும், யஃஜூஜ் மஃஜூஜில் ஆயிரம் பேரும் என்றார்கள்.*

***அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : புகாரீ (4741, 3348)***

*யஃஜூஜ் மஃஜூஜ் ஆதம் (அலை) அவர்களின் சந்ததிகளாவர். அவர்கள் விடுவிக்கப்பட்டால் மக்களின் வாழ்க்கையைப் பாழாக்குவார்கள். அவர்களில் ஒருவர் தன் சந்ததிகளில் ஆயிரம் அல்லது அதற்கு மேற்பட்டோரை விட்ட நிலையில்தான் மரணிப்பார். அவர்களுக்கப்பால் தாவீல், தாரீஸ், மன்ஸக் என மூன்று சமூகங்கள் உள்ளனர்.*

***அறிவிப்பவர் : அப்துல்லா பின் அம்ரு (ரலி) நூல் : தப்ரானீ***

இந்த நபிமொழி நாம் கூறும் கருத்தை உறுதிப்படுத்துவதாக இருந்தாலும், இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடர் பலவீன மானதாகும் என்று இமாம் இப்னு கஸீர் மற்றும் இமாம் அல்பானீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

***நூல்: அல்பிதாயா வந்நிஹாயா, ஸில்ஸிலத்துள்ளயீஃபா (159/9)***

அதேப்போன்று, இந்த இடத்தில் ஒரு இட்டுக்கட்டப்பட்ட

*செய்தியையும் குறிப்பிடுவது மிக பொருத்தமானதாக இருக்கும். அதாவது, ''ஆதம் (அலை) அவர்களின் இந்திரியம் மண்ணில் பட்டு அதனால் படைக்கப்பட்டவர்கள் தான் இந்த யஃஜூஜ் மஃஜூஜ்கள் ஹவ்வா மூலம் உருவானவர்கள் அல்ல'' என்று சிலர் கூறியுள்ளனர்.*

*இது முழுக்க முழுக்க ஆதாரமற்ற செய்தியாகும். இந்தக் கருத்தை பல இமாம்கள் மறுத்துள்ளனர். இதில் கற்பனையும், யூகமுமே இருக்கிறது.*

*அடுத்து, இந்தக் கூட்டத்தினர் இறைத்தூதர் நூஹ் (அலை) அவர்களின் சந்ததியில் தோன்றியவர்கள் என்ற ஒரு குறிப்பும் வரலாற்று நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதாவது, பூமியில் வாழ்ந்து கொண்டிருந்தவர்களுக்கு எதிராக நூஹ் (அலை) அவர்கள் செய்த பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டதாக அல்லாஹுதஆலா அறிவிக்கிறான்.*

*நூஹ் (அலை) அவர்கள், ''என் இறைவனே! பூமியில் இந்நிராகரிப் பாளர்களில் ஒருவரையும் நீ வசித்திருக்க விட்டுவிடாதே'' என்று பிரார்த்தித்தார்கள்.*

***அல்குர்ஆன் (71: 26)***

*''மேலும் அவரையும் அவருடைய கப்பலில் இருந்தவர்களையும் நாம் பாதுகாத்தோம்'' (29:15) என்றும் கூறுகிறான்.*

*அதோடு ''அவரது சந்ததிகளையே பிற்காலத்தில் நிலைத்திருக்கும் படிச் செய்தோம்'' (33:77) என்றும் அல்லாஹ் கூறுகிறான்.*

*இந்த வசனங்கள் பிற்காலத்தில் வந்தவர்களெல்லாம் நூஹ் நபியின் சந்ததிகள் என்பதை உணர்த்துகிறது.*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*''நூஹ் (அலை) அவர்களுக்கு மூன்று பிள்ளைகள் இருந்தனர். அவர்கள் ஸாம், ஹாம், யாஃபிஸ், ஸாம் என்பவர் அரபுகளின்*

தந்தை, ஹாம் என்பவர் சூடானியர்களின் (நீக்ரோக்களின்) தந்தை யாஃபிஸ் என்பவர் துருக்கியர்களின் தந்தை.

**அறிவிப்பவர் : சமுரா பின் ஜுன்துப் (ரலி) நூல் : திர்மிதி (3866)**

இந்த ஹதீஸை இமாம் திர்மிதி (ரஹ்) அவர்கள் ஹஸன் நல்ல தரத்தில் அமைந்த ஹதீஸ் என்று குறிப்பிடுகிறார்கள்.

நூஹ் (அலை) அவர்களின் மூன்று மகன்களில் ஒருவரான யாஃபிஸ் என்பவரின் சந்ததியில் தான் இந்த யஃஜூஜ் மஃஜூஜ் உருவானார்கள் என்றும் வரலாற்று அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள்.

## எங்கு இருக்கிறார்கள்?

இந்த விசித்திர மனிதர்கள் எந்த நாட்டில் எந்தப்பகுதியில் அடைக்கப்பட்டுள்ளனர்? என்ற சந்தேகம் நமக்கு எழலாம். இது குறித்து தெளிவான எந்த ஒரு அறிவிப்பும் நமக்கு கிடைக்க வில்லை. மறுமை நாளின் அடையாளமாக அவர்களின் வருகை இருப்பதால் மறுமை நாளுக்கு முன்பு வரை மனிதர்களின் பார்வைக்குப் படாமல் அவர்கள் இருக்க வேண்டும். அதற்காக கூட அல்லாஹ் அவர்களை மறைத்து வைத்திருக்கலாம்.

நவீன கருவிகளையும் செயற்கை கோளையும் தொலைநோக்கிக் கருவிகளையும் கண்டுபிடித்துள்ள இந்த காலக்கட்டத்தில் இப்படி ஒரு கூட்டம் அடைக்கப்பட்டிருப்பது தெரியாமல் இருக்குமா? என்றொரு சந்தேகமும் நமக்கு எழலாம்.

எவ்வளவு தான் நவீன கருவிகள் உருவானாலும் அவைகள் முழு அளவுக்கு இன்னமும் பயன்படுத்தப்படவில்லை. அதேபோன்று அவையனைத்தும் அல்லாஹ்வின் ஏற்பாட்டிற்கு முன் பலகீனமானவைகள் தான். அனைத்தையும் அறிந்தவன் அல்லாஹ் ஒருவன் மட்டுமே.

ஏழு வானங்களையும் அவற்றைப்போல் பூமியையும் அல்லாஹ் தான் படைத்தான். இவற்றில் (தினசரி நிகழக்கூடிய) எல்லா

*விஷயங்களைப் பற்றிய கட்டளை இறங்கிக் கொண்டே இருக்கிறது. (ஆகவே நம்பிக்கையாளர்களே) நிச்சயமாக அல்லாஹ் சகலவற்றின் மீதும் ஆற்றலுடையவன் என்பதையும் நிச்சயமாக அல்லாஹ் தன் ஞானத்தால் எல்லாவற்றையும் ஆழமாக அறிந்துக் கொண்டிருக்கிறான். என்பதையும் நீங்கள் திட்டமாக அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இவற்றைப் படைத்தான்.*

***அல்குர்ஆன் (65:12)***

*எண்ணிக்கையால் பன்மடங்கு பரவியிருக்கும் அவர்களை ஏதோ ஒரு காரணத்திற்காக அல்லாஹ் நமக்கும் அவர்களுக்கும் மத்தியில் ஒரு திறையை ஏற்படுத்தியிருக்கிறான் என்பதை மட்டும் நாம் இந்த இடத்தில் விளங்கிகொள்ள வேண்டும். இனிவரும் காலங்களில் மனிதன் தன் நவீன கண்டுபிடிப்புகளின் மூலம் முயற்சி செய்து அவர்களை நெருங்கலாம். அந்த நேரம் அவர்கள் வெளியே வரவேண்டிய காலமாக, மறுமை நாளின் நெருக்கமாகத்தான் இருக்க முடியும்.*

*ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒரு குறிப்பிட்ட காலமுண்டு. பின்னர் நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.*

***அல்குர்ஆன் (6:67)***

## தடுப்புச்சுவரை யாரும் பார்த்துள்ளார்களா?

*தடுப்புச்சுவர் பற்றி வந்துள்ள வசனங்களை முன்பே நாம் இந்த தலைப்பின் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருந்தோம். துல்கர்னைன் என்ற பேரரசர் தன் மக்களின் கோரிக்கையை ஏற்று எந்தப்பகரமும் வாங்காமல் யஃஜூஜ் மஃஜூஜினரின் குழப்பங்களை விட்டும் தன் மக்களை பாதுகாக்க இரு மலைகளுக்கிடையே தடுப்புச்சுவர் கட்டுவதற்கு ஆணையிட்டார்கள்.*

*அந்த இரு மலைகளுக்கிடையிலிருந்து தான் அவர்களால் வர முடிந்தது. மீதமுள்ள பகுதிகள் ஆழமான கடல்களாகவும் உயர்ந்த மலைகளாகவும் இருந்தன. எனவே அல்லாஹ் கூறுவது போல் இரும்பினாலும் செம்பினாலும் அதனைக் கட்டினார்கள்.*

செம்பு என்பது உருக்கப்பட்ட உலோகமாகும். செங்கல்லுக்குப் பகரமாக இரும்பை வைத்தார். களிமண்ணிற்குப் பகரமாக செம்பை எடுத்துக் கொண்டார். இதனால்தான் பின்னர் அதனைக் கடந்து வர (யஃஜூஜ் மஃஜூஜ்களால்) முடியாது. அதனைத் துளைத்து துவாரமிடவும் அவர்களால் முடியாது என்று அல்லாஹ் கூறிக்காட்டுகிறான்.

அதாவது ஏணிகள் போன்றவற்றால் அதற்கு மேலே ஏறிவரவும் முடியாது. உளிகள், கோடாரிகள் போன்றவற்றால் அதைத்துளை போடவும் முடியாது. இப்புவியின் மேற்பரப்பில் அதைவிட கம்பீரமான ஒரு கட்டுமானம் ஏதுமில்லை. மக்களுக்கு உலக தேவையில் அதைவிட அதிக பயன்தரக்கூடிய சுவர் வேறொன்று மில்லை.

இந்த இடத்தில் கேள்வி என்னவென்றால் இந்த பிரம்மாண்ட தடுப்புச் சுவரை மனிதர்களில் யாரும் பார்த்துள்ளார்களா? என்பது தான்.

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் நான் அந்தத் தடுப்புச் சுவரை பல வண்ணக் கோடுகள் போட்ட ஒரு துணியைப் போல் பார்த் தேன் என்று சொன்னார். அதற்கு நபியவர்கள் 'நீர் பார்த்தது சரி தான்' என்று தெரிவித்தார்கள்.

**நூல் : புகாரீ (3345)**

இதனை இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் அறிவிப்பாளர் தொடர் இல்லாத 'முஅல்லக்' வகை ஹதீஸாக பதிவு செய்துள்ளார் கள். திருப்தியோடு ஏற்றுக் கொள்ளும் விதத்தில் அமைந்த முழுமையான அறிவிப்பாளர்கள் தொடருடன் இந்த நபி மொழியை நான் காணவில்லை என்று இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் தன் 'அல்பிதாயா வன்னிஹாயா' என்னும் நூலில் குறிப் பிடுகிறார்கள்.

அதே போன்று இப்னு ஜரீர் (ரஹ்) அவர்கள் 'ஜாமிஉல் பயான் லித்தப்ரீ' என்ற தன் திருக்குர்ஆன் விளக்கவுரையிலும் இந்த

கருத்தை பதிவு செய்துள்ளார்கள். கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதரே! நான் யஃஜூஜ் மஃஜூஜ் தடுப்புச்சுவரைப் பார்த்தேன் என்றார். 'அது எப்படி இருந்தது என்று சொல்' என அல்லாஹ்வின் தூதர் கேட்டார்கள். அதற்கவர் ''கோடுகள் போட்ட ஒரு துணியைப் போல் இருந்தது. ஒரு கோடு கருப்பு. ஒரு கோடு சிவப்பு'' என்று கூறினார். நீ அதைத்தான் பார்த்துள்ளாய் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஆனால் இந்த அறிவிப்பும் 'முர்ஸல்' என்ற பலவீனமான ஹதீஸாகும்.

அதேப் போன்று பின்வரும் சம்பவத்திலும் தடுப்புச் சுவர் பற்றிக் கூறப்படுகிறது.

கலீஃபா அல்வாஸிக் சில தூதர்களை அனுப்பி தடுப்புச்சுவர் இருக்கும் பகுதிக்குச் சென்று அது பற்றிய தகவல்களை சேகரித்தும் அதனை துல்கர்னைன் எப்படி கட்டியிருக்கிறார், அது எத்தன்மையிலுள்ளது என்பதை பார்த்து வருமாறும் கூறினார். அவர்கள் அங்கு சென்றடைவதற்கு உதவுமாறு பல அரசர்களுக்கு கடிதம் எழுதினார். அவ்வாறு அவர்கள் அங்கு சென்று திரும்பி அதன் தன்மையைப் பற்றி அவரிடம் தெரிவித்தார்கள். அதற்கு பிரம்மாண்டமான கதவுகள் இருப்பதாகவும், அதில் பல பூட்டுகள் போடப்பட்டிருப்பதாகவும், அது மிக நீண்டு உயர்ந்த உறுதியான கட்டிடமாக இருப்பதாகவும், அதைக் கட்டிய பின் எஞ்சிய இரும்பும் கருவிகளும் அங்குள்ள ஒரு உயர்ந்த கட்டிடத்தில் இருப்பதாகவும் தெரிவித்தனர். அந்தப் பிரதேசங்களின் எல்லையிலுள்ள காவலர்கள் அங்கு தொடர்ந்து இருந்து கொண்டிருப்பதாகவும் தெரிவித்தார்கள்.

இந்தச் சம்பவம் ஒரு வரலாற்றுச் செய்தியாகும். இது ஒரு ஆதாரப்பூர்வமான அறிவிப்பு கிடையாது. அனைத்து மறைவான விஷயங்களையும் அல்லாஹ்வே மிக அறிந்தவன். எனவே

அல்லாஹ்வோ அல்லது அவனுடைய தூதரோ ஒரு மறைவான விஷயத்தைப் பற்றி நமக்கு அறிவித்தால் தான் அது பற்றிய அறிவு நமக்கு கிடைக்கும்.

ஒரு வேளை மனிதர்களில் யாராவது அந்த தடுப்புச் சுவரைப் பார்த்திருக்கலாம். ஆனால் அப்படிப் பார்த்ததாக வரும் அறிவிப்பு களில் பலவீனம் இருப்பதால் உறுதியாக எதையும் சொல்ல முடியாது.

**யஃஜூஜ் மஃஜூஜின் அர்த்தம்:**

ஆங்கிலத்தில் யஃஜூஜ் மஃஜூஜிற்கு **'gog and magog'** என்று சொல்லப்படுகிறது. யஃஜூஜ் மஃஜூஜ் என்ற வார்த்தையின் பொருள் என்ன? என்பது குறித்து அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளது. சிலர் இது அரபி மொழி கிடையாது. அரபியல்லாத அஜமீ (வேற்று) மொழியைச் சார்ந்தது என்று கூறுகிறார்கள். மற்றொரு சாரார்: இது அரபி மொழிதான் என்று கூறுகிறார்கள். யஃஜூஜ் மஃஜூஜ் என்பது 'அல்அஜ்ஜு' எனும் அரபி வார்த்தையிலிருந்து பிரிந்த பிரிவுச் சொல்லாகும் என்றும் கூறுகிறார்கள். சரி அரபி மொழி என்று வைத்துக் கொண்டால் அதற்கு என்ன பொருள் என்பதற்கு மூன்று அர்த்தங்கள் தரப்படுகின்றது.

1. கொழுந்துவிட்டெரியும் நெருப்பிற்கு சொல்லப்படும்.

2. கடுமையான உப்பு கலந்த தண்ணீருக்கு சொல்லப்படும்.

3. கடுமையானசப்தம், பதற்றம் போன்றவற்றிற்கு சொல்லப்படும்.

இந்த அஜ்ஜு எனும் சொல் எதனோடு சேர்ந்து வருகிறதோ அதில் கடினமானது என்ற பொருளை இது தரும்.

**நூல்: லிசானுல் அரப் (207/2), அல்முஃஜமுல்வஸீத் : பக்கம் (24)**

இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் எண்ணிக்கையாலும் பலத் தாலும் மிகக் கடுமையானவர்களாக இருப்பதால் இவர்களுக்கு

*இப்பெயர் வைக்கப்பட்டிருக்கலாம். சரியான விளக்கத்தை அல்லாஹ்வே அறிந்தவன்.*

## யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் உருவ அமைப்பு:

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் வரும் வரை நீங்கள் போராடிக் கொண்டே இருப்பீர்கள். அவர்களின் முகங்கள் கேடயம் போல் அகன்றதாகவும் (வட்டமாகவும்) கண்கள் சிறியதாகவும் முடிகள் செம்பட்டையாகவும் அமைந்திருப்பார்கள்.*

***அறிவிப்பவர் : காலித் பின் அப்துல்லாஹ் (ரலி)***
***நூல்: அஹ்மத் (21299)***

*யஃஜூஜ் மஃஜூஜினரின் உருவ அமைப்பு சம்பந்தமாக இந்த ஒரு செய்தி மட்டுமே அறிவிக்கப்பட்டுள்ளது. இது தவிர அவர்களின் தோற்றம் சம்பந்தமாக ஏராளமான இட்டுக்கட்டப்பட்ட செய்திகளும் மிக பலகீனமான செய்திகளும் வந்துள்ளன. அவைகள் அனைத்தும் யூகங்களாலும் கற்பனைகளாலும் உருவாக் கப்பட்டவைகளாகும். கூடுதல் விளக்கத்திற்காக மற்றும் விழிப் புணர்விற்காக அந்த ஆதாரமற்ற செய்திகளையும் நாம் இங்கு பார்ப்போம்.*

*முதலாவதாக யஃஜூஜ் மஃஜூஜின் உயரம் பற்றி வந்திருக்கும் செய்தி நம் உடலை புல்லரிக்கச் செய்கின்றது.*

*யஃஜூஜ் மஃஜூஜினரில் ஒரு வகையினர் உயர்ந்த பேரித்த மரத்தின் அளவு மிக உயரமானவர்களும் இருக்கிறார்கள். அந்த மரம் 200 அடி உயரமுடையதாகும். இன்னொரு வகையினர் உச் சக்கட்ட குள்ளர்களும் இருக்கிறார்கள். மூன்றாம் வகையினரின் அமைப்பு தன் ஒரு காதை விரிப்பாக விரித்துக் கொண்டு இன்னொரு காதை போர்வையாக போர்த்திக் கொள்பவர்களும் இருக்கிறார்கள்.*

***நூல்: தப்ரானீ (40000)***

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள், இந்த அறிவிப்பை ஆதாரமற்ற செய்தி என்றும் கற்பனைகளைால் உருவாக்கப்பட்டது என்றும் தன் அல்பிதாயா வந்நிஹாயா என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்கள். இந்த செய்தியைப் படிக்கும்போதே இது எந்தளவு கற்பனைகளால் புனையப்பட்டுள்ளது என்பதை நாம் எளிதில் விளங்கிக் கொள்ளலாம். மிகவும் விநோதமான மற்றும் விசித்திரமான ஒரு தோற்றத்தை யஃஜூஜ் மஃஜூஜிற்கு உருவாக்கியுள்ளார்கள். இப்படி ஒரு அமைப்பு யஃஜூஜ் மஃஜூ ஜினரிடம் இருந்திருக்குமேயானால் கண்டிப்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நமக்கு அறிவித்திருப்பார்கள்.

அதேபோன்று யஃஜூஜ் மஃஜூஜினரின் உயரம் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாக ஹாகிமில் ஒரு அறிவிப்பு வருகின்றது.

*யஃஜூஜ் மஃஜூஜினரின் உயரம் ஒரு ஜான் அல்லது இரண்டு ஜான் அதிகபட்சமாக மூன்று ஜான் வரைதான் இருக்கும். இவர்கள் ஆதம் நபியின் சந்ததிகளாவார்கள்.*

**நூல்: ஹாகிம் (8752)**

இந்த அறிவிப்பும் மிக மிக பலகீனமான ஒரு செய்தியாகும். நாம் இந்த தலைப்பின் ஆரம்பத்திலேயே ஒரு விஷயத்தை கூறி யிருந்தோம். அதாவது, யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரும் ஆதம் (அலை) அவர்களின் சந்ததிகள் தான், அவர்களும் மனிதப் படைப்புதான் என்பதாக. இந்த உண்மையை விளங்கியிருந் தாலே இவர்களுக்கு இப்படிப்பட்ட வினோதமான உடல் அமைப்பை சித்தரிக்க வேண்டிய அவசியம் இருந்திருக்காது. சாதாரணமாக மனித இனம் எப்படி இருக்குமோ அப்படித்தான் அவர்களும் இருப்பார்கள். வித்தியாசம் என்று பார்த்தால் அவர்கள் மனிதர்களிடம் காணப்படாத பழக்கவழக்கங்களையும், முரட்டுத் தனத்தையும், கொடூரத்தன்மையையும் கொண்டிருப்பார்கள்.

அடுத்தது, இவர்கள் சம்பந்தமாக வந்திருக்கும் இன்னொரு கற்பனையான செய்தி.

இவர்கள் ஒரு யானையையோ ஒரு ஒட்டகத்தையோ அல்லது ஒரு பன்றியையோ கடந்து சென்றால் அதை கண்டிப்பாக சாப்பிடாமல் விடமாட்டார்கள். அதேபோன்று இவர்கள் தங்களில் இறந்து போனவர்களையும் சாப்பிடக்கூடியவர்கள் என்று தப்ரானியில் இந்த செய்தி வந்துள்ளது.

அவர்கள் பூமியில் குழப்பம் செய்வார்கள் என்று குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. ஆனால் அவர்கள் எந்த மாதிரியான குழப்பம் செய்வார்கள் என்பதை அல்லாஹ்வே நன்கறிந்தவன். எனவே இந்த செய்தியும் ஆதாரமற்ற செய்தியாகும்.

## யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் எண்ணிக்கை:

மனித இனத்திலேயே அதிக எண்ணிக்கை இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர்தான். எந்தளவுக்கென்றால் மொத்த மனித மற்றும் ஜின் இனத்தினர் நூறு சதவிகிதம் என்றால் அதில் 90 சதவிகிதம் இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரே. அந்தளவுக்கு எண்ணிலடங்காதவர்களாக இவர்கள் இருக்கிறார்கள்.

அல்லாஹுதஆலா இவர்களின் எண்ணிக்கையை கடலின் அலை மற்றும் வெள்ளத்தோடு ஒப்பிடுகிறான்.

அந்நாளில் அவர்களில் சிலர் சிலருடன் (கடல்) அலைகளைப் போல் மோதும்படி நாம் விட்டுவிடுவோம்.

**அல்குர்ஆன் (18:99)**

யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினருக்கு வழி திறக்கப்பட்டால் அவர்கள் ஒவ்வொரு மேட்டிலிருந்தும் (தண்ணீர் பாய்ந்து ஓடு வதைப் போன்று) வழிந்து (உலகின் பல பாகங்களிலும் அதிசீக்கி ரத்தில் பரவி) விடுவார்கள்.

**அல்குர்ஆன் (21:96)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், யஃஜூஜ் மஃஜூஜின் எண்ணிக்கைப் பற்றி நமக்கு அறிவித்துள்ளார்கள். அந்த அறிவிப்பை நாம் இந்த தொடரின் ஆரம்பத்திலேயே குறிப்பிட்டி ருந்தோம்.

*அதாவது அல்லாஹு தஆலா மறுமையில் நரகவாசிகளை தனி யாக பிரித்தெடுக்குமாறு ஆதம் (அலை) அவர்களுக்கு கட்டளை யிடுவான் அதற்கு ஆதம் (அலை) அவர்கள் எத்தனை நரகவாசி களை? என்று கேட்பார்கள். அதற்கு ஒவ்வொரு ஆயிரம் பேரிலிருந்தும் 999 பேரை (வெளியே கொண்டு வாருங்கள்) என்று பதிலளிக்கப்படும். (இவ்வாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்ட) நபித்தோழர்கள் அல்லாஹ்வின் தூதரே. எங்களில் யார்தான் அந்த ஒருவர் என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் சந்தோஷமாயிருங்கள். உங்களில் ஒருவரும் யஃஜூஜ் மஃஜூஜில் ஆயிரம் பேரும் என்றார்கள்.*

***அறிவிப்பவர்: அபூ சயீத் அல்குத்ரீ (ரலி) நூல்: புகாரீ (4741)***

*ஆதம் (அலை) அவர்களின் சந்ததியில் 1000 பேரில் ஒரே ஒரு ஆள் மட்டும் மனிதன் மீதி 999 பேர் யஃஜூஜ் மஃஜூஜ் என்றால் எந்தளவுக்கு அவர்களின் எண்ணிக்கை கணக்கில்லாமல் இருக் கும் என்பதை நாம் சிந்திக்க வேண்டும். இப்படியே ஒவ்வொரு ஆயிரம் என்று கணக்கு வைத்தால் இன்னும் எந்தளவிற்கு அவர்களின் எண்ணிக்கை இருக்கும் என்பதை நம்மால் கணக்கிட முடியாது.*

*இந்த ஹதீஸ் யஃஜூஜ் மஃஜூஜினரின் எண்ணிக்கை சம்பந்தமாக வந்திருக்கும் ஆதாரப்பூர்வமான ஒரு நபிமொழியாகும். ஆனால் இந்த விஷயத்திலும் பல பலவீனமான செய்திகள் இடம்பெற் றுள்ளன.*

## எப்போது வருவார்கள்?

*எண்ணிலடங்கா எண்ணிக்கையைக் கொண்ட இந்த யஃஜூஜ் மஃஜூஜினரின் வருகை மறுமை நாளின் சமீபத்தில் தான் ஏற்படும். அவர்களின் வருகை எப்படி நிகழும் என்பது குறித்து திர்மிதியில் ஒரு அறிவிப்பு வருகிறது.*

*இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் ஒவ்வொரு நாளும் தடுப்புச்*

*சுவரைத் தோண்டுவார்கள். சூரியனின் ஒளிக்கீற்றை காணும் அளவிற்கு வந்ததும் அவர்களின் தலைவர் திரும்பிச் செல்லுங் கள். (மீதியை) நாளைக்கு தோண்டலாம் என்பார். மறுநாள் திரும்பி வரும்போது (தோண்டிய இடம் அடைபட்டு) முன்பிருந் ததைவிட அதிக கடினமாக இருக்கும். இவ்வாறே தொடர்ந்து நடைபெறும். பிறகு அவர்களுக்குரிய காலகட்டம் வந்து அல்லாஹ் அவர்களை மக்களிடம் அனுப்ப வேண்டுமென நாடும்போது அவர்கள் (வழமை போல்) சூரியனின் ஒளிக்கீற்றை காணும் அளவிற்கு தோண்டியதும் அவர்களின் தலைவர் திரும்பிச் செல்லுங்கள் இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) நாளை (மீதியை) தோண்டலாம் என்பார். இப்போது அல்லாஹ்வின் நாட்டத்தை இணைத்துக் கூறிவிடுவார். எனவே அவர்கள் மறுநாள் அங்கு திரும்பி வரும்போது எந்தநிலையில் அதை விட்டுப்போனார்களோ அதே நிலையில் இருக்கும். அப்போது மீதியை தோண்டி அங்கிருந்து வெளியேறி மக்களிடம் வருவார்கள்.*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல்: திர்மிதி (3078)***

*இந்த ஹதீஸை இமாம் அல்பானீ (ரஹ்) அவர்கள் ஸஹீஹான (ஆதாரப்பூர்வமான) ஹதீஸ்களின் பட்டியலில் சேர்த்துள்ளார்கள்.*

*அடுத்ததாக இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் வருகை எப்போது நிகழும்? என்று பார்க்கும் போது ஈசா (அலை) அவர் கள் தஜ்ஜாலைக் கொன்றதற்குப் பிறகு அவர்களின் வருகை ஆரம்பமாகும். இது குறித்து முஸ்லிமில் வந்துள்ள அறிவிப்பாவது,*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*இதற்கிடையே ஈசா (அலை) அவர்களுக்கு அல்லாஹ் ''நான் என் அடியார்கள் சிலரை வெளிவரச் செய்துள்ளேன். அவர்களுடன் போரிட யாருக்கும் ஆற்றல் கிடையாது. எனவே (முஸ்லிமான) என் அடியார்களை (சினாயிலுள்ள) 'தூர்' மலைக்கு அழைத்துச் சென்று பாதுகாப்பாக வையுங்கள்'' என்று (வஹீ) அறிவிப்பான்.*

*பின்னர், அல்லாஹ் யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரை அனுப்பு வான். அவர்கள் ஒவ்வோர் உயரமான பகுதியிலிருந்தும்*

வேகமாக(க் கீழே இறங்கி) வருவார்கள். அவர்களில் முதல் அணியினர் (ஜோர்தானில் உள்ள) ‘தபரிய்யா’ ஏரியைக் கடந்து செல்லும்போது, அதிலுள்ள மொத்த நீரையும் குடித்து விடுவார் கள். அவர்களின் இறுதி அணியினர் அதை கடந்து செல்லும்போது ‘‘முன்னொரு காலத்தில் இந்த ஏரியில் தண்ணீர் இருந்திருக்கும்’’ என்று பேசிக் கொள்வார்கள்.

**நூல்: முஸ்லிம் (5629)**

## யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் குழப்பங்களும் அவர்களின் அழிவும்:

தஜ்ஜாலின் மூலம் இந்த சமுதாயத்திற்கு எந்தளவு குழப்பங்களும் சோதனைகளும் ஏற்படுமோ அதே அளவு இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரின் மூலமும் இந்த உம்மத்திற்கு பெரிய சோதனை ஏற்படும். காரணம் அவர்களின் இயல்பே குழப்பம் விளைவிப்பது தான். குர்ஆனிலும் அவர்கள் பூமியில் குழப்பம் செய்யக்கூடியவர்கள் என்று தான் கூறப்பட்டுள்ளது. இத்தனைக்கும் தஜ்ஜால் என்ற ஒரு பொய்யனின் சோதனையே கடுமையாக இருக்கும் என்றால் எண்ணிலடங்கா இந்த கூட்டத் தினரின் ஃபித்னாக்கள் (குழப்பங்கள்) எப்படி இருக்கும் என்பதை நீங்களே யூகித்துக் கொள்ளலாம்.

அதேபோன்று இந்த கூட்டத்தினர் எந்தளவு வலிமையானவர்கள் என்றால் தஜ்ஜால் என்ற ஒரு கொடியவனை அழிக்கும் ஆற்றலை அல்லாஹ் ஈசா (அலை) அவர்களுக்கு மட்டும் கொடுத்திருக் கிறான். ஆனால் இந்த கூட்டத்தாரை அழிக்கும் ஆற்றலை அல்லாஹ் யாருக்கும் கொடுக்கவில்லை. எண்ணிக்கையாலும், வலிமையாலும் மேலோங்கி இருக்கும் இவர்கள் எந்தளவுக்கு குழப்பம் செய்வார்கள் என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

எனவே தான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் யஃஜூஜ் மஃஜூஜின் தீங்கை குறித்தும் நமக்கு எச்சரிக்கை செய்துள்ளார்கள்.

ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் கூறியதாவது: (ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் தூக்கத்திலிருந்து முகம் சிவந்த நிலையில்

எழுந்து மற்றொர் அறிவிப்பில் என்னிடம் நடுக்கத்துடன் வந்து அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. நெருங்கி விட்ட ஒரு தீமையின் காரணத்தால் அரபியருக்குக் கேடு நேர விருக்கின்றது. இன்று யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடைச்சுவர் இந்தளவிற்கு திறக்கப்பட்டுவிட்டது என்று தம் கட்டை விரலையும் அதற்கடுத்துள்ள விரலையும் இணைத்து வளையமிட்டுக் காட்டியபடி கூறினார்கள்.

மற்றொர் அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள், யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடைச்சுவரிலிருந்து அல்லாஹ் இதைப்போல் (சிறிது) திறந்துவிட்டான் என்று கூறி தமது கையால் (அரபி எண் வடிவில்) 90 என்று மடித்துக் காட்டினார்கள்.

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (3346, 3347)***

அடுத்ததாக அவர்கள் அந்த தடுப்புச் சுவரிலிருந்து வெளியே வந்த பிறகு என்னென்ன நடக்கும் என்பதை பின்வரும் நபிமொழிகள் நமக்கு விளக்குகின்றன.

பின்னர் அல்லாஹ் யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரை அனுப்பு வான். அவர்கள் ஒவ்வொரு உயரமான பகுதியிலிருந்தும் வேகமாக(க் கீழே இறங்கி) வருவார்கள். அவர்களில் முதல் அணியினர் (ஜோர்தானில் உள்ள) 'தபரிய்யா' ஏரியைக் கடந்து செல்லும்போது, அதிலுள்ள மொத்த நீரையும் குடித்துவிடுவார் கள். அவர்களின் இறுதி அணியினர் அதைக் கடந்து செல்லும் போது ''முன்னொரு காலத்தில் இந்த ஏரியில் தண்ணீர் இருந் திருக்கும்'' என்று பேசிக்கொள்வார்கள்.

ஸஹீஹ் முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் முன்பொரு காலத்தில் இங்கு நீர் இருந்திருக்கிறது என்பதற்குப் பிறகு ''பின்னர் அவர்கள் பைத்துல் மக்திஸிலுள்ள மலையான 'ஜபலுல் கமர்' வரை பயணம் மேற்கொள்வார்கள். அப்போது அவர்கள் ''பூமியிலுள்ளவர்கள் அனைவரையும் நாம் கொன்றுவிட்டோம். வாருங்கள் வானத்திலுள்ளோரை நாம் கொல்வோம். என்று கூறிய படி தங்களுடைய அம்புகளை வானை நோக்கி எய்வார்கள்.

அப்போது அல்லாஹ் அவர்களுடைய அம்புகளை இரத்தம் தோய்த்து திருப்பியனுப்புவான் என்று கூடுதலாக இடம்பெற் றுள்ளது.

பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (தூர் மலையில்) முற்றுகையிடப்படுவார்கள். அப்போது (ஏற்படும் பட்டினியால்) அவர்களில் ஒருவருக்குக் காளை மாட்டின் தலை கிடைப்பது, இன்று உங்களில் ஒருவருக்கு நூறு பொற்காசுகள் கிடைப்பதை விடச் சிறந்ததாக இருக்கும். பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப்போரும் (அல்லாஹ்விடம் உதவி கேட்டுப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் பிடரிகளில் புழுக்களை அல்லாஹ் அனுப்புவான். அதனால் அவர்கள் அனைவரும் ஒரே நேரத்தில் பலியாவார்கள். பின்னர் இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர்களுடன் இருப் போரும் (மலையிலிருந்து) தரைக்கு இறங்கி வருவார்கள்.

அப்போது பூமியின் எந்தவொரு சாண் அளவு இடமும், யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் (சடலங்களிலிருந்து வெளிவரும்) கொழுப்பாலும் துர்நாற்றத்தாலும் நிரம்பியிருப்பதையே காண் பார்கள். உடனே இறைத்தூதர் ஈசா (அலை) அவர்களும் அவர் களுடன் இருப்போரும் அல்லாஹ்விடம் (அவற்றை அகற்றக் கோரிப்) பணிந்து வேண்டுவார்கள். அப்போது அல்லாஹ் ஒட்ட கங்களின் கழுத்துகளைப் போன்று (பெரியதாக உள்ள) பறவை களை அனுப்புவான். அவை அந்தப் பிணங்களை தூக்கிச் சென்று அல்லாஹ் நாடிய இடத்தில் வீசியெறியும்.

பின்னர் அல்லாஹ் மழை பொழியச் செய்வான். அந்த மழை எந்த மண் வீட்டிலும் எந்த முடி வீட்டிலும் படாமல் இருக்காது. இறுதியில் பூமியைக் கழுவி கண்ணாடி போன்று (சுத்தமாக) ஆக்கிவிடும். பின்னர் பூமிக்கு ''நீ உன் கனிவர்க்கங்களை முளைக் கச் செய்வாயாக. உன்னிடமுள்ள வளங்களை மறுபடியும் தருவாயாக'' என்று உத்தரவு பிறப்பிக்கப்படும். அன்றைய நாளில்

(எந்த அளவுக்கு வளம் கொழிக்குமெனில்) ஒரு குழுவினர் சேர்ந்து ஒரேயொரு மாதுளம் பழத்தை உண்பர். அதன் தொழி அவர்கள் அனைவருக்கும் நிழல் அளிக்கும். அவர்களுக்குப் பால் வளமும் கிட்டும். எந்த அளவுக்கென்றால், பால் தரும் ஓர் ஒட்டகம் ஒரு பெரும் கூட்டத்துக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் பசுவொன்று ஒரு குலத்தாருக்கே போதுமானதாயிருக்கும். பால் தரும் ஆடொன்று உறவினர்கள் அடங்கிய ஒரு கூட்டத்திற்கே போதுமானதாயிருக்கும்.

இந்நிலையில் அல்லாஹ் தூய காற்று ஒன்றை அனுப்புவான். அது அவர்களின் அக்குள்களுக்குக் கீழே நுழைந்து அவர்களைப் பிடித்துக் கொள்ளும். இறைநம்பிக்கை கொண்ட ஒவ்வொரு முஸ்லிமின் உயிரையும் அது கைப்பற்றும். அதையடுத்து மக்களில் தீயவர்கள் (மட்டுமே பூமியில்) எஞ்சியிருப்பார்கள். அவர்கள் கழுதைகளைப் போன்று (வெட்ட வெளியில் வைத்துப் பகிரங்கமாக) உடலுறவு கொள்வார்கள். அவர்கள் மீது தான் உலக முடிவு நாள் ஏற்படும்.

**நூல் : முஸ்லிம் (5629, 5630)**

## யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினருக்கு இஸ்லாமிய அழைப்பு சென்றதா?

இதற்குண்டான பதிலை படிப்பதற்கு முன், நாம் முதலில் அல்லாஹ்வின் ஓர் நியதியை விளங்கிக் கொள்ள வேண்டும். அல்லாஹுதஆலா தன் படைப்பில் யாரையும் அவர்களிடம் தன்னைப் பற்றிய அறிமுகம் சென்றடையாமலிருந்தால் அவர் களை தண்டிக்க மாட்டான். காரணம் அவர்களிடம் சத்திய இஸ்லாம், ஏகத்துவம், தூதுத்துவம் போன்ற எந்த ஒரு தகவலும் சென்றடையவில்லை. எனவே அவர்களை தண்டிப்பதில் எந்த நியாயமுமில்லை. ஆனால் அவர்களிடம் சத்திய இஸ்லாத்தின் அழைப்பு சென்றிருந்து அதை அவர்கள் ஏற்க மறுத்தால் அப்போது அவர்களை தண்டிப்பதில் நியாயம் இருக்கிறது.

அல்லாஹுதஆலா கூறுகிறான்:

*நமது தூதர் ஒருவரை அனுப்பாத வரை நாம் (எவரையும்) வேதனை செய்வதில்லை.*

***அல்குர்ஆன் (17:15)***

*அல்லாஹ்வின் மீது (குற்றம் கூற) மனிதர்களுக்கு ஓர் ஆதாரமும் இல்லாதிருக்க இத்தூதர்களுக்குப் பின்னரும் பல தூதர்களை நற்செய்தி கூறுகிறவர்களாகவும் அச்சமூட்டி எச்சரிக்கிறவர்களாக வும் (நாம் அனுப்பி வைத்தோம்.) அல்லாஹ் (அனைவரையும்) மிகைத்தவனாக ஞானமுடையவனாக இருக்கிறான்.*

***அல்குர்ஆன் (4:165)***

*இப்படி அல்லாஹ் தன் நியதியை வைத்திருக்கும்போது இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரை காஃபிர் என்றும், அவர்கள் அனைவரும் நரகத்திற்குரியவர்கள் என்றும் கூறுவது எப்படி சரியானதாக இருக்க முடியும். என்ற சந்தேகம் நமக்கு எழலாம்.*

*இந்த சந்தேகம் நியாயமானது தான். இந்த கேள்வியை யார் விஷயத்தில் கேட்கலாம் என்றால், யாருக்கு சத்தியப்பிரச்சாரம் சென்றடையவில்லையோ அவர்கள் விஷயத்தில் கேட்கலாம். ஆனால் இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினருக்கு ஏதோ ஒரு வகையில் இஸ்லாமிய அழைப்பு சென்றுள்ளது என்பதற்கு பல முகாந்திரங்கள் உள்ளன.*

*அது ஒன்று இறைத்தூதரின் மூலமாக சென்றிருக்கலாம்.*

*அல்லது இறைத்தூதர்கள் அல்லாமல் மற்ற அழைப்பாளர்கள் வழியில் சென்றிருக்கலாம்.*

*அல்லது நமக்கு முன் வாழ்ந்த இஸ்லாமிய சமூகங்களின் மூலம் சென்றிருக்கலாம்.*

*அல்லது யஃஜூஜ் மஃஜூஜினரால் பாதிக்கப்பட்டு, துர்கர்னைன் என்ற மன்னரிடம் தடுப்புச் சுவர் கட்ட கோரிக்கை வைத்த அந்த நல்ல மக்களின் மூலமாகவும் சென்றிருக்கலாம்.*

இப்படி பல இடம்பாடுகள் உள்ளன. இன்னும் இந்த கருத்திற்கு வலுவாக பின்வரும் கேள்வியின் பதிலையும் மேலதிகமாக கூறலாம்.

அதாவது இந்த யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரை காஃபிர் என்றும் நரகவாசிகள் என்றும் எந்த அடிப்படையில் கூற முடியும்? அவர்கள் நரகவாசிகள் என்பதை அல்லாஹ்வின் தூதரே மிகத் தெளிவாக கூறியுள்ளார்கள்.

உங்களில் ஒருவர் என்றால் யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் ஆயிரம் என்ற கணக்கில் நரகவாசிகளின் எண்ணிக்கை இருக்கும்.

**நூல் : புகாரீ (3348)**

அதேபோன்று அவர்களிடம் குஃப்ரின் (இறைநிராகரிப்பின்) தன்மைகளும் அதிகமாகவே இருக்கின்றது.

முதலாவதாக குர்ஆனில் இவர்களைப் பற்றி, இவர்கள் பூமியில் குழப்பம் செய்யக்கூடியவர்கள் என்று வந்துள்ளது.

இரண்டாவதாக, அவர்கள் தடுப்புச்சுவரிலிருந்து வெளிவந்த பிறகு, பூமியிலுள்ளோரை நாம் கொன்று விட்டோம். வாருங்கள் வானிலுள்ளோரை நாம் கொல்வோம் என்று கூறி தம் அம்புகளை வானை நோக்கி எறிவார்கள். அப்போது அல்லாஹ் அவர்களுடைய அம்புகளை இரத்தம் தோய்த்து திருப்பியனுப்புவான். இதைப்பார்த்தஅவர்கள்பூமியிலுள்ளவர்களைஅடக்கிவிட்டோம். வானத்திலுள்ளவர்களை மிகைத்துவிட்டோம் என்று கூறுவார்கள்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல்: திர்மிதி (3078)**

இந்த அறிவிப்பில் ''வாருங்கள் வானத்திலுள்ளோரை நாம் கொல்வோம்'' என்று கூறியதிலிருந்து வானில் இருக்கும் இறைவனையும், மலக்குமார்களையும் அவர்கள் அறிந்திருக்கிறார்கள் என்பதை நாம் விளங்கிக் கொள்ள முடிகிறது. அதேபோன்று அவர்களிடம் அடக்குமுறை, முரண்டுபிடித்தல், தாங்கள் தான்

எல்லாம் என்ற குஃப்ரின் தன்மைகளும் வெளிப்படுவதை இந்த ஹதீஸிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளலாம்.

மூன்றாவதாக இந்த கூட்டத்தினர் ஈசா (அலை) அவர்களையும் அவர்களுடன் இருக்கும் முஸ்லிம்களையும் தூர் மலையில் முற்றுகையிடுவதன் மூலம் அவர்களின் ஆதிக்க தன்மையையும் நாம் விளங்கி கொள்ள முடிகிறது.

இப்படி பல காரணிகளை வைத்துப் பார்க்கும் போது அவர்கள் பூமியில் வாழும் போதும் காஃபிர்களாகவே இருந்தார்கள். இனி மறுமையின் நெருக்கத்திலும் காஃபிர்களாக செயல்படுவார்கள். எனவே அவர்கள் நரகத்திற்குறியவர்களாக ஆகிவிடுகிறார்கள்.

## நபியின் எச்சரிக்கை அரபுகளுக்கு மட்டுமா?

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணமாக அரபுகளுக்குக் கேடுதான். இன்று யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச்சுவர் இந்த அளவுக்கு திறக்கப்பட்டுவிட்டது. என்று தம் கட்டை விரலையும் அதற்கடுத்துள்ள விரலையும் இணைத்து வளையமிட்டுக் காட்டியபடி கூறினார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ (3346)**

இந்த அறிவிப்பில் நபி (ஸல்) அவர்கள் யஃஜூஜ் மஃஜூஜினரின் குழப்பங்கள் அரபுகளுக்குத் தான் ஏற்படும் என்று அரபுகளை குறிப்பிட்டுக் கூறியுள்ளார்கள். அப்படியென்றால் அரபுகளுக்கு மட்டும் தான் இந்த எச்சரிக்கையா? என்ற சந்தேகம் எழலாம். ஆனால் உண்மை என்னவென்றால் யஃஜூஜ் மஃஜூஜின் குழப்பங்கள் முழு உலகிலும் ஏற்படும் என்பது தான். அதில் அன்று வாழும் அனைத்து மக்களும் அடங்குவார்கள்.

குர்ஆனிலும் அவர்களைப் பற்றி ‘‘இவர்கள் பூமியில் குழப்பம் செய்பவர்கள்’’ என்று தான் வந்துள்ளது. எனவே பூமியில் என்று

*வருவதிலிருந்து இது அனைத்து மக்களையும் குறிக்கிறது என்பதை விளங்கிக் கொள்ளலாம். அதேபோன்று யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் ''நாம் பூமியிலுள்ளோரை மிகைத்துவிட்டோம்'' என்று கூறுவதிலிருந்தும் இது முழு உலகைத்தான் குறிக்கிறது என்பதையும் நாம் விளங்கிக் கொள்ளலாம்.*

*சரி பிறகு ஏன் நபி (ஸல்) அவர்கள் அரபுகளை மட்டும் குறிப்பிட்டு சொல்ல காரணம் என்ன? என்பதற்கு அறிஞர்களின் பதில்,*

*அரபு மக்கள்தான் முதன் முதலில் இஸ்லாத்தில் நுழைந்தவர்கள். அவர்கள் தான் இந்த இஸ்லாத்தை முழு உலகிற்கும் கொண்டு சென்றவர்கள். எனவே முதலில் அவர்களை எச்சரிக்கை செய்ய நபி (ஸல்) அவர்கள் அரபுகளை குறிப்பிட்டிருக்கலாம்.*

*இரண்டாவது கருத்து. முழு உலக முஸ்லிம்களுக்கும் இந்த யஃஜூஜ் மஃஜூஜின் குழப்பங்கள் ஏற்படும் என்றாலும் அரபு கள்தான் அன்று எண்ணிக்கையில் மிகுதியாக இருப்பார்கள். அரபுகளோடு ஒப்பிடும் போது மற்ற முஸ்லிம்கள் குறைவாகத் தான் இருப்பார்கள். எனவே இந்த அடிப்படையில் கூட நபி (ஸல்) அவர்கள் அரபுகளை குறிப்பிட்டு சொல்லியிருக்கலாம்.*

## யஃஜூஜ் மஃஜூஜின் அழிவிற்குப் பிறகு:

*யஃஜூஜ் மஃஜூஜின் அழிவிற்குப் பிறகு முஸ்லிம்கள் சிறிது காலம் சந்தோஷமாகவும் நிம்மதியாகவும் வாழ்வார்கள். இனி முஸ்லிம்கள் யாருடனும் போர் செய்ய வேண்டிய அவசியம் இருக்காது.*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினர் வரும் வரை நீங்கள் போராடிக் கொண்டே இருப்பீர்கள்.*

***அறிவிப்பவர் : காலித் பின் அப்துல்லாஹ்(ரலி)***

***நூல் : அஹ்மத் (21299)***

அதேபோன்று முஸ்லிம்களின் வணக்கமான ஹஜ்ஜும் உம்ரா வும் யஃஜூஜ் மஃஜூஜின் அழிவிற்குப் பிறகும் நிலைத்திருக்கும் என்பதையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் நமக்கு முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.

யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தார் வந்த பிறகும் இந்த (கஅபா) ஆலயத்தில் நிச்சயமாக ஹஜ்ஜும் செய்யப்படும். உம்ராவும் செய்யப்படும்.

***அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி) நூல் : புகாரீ (1593)***

அதேபோன்று யஃஜூஜ் மஃஜூஜிற்குப் பிறகு அவர்கள் பயன்படுத்திய அம்புகள், வில் மற்றும் அம்பாராத் துளிகள் போன்றவற்றை முஸ்லிம்கள் ஏழு ஆண்டுகளுக்கு விறகாகப் பயன்படுத்துவார்கள் என்ற ஒரு முன்னறிவிப்பையும் நபி (ஸல்) அவர்கள் நமக்குச் செய்துள்ளார்கள்.

***அறிவிப்பவர் : நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)***
***நூல் : இப்னு மாஜா (4066)***

## 4,5,6. மூன்று பூகம்பங்கள்

கியாமத் நாளின் மாபெரும் பத்து பெரிய அடையாளங்களில் பின்வரும் மூன்று பூகம்பங்களும் ஒன்றாகும். இந்த மூன்று பூகம்பங்களையும் நபி (ஸல்) அவர்கள் தனித்தனி அடையாளங் களாகக் கூறியுள்ளார்கள்.

(மதீனாவின்) கிழக்கே ஒரு பூகம்பம், மேற்கே ஒரு பூகம்பம், அரபு தீபகற்பத்தில் ஒரு பூகம்பம் ஆகிய மூன்று பூகம்பங்களை நீங்கள் காணாத வரை யுக முடிவு நாள் ஏற்படாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

***அறிவிப்பவர் : ஹுதைஃபா (ரலி) நூல்: முஸ்லிம் (5558)***

மேலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

எனக்குப் பிறகு (இறுதி காலத்தில்) கிழக்கில் ஒரு பூகம்பம், மேற்கில் ஒரு பூகம்பம், அரபு தீபகற்பத்தில் ஒரு பூகம்பம்

ஏற்படும். அப்போது உம்மு ஸலமா (ரலி) அவர்கள் நல்லோர்கள் இருக்கும் நிலையில் பூமியில் பூகம்பம் ஏற்படுமா என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்க, ஆம் பூமியில் அதிகமானோர் தீயவர்களாக இருந்தால் ஏற்படும் என்று பதிலளித்தார்கள்.

***அறிவிப்பவர் : உம்மு ஸலமா (ரலி) நூல் : தப்ரானீ (3789)***

இந்த அறிவிப்பில் பூகம்பம் ஏற்படுவதற்குண்டான ஒரு காரணமும் சொல்லப்பட்டுள்ளது. அதாவது உலகில் பாவங்களும், அநியாயங்களும் மிகைக்கும் போது பூகம்பங்கள் உண்டாகும். இன்றைக்கும் உலகின் பல பகுதிகளில் பூகம்பங்கள் ஏற்படுகின்றன. ஆனால் அவை ஒரு குறிப்பிட்ட இடத்தில் சிறிய அளவில் தான் ஏற்படுகின்றன. கியாமத்தின் நெருக்கத்தில் தோன்றும் இந்த மூன்று பூகம்பங்களும் மிகப் பெரிய அளவில் ஏற்படும். இதனால் மனிதர்கள் உயிருடன் புதையுண்டு போவார்கள்.

## 7. புகை மூட்டம்:

மாபெரும் பத்து பெரிய அடையாளங்களில் புகை மூட்டம் என்ற நிகழ்வும் ஒன்றாகும். இதுபற்றி அல்லாஹ்வும் தன் திருமறையில் எச்சரிக்கை செய்துள்ளான்.

வானம் தெளிவானதொரு புகையை கொண்டு வரும் நாளை நீர் எதிர்பார்ப்பீராக! மனிதர்கள் அனைவரையும் அது சூழ்ந்து கொள்ளும். அது ஒரு துன்புறுத்தும் வேதனையாகும். (அந்நாளில் மனிதர்கள் இறைவனை நோக்கி) ''எங்கள் இறைவனே! எங்களை விட்டும் இவ்வேதனையை நீக்கிவிடு. நிச்சயமாக நாங்கள் (உன்னை) நம்பிக்கை கொள்கிறோம்'' (என்று கூறுவார்கள்) (அந்நேரத்தில் அவர்களின்) நல்லுணர்ச்சி எவ்வாறு அவர்களுக்குப் பயனளிக்கும்? நிச்சயமாக (நமது) தெளிவான தூதர் (இதற்கு முன்னர்) அவர்களிடம் வந்தே இருக்கிறார். எனினும் அவர்கள் அவரைப் புறக்கணித்து (அவரைப்பற்றி ''இவர்) பிறரால் கற்றுக் கொடுக்கப்பட்ட ஒரு பைத்தியக்காரர்தான் என்று கூறினர்.

***அல்குர்ஆன்: (44:10-14)***

இந்த புகை மூட்டம் என்ற நிகழ்வு ஏற்கனவே நடந்துவிட்டதா?

அல்லது இனிமேல் தான் நடக்குமா? என்னும் விஷயத்தில் நபித்தோழர்களிடையே கருத்து வேறுபாடுகள் இருந்தன.

இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் மற்றும் சிலர் இந்த புகை மூட்டம் நடந்துவிட்டது என்று கூறுகிறார்கள்.

மஸ்ரூக் பின் அல்அஜ்தஉ (ரஹ்) அவர்கள் கூறியதாவது,

‘கிந்தா’ என்னும் இடத்தில் ஒருவர் பேசிக்கொண்டிருக்கும் போது ‘‘மறுமை நாளில் புகை ஒன்று வந்து நயவஞ்ச கர்களின் செவிப்புலன்களையும், பார்வைப் புலன்களையும் பிடித்துக்கொள்ளும். இறைநம்பிக்கையாளருக்கு ஜலதோஷம் ஏற்படுவது போன்றிருக்கும்’’ என்று சொன்னார். (இதைக் கேட்ட) நாங்கள் பீதியடைந்தோம். உடனே நான் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள் சாய்ந்தபடி அமர்ந்திருந்தார்கள். (இதைக்கேட்டதும்) அவர்கள் கோபமுற்று (எழுந்து நேராக) அமர்ந்துகொண்டு (பின்வருமாறு) கூறினார்கள்.

அறிந்தவர் சொல்லட்டும்! அறியாதவர் அல்லாஹ்வே நன்கறிந் தவன் என்று சொல்லட்டும். ஏனெனில் ஒருவர் தாம் அறியா ததை எனக்குத் தெரியாது என்று சொல்வதும் அறிவோடு தொடர்புடையதாகும். ஏனெனில், அல்லாஹ் தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு ‘‘சொல்வீராக நான் இதற்காக உங்களிடம் கூலி எதுவும் கேட்கவில்லை. நான் (இல்லாததைச் சொல்லி) பாவனை செய்வோரில் ஒருவனல்லன்’’ (38:86) என்று கூறியுள்ளான்.

மேலும் குறைஷியர் இஸ்லாத்தை ஏற்பதில் காலம் தாழ்த்தினர். ஆகவே நபி (ஸல்) அவர்கள் குறைஷியருக்கெதிராகப் பிரார்த் தித்தார்கள். அப்போது அவர்கள் ‘‘இறைவா! யூசுஃப் (அலை) அவர்களின் (காலத்து) ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைக் கொடுத்து எனக்கு உதவி செய்!’’ என்று வேண்டினார்கள். அவ்வாறே அவர்களைப் பஞ்சம் வாட்டியது. இறுதியில் அதில் அவர்கள் (பலரும்) அழிந்துபோனார்கள். மேலும் பலர் செத்த வற்றையும் எலும்புகளையும் உண்ண வேண்டியதாயிற்று.

*இன்னும் (கடும் பசியினால் கண் பஞ்சடைந்து அவர்களில்) ஒருவர் வானத்திற்கும் பூமிக்குமிடையே புகை போன்ற ஒன்றையே காண்பார்.*

*இந்நிலையில் அபூசுஃப்யான் வந்து, ''முஹம்மதே! நீர் எங்களிடம் உறவுகளைப் பேணுமாறு கட்டளையிட்டபடி வந்தீர். உம் சமுதாயத்தாரோ அழிந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே நீங்கள் (இந்தப் பஞ்சத்தை நீக்கும்படி) அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்'' என்று சொன்னார்.*

*அப்போது நபி (ஸல்) அவர்கள், ''(நபியே!) வெளிப்படையானதொரு புகை வானத்திலிருந்து வரும் நாளை நீங்கள் எதிர்பார்த்திருங்கள். மனிதர்களை அது சூழ்ந்து கொள்ளும். அது வதைக்கும் வேதனையாகும்'' என்று தொடங்கி ''மெய்யாகவே, (நீங்கள் உணர்வு பெறக்கூடுமென்று) அவ்வேதனையை இன்னும் சிறிது காலத்திற்கு நீக்கிவைத்தோம். எனினும் நீங்கள் (பாவம் செய்யவே) திரும்பச் செல்கிறீர்கள்'' என்பது வரையிலான (44:10-15) வசனங்களை ஓதிக்காட்டினார்கள். (நபி (ஸல்) அவர்களின் வேண்டுதலால் அவர்களைவிட்டுப் பஞ்சம் அகன்றுவிட்டாலும்) மறுமை வேதனை வந்தால் அது அவர்களைவிட்டு அகற்றப்படவாபோகிறது? (இல்லை. பஞ்சம் நீங்கிய) பிறகு மீண்டும் அவர்கள் இறைமறுப்புக்கே திரும்பி விட்டனர்.*

*இதைத்தான் அல்லாஹ், ''மிக பலமாக அவர்களை நாம் பிடிக்கும் நாளில் நிச்சயம் அவர்களிடம் பழிவாங்கியே தீருவோம்'' என்று (44:16 ஆவது வசனத்தில்) பத்ர் போரைக் குறிக்கும் வகையிலும் வ லிஸாமன் (தண்டனை உங்களை பிடித்தே தீரும்) என்று (25:77 ஆவது வசனத்தில்) அதே பத்ர் போரைக் குறிக்கும் வகையிலும் கூறுகிறான். மேலும், ''அலிஃப் லாம் மீம் (நபியே) (கிழக்கு) ரோமர்கள் அண்டை நாட்டில் (இப்போது) தோற்கடிக்கப்பட்டுவிட்டனர். (எனினும்) அவர்கள் இத்தோல்விக்குப்பின் சில ஆண்டுகளுக்குள்ளேயே வெற்றி*

*அடைவார்கள். என்றும் அல்லாஹ் கூறுகிறான். (30:1-3) இது முன்பே (நடந்து) முடிந்துவிட்டது.*

***நூல் : புகாரீ (4774)***

*இப்படி இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் இந்தப் புகைமூட்டம் நடந்துவிட்டது என்ற கருத்தில் உறுதியாக இருக்கிறார்கள்.*

*இரண்டாவது கருத்து: அல்லாஹ¬தஆலா குர்ஆனில் குறிப்பிடும் புகைமூட்டம் என்பது கியாமத் நாளின் நெருக்கத்தில் ஏற்படும் ஒரு நிகழ்வாகும் என்பது இப்னு அப்பாஸ் (ரலி), அபூசயீத் அல்குத்ரீ (ரலி) போன்றோரின் கருத்தாகும். இக்கருத்தில் உள்ள அறிஞர்கள் மேற்சொன்ன அந்த வசனத்தின் (44:10) மூலம் தங்கள் கருத்தை உறுதிப்படுத்துகிறார்கள். அதாவது அந்த வசனத்தில் அல்லாஹ¬தஆலா அந்தப் புகையைப் பற்றிக் கூறும்போது ''அது மனிதர்கள் அனைவரையும் சூழ்ந்து கொள்ளும்'' என்று தான் கூறியுள்ளான். இதிலிருந்து இது குறைஷிகள் சம்பந்தமாக பேச வில்லை என்பது தெளிவாகிறது.*

*அதேபோன்று அல்லாஹ் அந்த வசனத்தில் ''தெளிவானதொரு புகை'' என்று கூறியுள்ளான். எனவே அது எல்லோரின் பார்வைக் கும் தென்படக் கூடியதாக இருக்கும். ஆனால் குரைஷிகள் சம்பந்த மாக வந்திருப்பது என்னவென்றால் ''கடும்பசியின் காரணமாக கண்கள் பஞ்சடைந்து அவர்களில் ஒருவர் வானத்திற்கும் பூமிக்குமிடையே புகை போன்ற ஒன்றையே காண்பார்'' என்று தான் வந்துள்ளது. இது பசியின் காரணத்தால் அவர்களின் கண் களுக்கு அப்படித் தெரிந்தது. ஆனால் குர்ஆனில் கூறப்பட்டிருக் கும் புகை அது சாதாரணமாகவே மிகத் தெளிவானதாக இருக்கும்.*

*அடுத்ததாக இந்த கருத்துடைய சாரார் வைக்கும் இன்னொரு ஆதாரமாவது; இப்னு ஜரீர் (ரஹ்) அவர்கள் தன் வரலாற்று நூலில் ஒரு நிகழ்வை பதிவு செய்கிறார். அதில் இப்னு அபீ முலைகா என்ற தாபியீ கூறுகிறார். ஒரு நாள் காலையில் நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் என்னிடத்தில் நான் நேற்று இரவு முழுவதும் தூங்கவில்லை என்று*

கூறினார்கள். அதற்கான காரணத்தை நான் கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் மக்கள் அனைவரும் வாள் நட்சத்திரம் தென்பட்டுவிட்டது என்று பேசிக்கொள்கிறார்கள். இதைக்கேட்ட நான் அல்லாஹ் கூறிய புகைமூட்டம் வந்து விடுமோ என்ற பயத்தால் இரவு முழுவதும் தூங்கவில்லை என்று பதிலளித்தார்கள்.

இந்த அறிவிப்பின் மூலமும் புகைமூட்டம் நிகழவில்லை என்பது உறுதியாகிறது.

அதேபோன்று இந்த சாரார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹு¬தஆலா கூறிய வசனத்திற்கு விளக்கமாக அந்த புகை மூட்டத்தின் பாதிப்பை குறித்து எச்சரித்திருப்பதை தங்களின் ஆதாரமாக காட்டுகிறார்கள்.

உங்கள் இறைவன் உங்களுக்கு மூன்று விஷயங்களைப் பற்றி எச்சரிக்கிறான். அவற்றில் ஒன்று புகை மூட்டம். முஃமினை இப்புகை ஜலதோஷம் பிடிப்பது போல் பிடிக்கும் காஃபிரைப் பிடிக்கும் போது அவன் ஊதிப்போவான். அவனது செவிப்பரை வழியாகப் புகை வெளிப்படும். இரண்டாவது (அதிசயப்) பிராணி. மூன்றாவது தஜ்ஜால் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இந்த அறிவிப்பும் ஒரு குறிப்பிட்ட குழுவான குரைஷியர்களுக்கு மட்டும் ஏற்பட்ட பாதிப்பை குறிக்கவில்லை. மாறாக மறுமை நாளின் நெருக்கத்தில் ஏற்படக்கூடிய பாதிப்பை பற்றித்தான் பேசு கிறது. என்பதை தெளிவாகவே விளங்கலாம்.

எனவே இந்தப் புகைமூட்டம் என்ற நிகழ்வானது உலக அழிவின் சமீபத்தில் ஏற்படக்கூடியதாகும். குரைஷியர்களுக்கு ஏற்பட்டது ஒரு சிறிய நிகழ்வு தான். ஆனால் இனி நடக்கவிருப்பது பிரம்மாண்டமான நிகழ்வாக இருக்கும்.

## 8. சூரியன் மேற்கிலிருந்து உதிப்பது:

கியாமத் நாளின் மாபெரும் பத்து அடையாளங்களில் சூரியன்

மேற்கிலிருந்து உதிப்பதும் ஓர் அடையாளமாகும். உலகம் தோன்றியதிலிருந்து இது நாள் வரை கிழக்கிலிருந்து உதித்த சூரியன் கியாமத் நாளின் நெருக்கத்தில் மேற்கிலிருந்து உதய மாகும். இதுநாள் வரை கிழக்கே உதித்தது இனிமேல் மேற்கே உதயமாகப் போகிறது என்று இதை ஒரு சாதாரண நிகழ்வாக நினைத்து விடக்கூடாது. பூமியில் கிழக்கே உதித்து வரும் சூரியன் மேற்கே உதிக்க வேண்டுமானால் பூமி தன் சூழற்சியை திடீரென நிறுத்தி, உடனே எதிர்த்திசையில் சுழல வேண்டும். அப்போது தான் சூரியன் மேற்கிலிருந்து உதிக்க முடியும். இப்படி திடீரென பூமி தன் சுற்றை நிறுத்தி, திருப்பி சுத்த ஆரம்பிக்குமேயானால் உலகின் அமைப்பே சின்னாபின்னமாகிவிடும்.

## தவ்பாவின் இறுதி எல்லை:

உலக அழிவிற்கு முன் மனிதன் தன் வாழ்க்கையை திருத்திக் கொள்ள ஏகத்துவத்தை ஏற்றுக்கொள்ள பல வாய்ப்புகளையும் சந்தர்ப்பங்களையும் அல்லாஹ் ஏற்படுத்திக் கொண்டே இருக்கிறான். அந்த வாய்ப்புகளில் ஒன்று தான் இந்த கியாமத் நாளின் அடையாளங்கள் எனும் முன்னறிவிப்பாகும். இதுவரை சொல்லப்பட்ட அடையாளங்களைக் கண்டும் ஒருவர் ஈமான் (இறைநம்பிக்கை) கொள்ளவில்லையென்றால் அவரைவிட நஷ்டவாளி வேறுயாராக இருக்க முடியும். ஏனென்றால் அந்த அடையாளங்கள் அனைத்தும் மறைவான நம்பிக்கைக்கு அப்பாற் பட்டு, கண்கூடாகவே நடக்கும் உண்மைகளாகும். எனவே இந்த உண்மைகளைப் பார்த்து இதுவரை வழிகேட்டிலும், குஃப்ரிலும், ஷிர்கிலும் இருந்த மக்கள் சத்திய கொள்கையின் பக்கமும், ஏகத்துவத்தின் பக்கமும் பயணிக்க முன்வர வேண்டும். காரணம் இதுதான் தங்களின் வாழ்க்கையை மாற்றி அமைப்பதற்குண்டான கடைசி எல்லையாகும். இனி சூரியன் மேற்கிலிருந்து உதயமாகி விட்ட பிறகு ஈமான் கொள்வதினாலோ, தவ்பா செய்வதினாலோ எந்தப் பயனும் இருக்காது.

இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பல இடங்களில் எச்சரிக்கை செய்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''சூரியன் மேற்குத் திசையிலிருந்து உதயமாகாத வரை யுக முடிவு நாள் வராது. சூரியன் (மேற்குத்திசையில்) உதயமாகி மக்கள் அதைப் பார்க்கும் போது அவர்கள் அனைவருமே இறைநம்பிக்கை கொள்வார்கள். அது எந்த மனிதருக்கும் அவரது (அப்போதைய புதிய) இறைநம்பிக்கை பயனளிக்காத நேரமாகும்'' என்று கூறிவிட்டு ''உம்முடைய இறைவனின் சான்றுகள் சில வெளிப்படும் (யுக முடிவு) நாளில் முன்னரே இறைநம்பிக்கை கொள்ளாதிருந்த மனிதருக்கும் அல்லது இறைநம்பிக்கை கொண்டிருந்தும் அதற்கேற்ப நன்மை புரியாதிருந்த மனிதருக்கும் அவர் (அப்போது) இறைநம்பிக்கை கொள்வது எவ்விதப் பயனையும் அளிக்காது'' எனும் இந்த (6:158) ஆவது வசனத்தை ஓதினார்கள்.

**அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (4636)**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சூரியன் மேற்கிலிருந்து உதிப்பதற்கு (யுகமுடிவுக்கு) முன் யார் பாவமன்னிப்புக் கோரித்திருந்திவிடுகிறாரோ அவருடைய பாவ மன்னிப்புக் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (5236)**

பகலில் பாவம் செய்தோர் இரவில் தவ்பாச் செய்வதற்காக அல்லாஹுதஆலா தன் ரஹ்மத்துடைய கரத்தை இரவுமுழுவதும் விரித்து வைத்துக் கொண்டே இருக்கிறான். மேலும் இரவில் பாவம் செய்தோர் பகலில் தவ்பாச் செய்வதற்காக பகல் முழுவதும் தனது ரஹ்மத்துடைய கரத்தை விரித்து வைத்துக் கொண்டே இருக்கிறான். இந்த நிலை சூரியன் மேற்கில் உதயமாகும் வரை இருந்து கொண்டேயிருக்கும்!'' (இதன் பிறகு தவ்பா ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது) என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பவர் : அபூமூஸா அல் அஷ்அரீ (ரலி)**
**நூல்: முஸ்லிம் (5324)**

## 9. அதிசயப் பிராணி

மறுமைநாளின் மாபெரும் பத்து அடையாளங்களில் பூமியிலிருந்து

வெளிப்படும் ஒரு பிராணியும் ஒன்றாகும். இதுவரை நாம் குறிப்பிட்ட எட்டு அடையாளங்களும் தொடர்ச்சியாக அடுத்தடுத்து நடக்கக்கூடிய அடையாளங்களாகும். எனவே அந்த அடையாளங்களுக்கு மத்தியில் பெரிய இடைவெளி இருக்காது. அந்த வகையில் அடையாளங்களின் தொடர்ச்சியில் ஒன்பதாவது அடையாளமாக பூமியிலிருந்து ஒரு பிராணி வெளிப்படும். இது பற்றிய ஒரு முன்னறிவிப்பை அல்லாஹ்வே தன் திருமறையில் பதிவு செய்துள்ளான்.

*அவர்களுக்கு எதிரான (நமது) கட்டளை நிகழும் போது பூமியிலிருந்து ஓர் உயிரினத்தை வெளிப்படுத்துவோம். நமது வசனங்களை மனிதர்கள் உறுதிகொள்ளாமல் இருந்தது பற்றி அவர்களிடம் அது பேசும்.*

***அல்குர்ஆன் (27:82)***

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் இந்த பிராணி குறித்து நமக்கு எச்சரிக்கை செய்துள்ளார்கள்.

*முதலாவதாக வெளிப்படும் அடையாளம் சூரியன் மேற்கிலிருந்து உதயமாவதும். (பூமியிலிருந்து) ஒரு (அதிசயப்) பிராணி முற்பகல் நேரத்தில் வெளிப்படுவதும் ஆகும். இவ்விரண்டில் எது முதலில் வெளிப்பட்டாலும் மற்றொன்றும் அதைத் தொடர்ந்து வெகு விரைவில் வெளிப்பட்டுவிடும்.*

***அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி)***
***நூல்: முஸ்லிம் (5637)***

## தாப்பத் என்றால் என்ன?

இந்த அதிசயப் பிராணி சம்பந்தமாக குர்ஆனில் தாப்பத் என்று கூறப்பட்டுள்ளது. தமிழில் இந்த வார்த்தைக்கு உயிரினம், பிராணி, கால்நடை, விலங்கு போன்ற அர்த்தங்கள் உள்ளன. எப்படியிருந் தாலும் அது ஒரு விலங்கினத்தைத்தான் குறிக்கின்றது. அதுவும் சாதாரண ஒரு பிராணியாக இல்லாமல் மக்கள் காணாத ஒரு பிராணியாகவும் மக்களிடம் பேசக்கூடிய ஒரு பிராணியாகவும் அது இருக்கும்.

ஆனால் இந்த தாப்பத்திற்கு சிலர் வித்தியாசமான விளக்கங்களையும் கூறியுள்ளனர். அதாவது நூஹ் (அலை) அவர்களின் காலத்தில் அவர்களுக்கு அத்தாட்சியாக வந்த ஒட்டகத்தின் குட்டிதான் இந்த தாப்பத் என்று சிலர் கூறுகின்றனர். மற்றும் சிலர் தஜ்ஜாலுக்கு உளவாளியாக இருந்த 'ஜஸ்ஸாஸா' என்ற பிராணி தான் இந்த தாப்பத் என்று கூறுகின்றனர். இன்னும் சிலர் குரைஷிகளின் காலத்தில் கஃபாவில் இருந்த ஒரு பாம்பு தான் இந்த தாப்பத் என்று கூறுகின்றனர்.

ஆனால் இந்த கருத்துக்களுக்கு தெளிவான, ஆதாரப்பூர்வமான எந்த ஒரு அறிவிப்பும் கிடையாது என்பதால் இதை நாம் ஏற்கத் தேவையில்லை.

## எப்போது வெளிப்படும்?

நாம் மேல்சொன்ன ஹதீஸில் அந்தப்பிராணி முற்பகல் நேரத்தில் தான் வெளிப்படும் என்ற நேரநிர்ணயமும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள், மக்களிடத்தில் பாவங்கள் மலிந்து போய் கிடக்கும் சூழ்நிலையிலும் மேலும் மக்கள் சத்தியத்தை விட்டும் தடம்புரண்டு அசத்தியத்தில் பயணிக்கும் சமயத்திலும்தான் இந்தப் பிராணி வெளிப்படும் என்று கூறுகிறார்கள்.

## எங்கு வெளிப்படும்?

எந்த இடத்தில் இந்தப் பிராணி வெளிப்படும் என்பது குறித்து தெளிவான எந்த ஒரு அறிவிப்பும் இல்லை.

சிலர், மக்காவில் வெளிப்படும் என்று கூறுகின்றனர். சிலர், ஸஃபா மலையில் வெளிப்படும் என்று கூறுகின்றனர். சிலர், திஹாமாவுடைய கால்வாயிலிருந்து வெளிப்படும் என்று கூறுகின்றனர்.

## தாப்பத்தின் அமல்?

பூமியிலிருந்து வெளிப்படும் இந்த அதிசயப்பிராணி மக்களுக்கு

*முன் தோன்றி அவர்களுடன் பேசும். நமது (அல்லாஹ்வின்) வசனங்களை மனிதர்கள் உறுதி கொள்ளாமல் இருந்தது பற்றி அவர்களிடம் அது பேசும் என்று அல்லாஹ் தன் திருமறையில் கூறுகிறான்.*

*அதேபோன்று அந்தப் பிராணி வேறு என்ன பணிகளை செய்யும் என்று நபிமொழிகளில் பார்த்தால் முஃமினையும் காஃபிரையும் தரம்பிரிக்கக்கூடிய ஒரு பணியையும் அது செய்யும் என்று பல அறிவிப்புகளில் வருகின்றது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*(இந்த அதிசயப்) பிராணி வெளிப்பட்டு மக்களின் மூக்குகளில் அடையாளமிடும். அடையாளமிடப்பட்டவர்கள் உங்களுக்கு மத்தியில் கடந்து செல்வார்கள். எந்த அளவுக்கென்றால் ஒரு நபர் ஒரு ஒட்டகத்தை விலைக்கு வாங்கியிருப்பார். அவரிடம் இந்த ஒட்டகத்தை யாரிடமிருந்து வாங்கினீர்கள் என்று கேட்டால், மூக்கில் அடையாளமிடப்பட்டவர்களில் ஒருவரிடமிருந்து நான் வாங்கினேன் என்று பதிலளிப்பார்.*

***அறிவிப்பவர் : அபூஉமாமா (ரலி) நூல் : அஹ்மத் (21276)***

*இந்த அறிவிப்பை இமாம் அல்பானீ (ரஹ்) அவர்கள் ஸஹீஹான (தரமான) ஹதீஸ்களின் பட்டியலில் சேர்த்துள்ளார்கள். அதேபோன்று இதே கருத்தில் இன்னொரு அறிவிப்பும் வருகின்றது.*

*அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

*அந்தப் பிராணியுடன் மூஸா (அலை) அவர்களின் அஸாவும், சுலைமான் (அலை) அவர்களின் மோதிரமும் இருக்கும். தன் மோதிரத்தைக்கொண்டுகாஃபிருடையமூக்கில்அடையாளமிடும். அஸாவின் மூலம் முஃமினுடைய முகத்தைப் பிரகாசிக்கச் செய்யும், எந்தளவுக்கென்றால் உணவு மேஜையிடத்தில் அதனுடையவர்கள் ஒன்று கூடுவார்கள். ஏ முஃமினே! என இவன் அழைப்பான். ஏ காஃபிரே! என அவன் அழைப்பான்.*

***அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல் : அஹ்மத் (9966)***

இந்த ஹதீஸ் 'ஹஸன்' தரத்தில் அமைந்த அறிவிப்பு என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

## 10. பெரும் நெருப்பு

கியாமத் நாளின் மாபெரும் பத்து பெரிய அடையாளங்களில் இறுதியானது(தான்) இந்த பெரு நெருப்பு என்கிற நிகழ்வாகும். இந்த நெருப்பு யமன் நாட்டிலிருந்து ஆரம்பித்து உலகம் முழுவதும் பரவும். முதலில் இது சம்பந்தமான அறிவிப்புகளைப் பற்றி பார்ப்பதற்கு முன் அந்தக் காலக்கட்டத்தில் மக்களின் நிலை எவ்வாறிருக்கும் என்பதைப் பற்றியும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

அல்லாஹு<sup></sup>தஆலா கியாமத்தின் நெருக்கத்தில் முஸ்லிம்கள், நல்லோர்கள், கடுகளவு ஈமான் கொண்டோர்கள் என அனைத்து இறைநம்பிக்கையாளர்களையும் மரணிக்கச் செய்து விடுவான். இனி பூமியில் தீயவர்கள் மட்டுமே எஞ்சியிருப்பார்கள். அவர்கள் அல்லாஹ்வின் இத்தனை அத்தாட்சிகளைப் பார்த்த பிறகும் திருந்தாமல் நம்பிக்கை கொள்ளாமல் தங்களின் பழைய வழிகேட்டின் பக்கமே திரும்பிச் செல்வார்கள். எனவே, அவர்கள் மீண்டும் பழைய மதத்திற்கு திரும்புவார்கள். சிலை வணக்கத்தையும் கையிலெடுப்பார்கள்.

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுவதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (அறியாமைக் கால கடவுள் சிலைகளான) 'லாத்'தும் 'உஸ்ஸா'வும் வழிபாடு செய்யப்படாத வரை இரவும் பகலும் (இல்லாமற்)போகாது'' என்று கூறியதைக் கேட்டேன். நான் ''அல்லாஹ்வின் தூதரே! இணை கற்பிப்போர் வெறுத்தபோதிலும் எல்லா மார்க்கங்களை விட மேலோங்கச் செய்வதற்காக நல்வழியுடனும் உண்மை மார்க்கத்துடனும் அவனே தன் தூதரை அனுப்பினான் ''(9:33, 61:9) என அல்லாஹ் அருளிய போது, இந்த மார்க்கம் முழுமையடையும் என்றே நான் எண்ணிக் கொண்டிருந்தேன். (ஆனால் தாங்கள் வேறு விதமாகச் சொல்கிறீர்களே!)'' என்று கூறினேன்.

அதற்கு, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், (உண்மைதான்) விரைவில் அல்லாஹ் நாடிய அளவு இது நடக்கும். பிறகு அல்லாஹ் நல்ல காற்று ஒன்றை அனுப்புவான். அது யாருடைய உள்ளத்தில் கடுகுமணியளவு இறை நம்பிக்கை (ஈமான்) உள்ளதோ அந்த ஒருவரையும் கைப்பற்றிக்கொள்ளும். பிறகு எந்த நன்மையும் இல்லாதவர்களே (பூமியில்) எஞ்சியிருப்பர். அவர்கள் தம் மூதாதையரின் மார்க்கத்திற்கு திரும்பிச் சென்று விடுவர்'' என்று கூறினார்கள்.

**நூல்: முஸ்லிம் (5571)**

மேலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(நல்லோர்கள் இறந்த பிறகு) தீயவர்கள் மட்டுமே எஞ்சியிருப் பார்கள். அவர்களுக்கு நன்மை எது தீமை எது என்ற பாகுபாடு தெரியாது. (இந்த சமயத்தில்) ஷைத்தான் அவர்களிடத்தில் தோன்றி சிலை வணக்கத்தின் பால் அழைப்பு விடுப்பான். அவர் களும் அதை ஏற்று சிலைகளை வணங்க ஆரம்பிப்பார்கள்.

**அறிவிப்பவர்: உர்வா பின் மஸ்ஊத் (ரலி) நூல் : அஹ்மத் (6268)**

கியாமத் நாளின் நெருக்கத்தில் மக்கள் மீண்டும் இணைவைப்பின் பக்கம் திரும்புவார்கள் என்றும், மக்களிடம் நன்மை தீமை பற்றிய விழிப்புணர்வு அறவே இருக்காது என்பது பற்றியும் மேற்கூறிய ஹதீஸ்கள் நமக்கு விளக்குகின்றன. இந்த நன்மை தீமை பற்றிய பாகுபாடு இல்லாததின் காரணமாக மனிதன் எந்தளவுக்கு கெட்டவனாகிவிடுவானென்றால் வெட்ட வெளியில் கழுதை யைப் போன்று விபச்சாரம் செய்யக்கூடிய ஒரு இழிநிலையில் இருப்பான்.

இது குறித்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இந்நிலையில் அல்லாஹ் தூய காற்று ஒன்றை அனுப்புவான். அது அவர்களின் அக்குள்களுக்கு கீழே நுழைந்து அவர்களைப் பிடித்துக் கொள்ளும். இறைநம்பிக்கை கொண்ட ஒவ்வொரு முஸ்லிமின் உயிரையும் அது கைப்பற்றும். அதையடுத்து மக்களில் தீயவர்கள் (மட்டுமே பூமியில்) எஞ்சியிருப்பார்கள். அவர்கள் கழுதைகளைப்

போன்று (வெட்டவெளியில் வைத்துப் பகிரங்கமாக) உடலுறவு கொள்வார்கள். அவர்கள் மீது தான் உலக முடிவு நாள் ஏற்படும்.

**அறிவிப்பவர்: நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5629)**

மேற்கூறிய அறிவிப்பிலிருந்து கியாமத் நாள் என்பது மக்களில் தீயவர்கள் மீது தான் ஏற்படும் என்ற செய்தியும், அதற்கு முன் அல்லாஹ் ஒரு காற்றை அனுப்பி முஸ்லிம்கள் உயிர்களை கைப்பற்றிக் கொள்வான் என்ற செய்தியும் நமக்கு கிடைக்கிறது.

ஸஹீஹ் முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் அந்தக் காற்று எந்தப் பகுதியிலிருந்து வெளிப்படும் என்பது பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(மறுமை நாள் நெருங்கும்போது) யமன் நாட்டி(ன் திசையி)லிருந்து பட்டை விட மென்மையான ஒரு காற்றை அனுப்புவான். எவரது உள்ளத்தில் 'கடுகளவு' அதாவது 'அனுவளவு' இறை நம்பிக்கை உள்ளதோ அவ(ரது உயி)ரை அது கைப்பற்றிக் கொள்ளும்.

**அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம் (185)**

நாம் இதுவரை குறிப்பிட்ட ஹதீஸ்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்த இன்னொரு ஹதீஸுடன் பொருந்திப்போவதைப் பார்க்கலாம். அதாவது பூமியில் ''அல்லாஹ் அல்லாஹ் என்று சொல்வோர் இருக்கும் வரை மறுமை ஏற்படாது என்றும், பூமியில் ''அல்லாஹ் அல்லாஹ் என்று சொல்லப்படுவது நிறுத்தப்படாதவரை மறுமை ஏற்படாது'' என்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

அதாவது உலக அழிவின் நெருக்கத்தில் அல்லாஹ் என்ற வார்த்தையை உச்சரிக்கக்கூடிய எந்த ஒரு முஸ்லிமும் இருக்க மாட்டார். முழுக்க தீய மக்களே இருப்பார்கள். அவர்களின் மீதே உலக அழிவு ஏற்படும் என்பது கருத்தாகும். ஒரு முஸ்லிம் கூட இல்லாத பட்சத்தில் தான் இந்த தீயவர்கள் கஃபா என்கிற புனித

ஆலயத்தை தகர்க்கக்கூடிய வேலையில் ஈடுபடுவார்கள். காரணம், ஒரு முஸ்லிம் இருக்கும் வரை தவாஃப் (சுற்று) இருந்துகொண்டே இருக்கும். முஸ்லிம்கள் இல்லாத போது தான் அபீசீனியாவைச் சேர்ந்த மெலிந்த கால்களையுடைய கருப்பர்கள் இந்த கஃபாவை தகர்க்கும் செயலில் ஈடுபடுவார்கள்.

**நூல் : முஸ்லிம் (5578)**

இப்போது நாம் தலைப்பிற்கு வருவோம். அதாவது கியாமத் நாளின் பத்தாவது மற்றும் இறுதி அடையாளமாவது, யமன் நாட்டிலிருந்து ஒரு பிரம்மாண்டமான நெருப்பு உருவாகி, அது மக்கள் அனைவரையும் மஹ்ஷரின் பக்கம் ஒன்று சேர்க்கும் என்பது தான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(கியாமத் நாளின் பெரிய அடையாளங்களில்) இறுதியாக யமன் நாட்டிலிருந்து ஒரு நெருப்பு கிளம்பி மக்களை விரட்டிக்கொண்டு வந்து ஓரிடத்தில் வந்து ஒன்று கூட்டும்.

**அறிவிப்பவர் : ஹுதைஃபா (ரலி) நூல் : முஸ்லிம் (5558)**

ஸஹீஹ் முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில் (யமன் நாட்டிலுள்ள) அதன் பகுதியின் கடைக்கோடியிலிருந்து ஒரு நெருப்புக் கிளம்பி, மக்களை வாகனங்களில் ஏறிப் பயணம் புறப்படச் செய்யும் என்றும் வந்துள்ளது.

**அறிவிப்பவர் : அபூ சரிஹா ஹுதைஃபா பின் எசீத் (ரலி)**
**நூல் : முஸ்லிம் (5559)**

மேலும் இந்த பெரும் நெருப்பு எங்கிருந்து புறப்படும் என்பது சம்பந்தமாக வேறு சில அறிவிப்புகளும் வருகின்றது. திர்மிதியில் 'ஹள்ரமவ்த்' என்னும் ஊரின் கடலிலிருந்து வெளிப்படும் என்று வருகிறது. புகாரீயில் கிழக்கிலிருந்து ஆரம்பித்து மேற்கு வரை பரவும் என்றும் வருகிறது.

அடுத்து இந்த பிரம்மாண்டமான நெருப்பு உலகம் முழுவதும் பரவும் போது மக்களின் நிலை எவ்வாறிருக்கும் என்பதைப் பின்வரும் ஹதீஸ் நமக்கு விளக்குகிறது.

*(மறுமை நாள் ஏற்படுவதற்கு சற்று முன் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி) மக்கள் மூன்று பிரிவினராக ஒன்று திரட்டப்படுவார்கள். (அதில் முதல் பிரிவினர்) அச்சத்துடனும், ஆர்வத்துடனும் செல் வார்கள் (இரண்டாவது பிரிவினர்) (வாகனப் பற்றாக்குறையால் தாமதித்துப் பின்னர்) ஒரே ஒட்டகத்தின் மீது இரண்டு பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது மூன்று பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது பத்துப் பேராகச் செல்வார்கள்.*

*அவர்களில் எஞ்சியவர்(களே மூன்றாவது பிரிவினர் அவர்) களை (பூமியில் ஏற்படும் ஒரு பெரும்) நெருப்பு ஒன்று திரட்டும். அவர்கள் மதிய ஓய்வெடுக்கும் போதும், இரவில் ஓய்வெடுக்கும் போதும், காலை நேரத்தை அடையும் போதும் (இப்படி எல்லா நேரங்களிலும்) அந்தத் தீ அவர்களிடையே இருக்கும்*

***அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி) நூல் : புகாரீ (6522)***

*மேற்கூறிய ஹதீஸிற்கு இமாம்கள், இந்த பிரம்மாண்ட நெருப்பின் நோக்கம் மக்களை எரிப்பதோ வேதனைப்படுத்துவதோ அல்ல. மாறாக மக்கள் அனைவரையும் ஓரிடத்தில் ஒன்று சேர்ப்பது மட்டும் தான் நோக்கமாகும் என்று விளக்கமளித்துள்ளார்கள். மக்கள் ஒன்று சேர்க்கப்படும் இடம் ஷாம் நாடு என்று திர்மிதியில் ஒரு அறிவிப்பு வந்துள்ளது.*

*ஒன்று சேர்த்த பிறகு அல்லாஹ்வின் கட்டளையை ஏற்று வானவர் இஸ்ராஃபீல் (அலை) அவர்கள் சூரை ஊதுவார்கள். சூர் ஊதிய பிறகு உலகின் அமைப்பு நிலை குலைந்து அதிபயங்கரமான பேரழிவு உலகத்திற்கு ஏற்படும். உலகம் தன் சுழற்சியை அந்த ஒரு சூரோடு நிறுத்திக் கொள்ளும். இங்கிருந்து தான் கியாமத் நாள் ஆரம்பமாகும்.*

*இதுவரை நாம் சிறிய அடையாளங்களையும் பெரிய அடையாளங் களையும் பற்றி ஓரளவு தெரிந்துகொண்டோம். இதோடு கியாமத் நாளின் அடையாளங்கள் என்ற தலைப்பு நிறைவு பெறுகிறது. இதற்குப் பிறகு என்ன நடக்கும் என்றால், இரண்டாவது சூர் ஊதப்பட்டு மக்கள் அனைவருக்கும் உயிர் கொடுக்கப்பட்டு, தம்*

*மண்ணறைகளிலிருந்து எழுந்து மஹ்ஷர் மைதானத்தில் ஒன்று கூட்டப்படுவார்கள். பிறகு கேள்வி கணக்கு ஆரம்பமாகும். நல்லறங்கள் செய்தவர்களுக்கு சொர்க்கமும், தீமைகள் செய்தவர்களுக்கு நரகமும் கொடுக்கப்படும். மக்கள் அதில் நிரந்தரமாக தங்கியிருப்பார்கள்.*

*அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் முன்னறிவிப்புச் செய்த இந்த அடையாளங்களையெல்லாம் கண்கூடாகப் பார்க்கும் நாம், நம் வாழ்க்கையை சீராக்கி, நல்லறங்கள் செய்து மறுமையில் சொர்க்கம் செல்லக்கூடியவர்களாக அல்லாஹ் நம்மை ஆக்க வேண்டும் என்று அல்லாஹ்விடத்தில் பிரார்த்தனை செய்வோமாக!*

***ஆமீன்!***

